உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

கீதாரத்தினமும் சகல சாஸ்திரஸாரமுமாகிய

# சிவகீதை

மூலச்லோகமும்,

மருதூர்

பிரம்மஸ்ரீ-கணேசசாஸ்திரியாரவர்கள்

இயற்றிய தமிழ் வியாக்கியானமும்

இவை

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

சிவஸ்ரீ - கலியாணசுந்தர யதீந்திரரால்

பார்வையிடப்பட்டு,

மஹாஜன உபகாரசங்க உதவிக்காரியதரிசி

கா - ஜம்புலிங்க முதலியாரால்

சென்னை

பிரசிடென்ஸி பிரஸில்

பதிப்பிக்கப்பட்டன.

1916.

காபி ரைட்.]

[விலை ரூபா. 2.

உ

சிவமயம்,

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ சிவ கீதை.

## மூலமும் உரையும்.



### முதலாவது அத்தியாயம்.

ஸூதர்வாக்கியம்.

𑌅𑌥𑌾𑌤𑌸𑍍𑌸𑌂𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌶𑍁𑌦𑍍𑌧𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌦𑌮𑍍 ।
𑌅𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌨𑍍𑌮𑌹𑍇𑌶𑌸𑍍𑌯 𑌭𑌵𑌦𑍁𑌃𑌖𑌸𑍍𑌯𑌭𑍇𑌷𑌜𑌮𑍍 ॥

அதாதஸ்ஸம்ப்ரவக்ஷ்யாமி சுத்தகைவல்யமுக்திதம்
அநுக்ரஹாந்மஹேசஸ்ய பவதுக்கஸ்யபேஷஜம். (க)

வியாக்யானம்—சுத்த கைவல்யமுக்திதம் - சுத்தகைவல்லிய முக்தியையளிப்பதும், பவதுக்கஸ்ய-சம்சார துக்கத்திற்கு, பேஷஜம் - மருந்தானதுமான (சிவகீதையெனும் இரத்தினத்தை) மஹேசஸ்ய - மகேச்சுரனுகிய (சிவபெருமானது), அநுக்ரஹாத் - அருளால், ஸம்ப்ரவக்ஷ்யாமி - நன்குரைக்கின்றேன்.

பொழிப்புரை—சுத்தகைவல்லியமுத்தியை யளிப்பதூஉம், சம்சார துக்கத்திற்கு மருந்தானதூஉமான, சிவகீதையெனும் இரத்தினத்தைச் சிவபெருமானது அநுக்கிரகத்தினு லுரைக்கின்றேன்.

நுட்பம்—சூதவிருஷி சம்வாத உருவமாகவே வியாஸமாமுனிவர் புராணங்களை யியற்றியுள்ளார் ஆதலின், பாத்தும புராணத்துள் விளங்கும் சிவகீதையெனும் இந்நூலை யியற்றுவதிலும் சூதவிருஷி சம்வாத உருவமாகவே துடங்கிக்கொண்டனர். சுலோகத்தில் "அத" என்று ஆரம்பித்திருக்கும் சொல்லானது, சொன்மாத்திரையில் சிவகீதையெனு மிவ் வரிய பெரியநூலை யாரம்பித்தற்குரிய மங்களத்தைக் கூறுவதாகும். இங்கு "அத" சப்தத்திற்கு மங்களப்பொருட்படுந் தன்மையை,

பிரமாணம்—ஓ௦காரஶ்சாயஶ்ஶவஶ் உாவெ தளவ்ரஹ்ணஃவ ராா।
கண்ட௦ஹிக்வாவிநிய-டா தள தஸ்மா நா௦ஙஷிகாவ-ஹள

ஓங்காரஸ்சாதஸப்தஸ்சத்வாவேதௌபிரம்ஹணஃபுரா
கண்டம்பித்வாவிநிர்யாதௌ தஸ்மாந்மாங்களிகாவுபௌ.

ஓ௦ அய - என்ற இவ் விருசொற்களும் முன்பிரம்மனது கண்டத்தைப் பேதித்து வெளிவந்தனவாதலின், இவ் விரண்டும் மங்களார்த்தத்தை யுடையவைகளாம் என்னும் வியாசபகவான் வசனத்தாற் காண்க.

சுத்தகைவல்யம் ஐந்தாவது முத்தியாகும். இப் பரமுத்தியானது சிவபெருமானால் பேரருளுடன் கூறப்பட்ட சிவகீதையெனுமிவ் வரியநூலாலேயே பெறப்படுவதாம். இங்கு ஐவகைமுத்தியென்றது மற்ற வெம்மதத்தினும் கூறப்படவில்லை. இம் முக்தியைச் சொரூபமுத்தியெனவும் கூறுவதுண்டு. முத்தியினில் ஐந்துவகையும் இந் நூலிலேயே பதின்மூன்றாவ தத்தியாயத்தில் விரிவாக வுரைக்கப்படும். இச் சிவகீதையெனும் இரத்தினத்தைப் பிறப்பெனும் பிணிக்கு மருந்தென்றும் கூறினர். பிணி நீங்கிச் சுகிக்க மருந் துட்கொள்ளவேண்டிய தவசியம்போலச் சம்ஸார நீங்கிச் சுகிக்க விந்நூ லுபதேசம் அவசியமாம். இங்கு மூலத்தில் சிவகீதாரத்தினமென்று கூறுவிடினும், வடமொழியில் ஒன்றன்பாலாயுள்ள பெயருரிச் சொற்களால், இப் பெயர்ச்சொல்லை வருவித்துக் கொள்வதற்குரிய குறியிருத்தலால், இந்நூலுக் குரையியற்றிய வடமொழி யாசிரியர்களின் கூற்றிற்கிணங்க இச் சொல்லை வருவித்துப் பொருள் கூறப்பட்டது. அற்றேல் பிறப்பெனும் பிணிக்கு மருந்தென்று கூறியபடியால், மருந்துட்கொள்ளும் முறை வைத்தியருக்கே தெரியுமல்லாது மற்றையர் கூறுவது எவ்வித மொவ்வுமெனின், இவ் வாசங்கை நீங்கவே, சிவபெருமானது அருளால் கூறுகின்றேனென்று கூறலாயிற்று. இனிச் சிவனே சம்சார வைத்தியனென்பதை,

யசுர்வேத சதருத்திரீயம்.

அய்ஶ்ரவொ வஉயிவக்தா ப்ரயமொ தெஉவ்யொஹிஷக।
அத்யவோசததிவக்த்தா பிரதமோதைவ்யோபிஷக்

மாரு மொழியோனும் முதற்றேவனுமான வைத்தியனே கூறினான் என்பதினலறிக.

ஸ்லோகம்.

𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑍈𑌰𑍍𑌨 𑌦𑌾𑌨𑍈𑌸𑍍𑌤𑌪𑌸𑌾𑌪𑌿𑌵𑌾 ।
𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌂𑌲𑌭𑌤𑍇𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌃 𑌕𑌿𑌂𑌤𑍁𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑌕𑍇𑌵𑌲𑌮𑍍 ॥

*நகர்மணுமநுஷ்டானைர்ந தானைஸ்தபஸாபிவா*
*கைவல்யம்லபதேமர்த்ய: கிம்துஞ்ஞாநேநகேவலம்.* (உ)

வியாக்யானம்—*மர்த்ய: - மனிதன், கைவல்யம் - கைவல்ய முக்தியை, கர்மணும் - கருமங்களினுடைய, அநுஷ்டானை:-அநுஷ்டாநங்களால், நலபதே - அடைகிறதில்லை, தானை:- தானங்களாலும் ந - அல்ல, தபஸாஅபிவா - தவத்தினுலேயும், ந - அல்ல, கிம்து - மற்றெதனுலோவெனின், கேவலம் - தனித்த, ஞாநேந - ஞானத்தினுலேயே.*

பொழிப்புரை—*மனிதன் கருமங்களி னனுஷ்டானங்களாலும் ஈதல்களாலும் தவத்தினுலும் கைவல்யமென்னும் முக்தியை யடைகின்றனல்ல. பின் னெதனுலெனின் ஞானத்தினுலேயாம்.*

நுட்பம்—*கருமங்களின் அநுஷ்டானங்களால் என்றதனுல், சோதிஷ்டோமாதி வேள்விகளைச் செய்தலால் என்பது பெறப்பட்டது. இக் கருமங்களின் அநுஷ்டானங்களால் முக்தி கைகூடாதென்பதை,*

நாராயணீயா யாஜ்ஞிக் யுபநிடதம்.

பிரமாணம்—𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌨𑌪𑍍𑌰𑌜𑌯𑌾𑌧𑌨𑍇𑌨

*நகர்மணுநப்ரஜயாதநேந*

*கருமங்களாலும் சந்தானங்களாலும் பொருளாலும் அல்ல என்பதினுலறிக.*

*அற்றேல் கருமங்களைப்புரிதல் வேண்டுமென்று கூறும் மறைமொழிகள் அவலமோவெனின், அற்றன்று. எல்லாக் கருமங்களையும் சிவபெருமான் பொருட்டென்றே பயனைவிரும்பாது புரிந்தால் அவ் விறைவனது பிரஸாதம் சித்திக்கும். அவ் வருளால் சித்த மலந்துலையப் பின்னர் ஞானம்சித்திக்கும். ஆதலின் கருமங்களை நசுவரங்களான அவைகளின் பயன்களை விரும்பிப் புரிந்தால் ஞான ஹேதுவாகாதென்றேயறிக. ஈதல்களாலுமவ்விதமேயென்க.இவ்வௌகிகப்பயன்களை விரும்பிச் செய்யும் தவத்தாலு மங்ஙனமேயாம். ஞானத்தாலேயே கைவல்யமெனு முக்திகூடும். இத்தகைய ஞானம் சிவஞானமேயாம்.*

சுவேதாச்சுவதரோபநிடதம்

𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯𑍈𑌕𑌂𑌪𑌰𑌿𑌵𑍇𑌷𑍍𑌟𑌿𑌤𑌾𑌰𑌂 𑌈𑌶𑌂𑌤𑌂𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌅𑌮𑍃𑌤𑌾𑌭𑌵𑌨𑍍𑌤𑌿.

விஸ்வஸ்யைகம்பரிவேஷ்டிதாரம் ஈஶந்தஞ்ஞாத்வா அம்ருதாபவந்தி.

விசுவத்தை வியாபித்தவனும் ஏகனுமான அவ்வீசனை யறிந்து அமிருதராகின்றனர் என்பதனானும்,

அதர்வசிகோபநிடதம்.

𑌶𑌿𑌵𑌏𑌕𑍋𑌧𑍍𑌯𑍇𑌯𑌃 𑌶𑌿𑌵𑌙𑍍𑌕𑌰𑌃𑌸𑌰𑍍𑌵𑌮𑌨𑍍𑌯𑌤𑍍𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯

ஶிவஏகோத்யேயஶ் ஶிவம்கரஸ்ஸர்வமந்யத்பரித்யஜ்ய

சுபத்தை யளிப்பவன் சிவ னொருவனே. மற்றெல்லாவற்றையும் நீக்கி விடுத்துத் தியானிக்கத்தகுந்தவன் என்பதனானும்,

திருமந்திரத் திருமுறை.

சிவமான ஞானந் தெளியவொண் சித்தி
சிவமான ஞானந் தெளியவொண் முத்தி
சிவமான ஞானஞ் சிவபரத்தே யேகச்
சிவமான ஞானஞ் சிவானந்த நல்குமே.—என்பதனானும்,

சிவஞானசித்தியார் சுபக்ஷம்.

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண
நல்லவாக மஞ்சொல்ல வல்லவா மென்னு
மூனத்தா ரென்கடவ ரஞ்ஞா னத்தா
லுறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தா
னுனத்தா லதுபோவ தலர்கதிர்முன் னிருள்போ
லஞ்ஞானம் விடப்பந்த மறுமுத்தி யாகு
மீனத்தார் ஞானங்க ளல்லா ஞான
மிறைவனடி ஞானமே ஞான மென்பார்-என்பதனானுமறிக.

ஸ்லோகம்.

𑌰𑌾𑌮𑌾𑌯𑌦𑌣𑍍𑌡𑌕𑌾𑌰𑌣𑍍𑌯𑍇 𑌪𑌾𑌰𑍍𑌵𑌤𑍀𑌪𑌤𑌿𑌨𑌾𑌪𑍁𑌰𑌾 ।
𑌯𑌾𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾𑌶𑌿𑌵𑌗𑍀𑌤𑌾𑌖𑍍𑌯𑌾 𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌦𑍍𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌾𑌹𑌿𑌸𑌾 ॥

ராமாயதண்டகாரண்யே பார்வதீபதிநாபுரா
யாப்ரோக்தாஶிவகீதாக்யா குஹ்யாத்குஹ்யதமாஹிஸா (௩)

வியாக்யானம்—புரா - முன்னம், தண்டகாரண்யே - தண்டகாரணியமென்ற வனத்தின்கண், பார்வதிபதிநா - பார்வதிநாதனை

(சிவபெருமானால்), ராமாய-இராமன் பொருட்டு, சிவகீதாக்யா - சிவகீதையென்று பெயர்பெற்ற, யா - எந்த (பிரும்மவித்தையானது,) ப்ரோக்தா - கூறப்பட்டதோ, ஸா - அப் பிரும்மவித்தை, குஹ்யாத் - இரகசியத்திலும், குஹ்யதமாஹி - மிக்க இரகசியமன்றோ.

பொழிப்புரை—முன்னம் தண்டகாருணியமெனும் வனத்தின்கண் சிவபெருமானால் இராமன்பொருட்டுச் சிவகீதை யென்று பெயர் பெற்ற எந்தப் பிரும்மவித்தையானது கூறப்பட்டதோ அஃது இரகசியத்திலும் இரகசியமன்றோ.

நுட்பம்—முன் சிவஞானத்தாலேயே முக்தி கைகூடுமென்று கூறியபடி அச் சிவஞானம் சிவகீதையெனு மிவ் வரிய பெரிய நூலாலேயே நன்கு பெறக்கூடியது. ஆதலால் இவ் வரிய நூலின் மகிமையை நன் கறிவதற்கென இதன் தோற்றத்தின் தேசகாலங்களைக் குறிக்கின்றார். தண்டகாரணிய மென்றதினாலே மிக்கப் பரிசுத்தமான விடத்திலேயே இக் கீதை உபதேசிக்கத் தக்கதெனக் குறிக்கப்பட்டது. இராமனின் பொருட் டென்றதனால் இராமன் சிவபக்தியில் சிறந்தவராதலால் சிவபக்தி யுடையவருக்கே யிதை யுபதேசிக்க வேண்டும் என்பதும் பெறப்பட்டது. வால்மீகி ராமாயணத்தில் அத்ரபூர்வம் என்னும் வாக்கியம் இராமன் சிவப்பிரஸாத மெய்திய நலமும், ஸைவபச்யாமி என்னும் வாக்கியம் இராமன் அசுவமேதத்தால் சிவாராதனம் புரிந்தவாய்மையும், ஸ்ரீமதோ நீலகண்டஸ்ய என்னும் வாக்கியம் இராமன் சிவனரது திருவாணையைக் கடவாததன்மையும், க்ருதா:பிஷேக: என்னும் வாக்கியம் இராமன் சிவனரது அனுக்ரகத்தையும் சீதை பார்வதியாரது அனுக்கிரகத்தையும், லட்சுமணன் நந்தியம்பெருமானது அனுக்ரகத்தையு மடைந்தார்க ளென்பதையும், மஹாதேவப்ரஸாதாச்ச என்னும் வாக்கியம் தசரதனும் தாசரதியும் சிவானுக்கிரகமெய்தினரென்பதையும் தெரிவித்தலினால் இராமன் சிறந்த சிவபக்த சிரோமணி யென்பதிற்றட்டில்லை. இவ்விராமனின் மூலமூர்த்தியாகிய விண்டுவும் சிவபத்தியுடையாரே.

கூர்மபுராணம்.

பி—ம்-- [illegible]॥
[illegible] ॥
ஈஶாநஸ்ஸர்வவித்யாநாம் ஸஃவாதிகுருர்புதா:
தஸ்யஶிஷ்யோமகாவிஷ்ணு: ஸர்வஞ்ஞாநமஹோததி:

எல்லா வித்தைகளுக்கும் அதிபனுன அவனே ஆதிகுரு ஓ தேவர்களே! எல்லா வித்தைகளுக்கும் நிதியான மஹாவிஷ்ணு அவருக்குச் சிஷ்யர் என்பதனுனும்,

சிவபுராணம்.

𑌕𑍃𑌷𑍍𑌣𑌦𑍍𑌵𑍈𑌪𑌾𑌯𑌨𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍇𑌵𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ।
𑌕𑍋𑌹𑍍𑌯𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑌂𑌵𑍇𑌤𑍍𑌤𑌿𑌤𑌂𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥

க்ருஷ்ணத்வைபாயநஸ் ஸாக்ஷாத்விஷ்ணுரேவஸநாதநः
கோஹ்யந்யஸ்தத்வதோருத்ரம் வேத்திதம்பரமேஸ்வரம்

வியாஸபகவான் முன்னவராகிய விஷ்ணுவே. மற்ற எவன் எல்லாம் வல்லவனுன உருத்திரரை யுள்ளபடியறிவான் என்பதனுனும்,

யசுர்வேதம்.

𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑌿𑌤𑍍𑌥𑌾𑌪𑌰𑌮𑌸𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍

விஷ்ணுரித்தாபரமஸ்யவித்வாந்

இவனது தத்துவத்தை விஷ்ணுவே யறிவார் எனும் வசனத்தாலும் காண்க.

முன்னம் என்றதனுல் இராமாவதார காலத்திலென்றும், அதனுல் கிருஷ்ணவதார காலத்தில் அருச்சுனனுக் குபதேசித்த கீதைக்கு முதனூல் சிவகீதை யென்பது விசதமாகின்றது. சிவகீதை யெனும் பிரும்மவித்தை யென்பது, யாதுகாரணம்பற்றிக் கூறப்பட்டது எனின் சிவப்பிருமச் சொற்கள் ஒரு பொருளுடைய சொற்களாதலால் என்க. சுவேதாச்சுவதரோபநிடதம்.

𑌦𑍍𑌵𑍇𑌅𑌕𑍍𑌷𑌰𑍇𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑌰𑍇𑌤𑍍𑌵𑌨𑌨𑍍𑌤𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑍇𑌨𑌿𑌹𑌿𑌤𑍇𑌯𑌤𑍍𑌰𑌗𑍂𑌢𑍇 । 𑌕𑍍𑌷𑌰𑌂𑌤𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌹𑍍𑌯𑌮𑍃𑌤𑌂𑌤𑍁 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑍇𑌈𑌶𑌤𑍇𑌯𑌸𑍍𑌤𑍁𑌸𑍋𑌽𑌨𑍍𑌯𑌃 ॥

த்வே அக்ஷரேப்ரம்பரேத்வநந் தேவித்யாவித்யேநிஹிதே யத்ரகூடே, க்ஷரம்த்வவித்யாஹ்யம்ருதந்து வித்யாவித்யாவித்யே ஈஶதேயஸ்துஸோந்ய:.

பிரும்மயாயும் பரமாயும் அனந்தமாயும் உள்ள அக்ஷரனிடத்தில் வித்தையும் அவித்தையுமாகிய இரண்டும் இரகசியமாய் வைக்கப்பட்டன. அவித்தை க்ஷரம் வித்தையோவெனின்(அக்ஷர மல்லது அமிருதம். இவ்வித்தியா வித்தைகளை யெவன் ஆள்வோனே அவன் அந்நியனும்.

சுவேதாச்சுவதரோபநிடதம்.

𑌤𑌤𑌃 𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑌰𑌂𑌬𑍃𑌹𑌨𑍍𑌤𑌂 - 𑌈𑌶𑌂𑌤𑌂𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌅𑌮𑍃𑌤𑌾𑌭𑌵𑌨𑍍𑌤𑌿.

ததஃ பரம்ப்ரஹம்மபரம்ப்ரஹந்தம் - ஈஶந்தம்ஞாத்வா அம்ருதாபவதி.

பின்னர் பிரும்மமாயும் பரமாயும் யாண்டும் பரந்தவனும் ஆகிய அவ்வீசனை யறிந்து முக்தராகின்றார்கள் என்பதனானும்,

யசுர் நாராயணீயயாஜ்ஞிக் யுபநிடதம்.

𑌋𑌤𑌂𑌸𑌤𑍍𑌯𑌂𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂𑌕𑍃𑌷𑍍𑌣𑌪𑌿𑌙𑍍𑌗𑌲𑌮𑍍 ।
𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌰𑍇𑌤𑌂𑌵𑌿𑌰𑍂𑌪𑌾𑌕𑍍𑌷𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌯𑌵𑍈𑌨𑌮𑌃 ॥

ருதம்ஸத்யம்பரம்ப்ரம்ஹ புருஷம்க்ருஷ்ணபிங்களம்
ஊர்த்வரேதம்விரூபாக்ஷம் விஶ்வரூபாயவைநமஃ

ருதனும் சத்தியனும் பரம் பிரும்மமாயும் புருஷனும் கருநிறமும் பொன்னிறமும் பெற்றவனும் மேனோக்கிய ரேதனும் விருபாக்ஷனும் உள்ள விசுவரூபனுக்கு நமஸ்காரம் என்பதனானும்,

அதர்வசிரோபநிடதம்.

𑌅𑌥 𑌕𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌚𑌾𑌰𑍍𑌯𑌮𑌾𑌣 𑌏𑌵𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑌿𑌬𑍍𑌰𑌂𑌹𑌯𑌤𑌿𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌃.

அத கஸ்மாதுச்யதேபரம்ப்ரம்ஹ யஸ்மாதுச்சார்யமாண ஏவப்ரஹ்மதிப்ரம்ஹயதிதஸ்மா துச்யதேபரம்ப்ரம்ஹ.

எதனால் பரப்பிரம்மமென்று கூறப்படுகின்றது. உச்சாரணமாத்திரத்தில் எங்கும் பரந்த பிரும்மத்தினிடம் அடையச் செய்கின்றபடியால், பரம்பிரும்மமென்று கூறப்பட்டது. என்பதனானும்,

அதர்வசிகோபநிடதம்.

𑌰𑍁𑌦𑍍𑌰𑌸𑍍𑌸𑌭𑌗𑌵𑌾𑌨𑍍𑌯𑌶𑍍𑌚𑌬𑍍𑌰𑌹𑍍𑌮

ருத்ரஸ்ஸபகவாந்யஶ்சப்ரம்ஹ

எவன் பிரும்மமோ அப்பகவன் உருத்திரனே.

𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑌤𑍀𑌤𑌿𑌬𑍍𑌰𑌹𑍍𑌮

ஸர்வாணிப்ரம்ஹயதீதிப்ரம்ஹ

எல்லாவற்றையும் பரவச்செய்தலுடன் கூடியவனுதலின் பிரும்மம் என்பதனுனும்,

ஸ்ரீகண்டபாஷியம்.

𑌸𑌕𑌲𑌨𑌿𑌗𑌮𑌸𑌾𑌰𑌸𑌾𑌮𑌰𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑌾𑌨𑌸𑍍𑌯, 𑌭𑌵𑌶𑌿𑌵𑌶𑌰𑍍𑌵𑌪𑌶𑍁𑌪𑌤𑌿 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌰𑍁𑌦𑍍𑌰 𑌶𑌂𑌭𑍁𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿 𑌪𑌰𑍍𑌯𑌾𑌯𑌵𑌾𑌚𑌕 𑌶𑌬𑍍𑌦𑌸𑌾𑌰𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌤 𑌪𑌰𑌮𑌮𑌹𑌿𑌮𑌵𑌿𑌲𑌾𑌸𑌸𑍍𑌯, 𑌸𑍍𑌵𑌶𑍇𑌷𑌭𑍂𑌤𑌨𑌿𑌖𑌿𑌲𑌚𑍇𑌤𑌨 𑌸𑌮𑍁𑌪𑌾𑌸𑌨𑌾𑌨𑍁𑌗𑍁𑌣𑌸𑌮𑍁𑌦𑌿𑌤 𑌨𑌿𑌜𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌸𑌮𑌰𑍍𑌪𑌿𑌤 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌸𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯, 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 .

ஸகலநிகமஸாரஸாமரஸ்யநிதாநஸ்ய, பவஶிவஶர்வ பஶுபதி பரமேஶ்வர மஹாதேவருத்ர ஶம்புபிரபிருதி பர்யாயவாசக ஶப்த ஸாரபிரகாஶித பரமமஹிமவிலாஸஸ்ய, ஸ்வஶேஷபூத நிகிலசேதந ஸமுபாஸநாநு குணஸமுதித நிஜபிரஸாதஸமர்பித புருஷார்த்த ஸார்த்தஸ்ய, பரப்ரம்ஹணஃ.

சகலவேத சாரசமரஸத் தன்மையிருப்பிடமாக விருப்பவனும், பவசிவசர்வ பசுபதி பரமேச்சுர மகாதேவ ருத்திரசம்பு என்பதாதி பர்யாயச் சொற்சாரத்தால் விளங்கிய வரியமகிமை விளக்கத்தை யுடையோனும், தனக்குள்ளடங்கிய சகல சேதனர்களது உபாசனைக் கிணங்கத் தோன்றிய தனது திருவருளால் கொடுக்கப்பட்ட புருஷார்த்தத்தை யுடையோனுமாகிய பரப்பிரும்மத்தினது. என்பதனுனும் காண்க.

இரகஸ்யத்திலும் ரகசியமென்றது.

பகவத்கீதை.

𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌹𑍃𑌦𑍍𑌦𑍇𑌶𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 ।
𑌭𑍍𑌰𑌾𑌮𑌯𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍂𑌢𑌾𑌨𑌿 𑌮𑌾𑌯𑌯𑌾 ॥

𑌤𑌮𑍇𑌵𑌶𑌰𑌣𑌂𑌗𑌚𑍍𑌛 𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌵𑍇𑌨𑌭𑌾𑌰𑌤 ।
𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍𑌪𑌰𑌾𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 ॥

ஈஶ்வரஸ்ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேர்ஜுநதிஷ்டதி
ப்ராமயந்ஸர்வபூதாநி யந்த்ராரூடாநிமாயயா

தமேவஶரணங்கச்ச ஸர்வபாவேநபாரத
தத்ப்ரஸாதாத்பராம்ஶாந்திம் ஸ்தாநம்ப்ராப்ஸ்யஸிஶாஶ்வதம்

பகவத்கீதை.

ஓ அருச்சுனா மாயையாகிய யந்திரத்தையடைந்த எல்லாப் பிராணிகளையும் பிரமிக்கச்செய்துகொண்டு எல்லாப் பிராணிகளின் இருதயத்தில் எந்த வீச்சுரன் இருக்கின்றானோ அவனையே எல்லாத் தன்மையாலும் சரணமடைவாயாக. ஓ பாரத, அவனருளாலேயே மேலாகிய சாந்தியையும் அழிவற்ற பதத்தையு மடைவாய்.

என்பதாதியரிய சிவமஹிமைகளைக் கூறும் வாக்யங்களடங்கிய பகவற்கீதையே இரகசியமென்னப்படும். இதனினும் இரகசியமாயுள்ளது பக்தியோகம், விரசாதீக்கை, சிவப்பிராதுர்ப்பாவம், விபூதி விஸ்தாரயோகம், விசுவரூபதர்சனயோகம், உபாஸனைவிதி, பிரஸாதம் அல்லது திருவருட்சிறப்பு, மோக்ஷயோகம், பஞ்சகோச உபாசனை முக்தியோகம் என்ற வரிய தத்துவரகசியங்கள் சிவகீதையெனும் மிவ் வரிய நூலிலேயே கூறப்படுகின்றனவாதலின் இது இரகசியத்தினும் இரகசியமென்பது நன்கோவ்வு மென்க. இவ் வரிய நூலைத் தக்கபரிபாகிகளுக்கே யுபதேசிக்க வேண்டுமென்னும் அறிக.

ஸ்லோகம்.

𑌯𑌸𑍍𑌯𑌾𑌃𑌸𑍍𑌮𑌰𑌣𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌨𑍃𑌣𑌾𑌂𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌾𑌹𑌿𑌸𑌾 ।
𑌪𑍁𑌰𑌾𑌸𑌨𑌤𑍍𑌕𑍁𑌮𑌾𑌰𑌾𑌯 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑍇𑌨𑌾𑌭𑌿𑌹𑌿𑌤𑌾𑌹𑌿𑌸𑌾 ॥ (௩)

யஸ்யாஸ்ஸமரணமாத்ரேண ந்ருணாம்முக்த்ருதுவாஹிஸா
புராஸநத்குமாராய ஸ்கந்தேநாபிஹிதாஹிஸா

வியாக்யானம்—யஸ்யா: - எந்தக் கீதையினது, ஸ்மரணமாத்ரேண - நினைத்த மாத்திரத்தில், ந்ருணாம் - மனிதருக்கு, த்ருவா - நித்தியமான, ஸா - முற்கூறிய கைவல்யமென்ற, முக்தி:ஹி - முக்தி ஸித்திக்கின்றதன்றோ, ஸா - அந்தக் கீதையானது (சிவகீதையானது), ஸ்கந்தேன - கந்தபகவானால், புரா - முன்னம், ஸநத்குமாராய - சநத்குமாரரின் பொருட்டு, அபிஹிதா-கூறப்பட்டது.

பொழிப்புரை—எந்தக் கீதையை நினைத்தமாத்திரத்தில் மனிதருக்கு சத்யமான முற்கூறிய கைவல்யமெனும் முக்தி சித்திக்கின்றதோ. அச் சிவகீதையே கந்தபகவானால் முன்னம் சநத்குமாருக்குபதேசிக்கப்பட்டது,

நுட்பம்—இங்கு நினைத்தமாத்திரத்தி லென்றதனால் இக்கீதையின் மஹிமை விளக்கப்பட்டது. இக் கீதையிற் சிவபெருமானது அருள் மிக்கப் பாலிக்கப்பெற் றிருக்கின்றமையின் இது ஞானத்தையளித் துக் கைவல்யமெனும் முக்திக் காளாக்குகின்றதென்பதையறிக. சிவ பெருமானது திருவருளாலேயே முக்தியேதுவானஞானம் நிகழும்.

சுவேதாச்சுவதரோபநிடதம்

பிரமாணம்—யொ தெவாநாம் ப்ரபவஸ்சொத்பவஸ்ச விஸ்வாதிகொ ருத்ரொ மஹர்ஷி: । ஹிரண்யகர்பம் பஸ்யத ஜாயமாநம் ஸநொ புத்த்யா ஸுபயா ஸம்யுநக்து ॥

யோதேவாநாம்பிரதமம்புரஸ்தாத்விஸ்வாதிகோரத்ரோமஹர்ஷி: - ஹிரண்யகர்பம்பஸ்யதஜாயமாநம் ஸநோபுத்யாசுபயா ஸம்யுநக்து

எல்லாவற்றிற்கு மேலோனும் மகருஷியாயு முள்ள எந்த உருத்திரன் தேவருள் முதலோனும் எதிரில் தோன்றுகின்றவனுமான இரண்யகர்ப்பனைப் பார்த்தானோ, அத்தேவன் நமக்குச் சுபமான ஞானத்தை யளிக்கட்டும்.

மாண்டூக்கியோபநிடதகாரிகை.

நிவ்ருத்தெஸ்ஸர்வது:காநா மீஸாந:ப்ரபுரவ்யய: ।

நிவ்ர்தேஸ்ஸர்வது:காநா மீஸாந:பிரபுரவ்யய:

எல்லாத் துக்கங்களையும் துலைக்க அவ்வியயனான ஈசானனே சக்தியுடையவன்.

சிகரிணீமாலை.

ஸுகம் தத்ப்ராக்ர்யம் நிரதிஸயமப்ராக்ருதமபி ப்ரஸாதாயத்தம் தெ கலுபவமஹாரொகபிஷஜ: । உபாயொ த்ரஜ்ஞாநம் கலு ஸிவவிஸிஷ்டாத்மவிஷயம் ப்ரஸாதெ ஸத்யெவ த்ரிபுரஹர தத்ஸம்பவதி ॥

ஸுகம் தத்பூமாக்யம்நிரதிஸயமப்ராக்ருதமபிபிரஸாதாயத்தம் தேகலுபவமஹாரோகபிஷஜ: - உபாயோத்ரஜ்ஞாநம்கலு ஸிவவிஸிஷ்டாத்மவிஷயம்பிரஸாதே ஸத்யேவதிரிபுரஹரதே தச்சபவதி

அலௌகிகமும் அழிவற்றதும் அகண்டமுமான அச் சுகமானது பிறப்பெனும் பெரும்பிணியைத் தீர்க்கும் வைத்தியரான தங்க

ளது அருளுக்கு வசமன்றே. இதற் குபாயம் சுத்தான்மஞான மன்றே. ஓ திரிபுரஹரனை சிவனே அத்தகையஞானமும் தங்களது திருவருள்தோன்றியகாலத்தே சித்திப்பதாம்.

கந்தபகவானல் சனற்குமாரருக் கென்றதனல், குருசிஷ்யபரம் பரையாகவே இந்நூல் வெளியிடவேண்டு மென்பதாயிற்று.

திருமந்திரத் திருமுறை.

வரும்வழி போம்வழி மாயா வழியைக்
கருவழிக் கண்டவர் காணு வழியைப்
பெரும்வழி யாநந்திப் பேசும் வழியைக்
குருவழி யேசென்று கூடலு மாமே.—என்பதனனுமறிக.

ஸ்லோகம்.

𑌸𑌨𑌤𑍍𑌕𑍁𑌮𑌾𑌰𑌃 𑌪𑍍𑌰𑍋𑌵𑌾𑌚 𑌵𑍍𑌯𑌾𑌸𑌾𑌯 𑌮𑍁𑌨𑌿𑌸𑌤𑍍𑌤𑌮𑌾𑌃 ।
𑌮𑌹𑍍𑌯𑌂 𑌕𑍃𑌪𑌾𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 𑌪𑍍𑌰𑌦𑌦𑍌 𑌬𑌾𑌦𑌰𑌾𑌯𑌣𑌃 ॥ (௫)

ஸநத்குமாரःப்ரோவாச வ்யாஸாயமுநிஸத்தமாः
மஹ்யம்க்ருபாதிரேகேண ப்ரததௌபாதராயணः

வியாக்யானம்—மூநிஸத்தமாः-ஓ முனிவரர்களே, ஸநத்குமாரः சனத்குமாரர், வ்யாசாய - வ்யாஸருக்கு ப்ரோவாச - உபதேசித்தார், பாதராயணः - வ்யாஸர், க்ருபாதிரேகேண - கருணேயின்மிகுதியால், மஹ்யம் - என்பொருட்டு ப்ரததௌ - அளித்தனர்.

பொழிப்புரை—ஓ முனிவர்களே சனத்குமாரர் வியாஸருக் குபதேசித்தனர். வியாஸர் கருணேயின்மிகுதியினல் என்பொருட் டளித்தனர்.

நுட்பம்—இதனல் எவற்றையும் குருவழியே யறியவேண்டு மென்று கூறியதாயிற்று.

திருமந்திரம்.

குருவென் பவனே வேதாகமங் கூறும்
பரவின்ப னகிச் சிவயோகம் பாவித்
தொருசிந்தை யின்றி யுயர்பாச நீக்கி
வருநல் குரவன்பால் வைக்கலு மாமே.

கடவல்லியோபநிடதம்.

பிரமாணம்—𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌵𑌰𑌾𑌨𑍍𑌨𑌿𑌬𑍋𑌧𑌤 (ப்ராப்யவராந்நிபோததः) பெரியோர்களேயடைந்து அறியுங்கள்.

கநநூவெூாகெூஜதிரதூநாஸி (அநந்யப்ரோக்தேகதி ரத்ரநரஸ்தி) - மற்றவர் உபதேசிக்காவிடில் கதி யிங்கில்லை என்ப தாதி வாக்கியங்களாற் காண்க.

ஸ்லோகம்.

உக்ஷ்ஂவெதநகஸெஜ்ஷ விநஷாதவ்ஜிஷஂக்ஷ்வயா
ஸூதவுத்ராநூயாஜெஷவாஃ க்ஷூஹூஂதிவஶவஂதிவ ॥ (௬)
உக்தம்சதேநகஸ்மை சிந்ததாதவ்யமிதந்த்வயா
ஸூதபுத்ராந்யதாதேவாஃ க்ஷுப்யந்திசபந்திச

வியாக்யானம்—தேந - அவரால் அவ்வியாஸபகவானால், உக்தம்ச - கூறப்பட்டதாவது, ஸூதபுத்ர - ஓ சூதபுத்திரனே, த்வயா உன்னால், இதம் - இக்கீதையானது, கஸ்மைசித் - எவருக்காவது (பரிபாகமற்ற எவனுக்காவது), தாதவ்யம் - கொடுக்கக்கூடியது, ந - அல்ல, அந்யதா - அல்லாவிடில், தேவாஃ - தேவர்கள், க்ஷுப் யந்தி - கலக்கமுறுவார்கள், சபந்திச - சபிப்பார்கள்.

பொழிப்புரை—அவ் வியாஸபகவானால் கூறப்பட்டதாவது, ஓ சூதபுதல்வனே உன்னால் இக்கீதையானது பரிபாகமற்ற எவனுக் காவது உபதேசிக்கக்கூடியதல்ல. அங்ஙனமல்லாது உபதேசித்தால் தேவர்கள் கலக்கமுறுவார்கள் அன்றியும் சபிப்பார்கள்.

நுட்பம் — இக் கீதையானது அபக்குவர்க்கு உபதேசிக்கப் படாது. அபக்குவராவா,

திருமந்திரம்.

மன்னுமல மைந்து மாற்றும் வகையோரான்
றுன்னிய காமாதி தோயுந்தொழி னீங்கான்
பின்னிய பொய்யன் பிறப்பிறப் பஞ்சாதா
னன்னிய னவ னசற்சீட னாமே.—என்றதனாற்காண்க.

இனிப் பரிபாக மற்றவருக்கு இக்கீதையை யுபதேசித்தால் தேவர்கள் சபிப்பதேன் எனின் அதன் காரணத்தைப் பின் கூறு கின்றார்.

ஸ்லோகம்.

கயவநஷெூஜயாவிஷூா ஹஜவாநுவாஷராயணஃ।
ஹஜவநுஷெவதாஸவஹாஃ கிஂக்ஷுஹூநிஶவநிவ ॥ (எ)

அதப்ருஷ்டோ மயா விப்ராः பகவாந்பாதராயணः
பகவந்தேவதாஸ்ஸர்வாः கிம்க்ஷுப்யந்திஶபந்திச

வியாக்யானம்—விப்ராः - விப்பிரர்களே, அத - பிறகு, பகவான்-பகவானான, பாதராயணः-வியாஸர், மயா-என்னால், ப்ருஷ்டः-கேட்கப்பட்டார், பகவன் - ஓபகவனே, ஸர்வாः தேவதாः - எல்லாத் தேவர்களும், கிம் - ஏன், க்ஷுப்யந்தி - கோபம் கொள்கின்றனர், ஶபந்திச - ஏன் சபிக்கின்றனர்.

பொழிப்புரை—ஓ விப்பிரர்களே பிறகு பகவானான வியாஸர் என்னால் கேட்கப்பட்டார் ஆதாவது எல்லாத் தேவர்களும் ஏன் கோபிக்கின்றார்கள் ஏன் சபிக்கின்றார்கள்.

ஶ்லோகம்.

तासामत्रास्ति का हानिर्यया क्षुभ्यन्ति देवताः ।
पाराशर्योऽथ मामाह यत्पृष्टं शृणु वत्सल ॥ (அ)

தாஸாமத்ராஸ்திகா ஹாநிர்யயாக்ஷுப்யந்திதேவதாः
பாராஶர்யோதமாமாஹ யத்ப்ருஷ்டம்ஶ்ருணுவத்ஸல

வியாக்யானம்—தேவதாः - தேவர்கள், யயா - எதனால் (எந்தக் கீதை யுபதேசத்தால்,) க்ஷுப்யந்தி - கோபிக்கின்றனரோ, அத்ர - இக்கீதை யுபதேசத்தில், தாஸாம் - அத்தேவர்களுக்கு, ஹாநிः - கெடுதி, காஅஸ்தி - யாதுளது, அத - பிறகு, பாராசர்யः - வியாஸர், மாம் - என்னை, (நோக்கி) ஆஹ - கூறினர், வத்ஸல - ஓ வச்சலனே யத் - யாதொன்று, ப்ருஷ்டம் - (உன்னால்) கேட்கப்பட்டதோ, தத் - அதை, ச்ருணு - கேட்பாயாக.

பொழிப்புரை—தேவர்கள் யாதொரு கீதை யுபதேசத்தால் கோபிக்கின்றனரோ, அக்கீதை யுபதேசத்தில் அவர்களுக்குக்கெடுதி யாதுளது. அதற்கு வியாஸர் எனக்குரைத்ததாவது. ஓ வச்சலனே யாதொன்று உன்னால் வினவப்பட்டதோ அதைக் கேட்பாயாக.

ஶ்லோகம்.

नित्याग्निहोत्रिणो विप्राः सन्ति ये गृहमेधिनः ।
त एव सर्वफलदाः सुराणां कामधेनवः ॥ (கூ)

நித்யாக்நிஹோத்ரிணோ விப்ராஸ்ஸந்தியேக்ருஹமேதிநः
தஏவஸர்வபலதாஸ்ஸுராணாங்காமதேநவः

வியாக்யானம்—க்ருஹமேதிந꞉ - கிருஹஸ்தாச்ரமிகளான, யே விப்ரா꞉ - எந்த அந்தணர்கள், நித்யாக்நிஹோத்ரிண꞉ - நியதமாய் அக்நிஹோத்திரம் செய்கின்றவர்களாய், ஸந்தி - இருக்கின்றனரோ தே, ஏவ - அவர்களே, ஸுராணும் - தேவர்களுக்கு, ஸர்வபலதா꞉ - எல்லாப் பலன்களையும் கொடுக்கும், காமதேநவ꞉ - காமதேனுக்களாம்.

பொழிப்புரை—கிருஹஸ்தாச்ரமிகளான, எந்த வந்தணர்கள் நியதமாய் அக்நிஹோத்திரம் செய்கின்றவர்களா யிருக்கின்றனரோ, அவர்களே தேவர்களுக்கு எல்லாப் பயன்களையும் கொடுக்கும் காமதேனுக்களாம்.

நுட்பம்—இங்குக் கருமிகள்செய்யும் வேள்விகள் தேவர்களுக்கு நல்லுணவாதலின் எல்லாப் பயன்களையும் கொடுக்கும் காமதேனுக்கள் என்று சிறப்பித்துக் கூறப்பட்டதறிக.

ஶ்லோகம்.

𑌭𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌭𑍋𑌜𑍍𑌯𑌂 𑌚 𑌪𑍇𑌯𑌂 𑌚 𑌯𑌦𑍍𑌯𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌸𑍁𑌪𑌰𑍍𑌵𑌣𑌾𑌮𑍍 ।
𑌅𑌗𑍍𑌨𑍌 𑌹𑍁𑌤𑍇𑌨 𑌹𑌵𑌿𑌷𑌾 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 𑌦𑌿𑌵𑌿 ॥ (௰)

பக்ஷ்யம்போஜ்யம்சபேயம்ச யத்யதிஷ்டம்ஸுபர்வணாம்
அக்நௌஹுதேநஹவிஷா தத்ஸர்வம்லப்யதேதிவி

வியாக்யானம்—பக்ஷ்யம் - புசிக்கப்படுவதும், (கலத்திலிடாது புசிக்கப்படுவதும்,) போஜ்யம்ச - கலத்திலிட்டுப் புசிக்கப்படுவதும், பேயம்ச - அருந்தப்படுவதுமான, யத் யத் - யாது யாது, ஸுபர்வணும் - தேவர்களுக்கு, இஷ்டம் - விரும்பப்படுகின்றதோ, தத் - ஸர்வம் - அஃதெல்லாம், அக்நௌ - நெருப்பில் ஹுதேந - ஓமஞ்செய்யப்பட்ட, ஹவிஷா - அவிர்ப்பாகத்தால், திவி - தேவலோகத்தில், லப்யதே - அடையப்படுகின்றது.

பொழிப்புரை—கலத்திலிடாது புசிக்கப்படுவதும் கலத்திலிட்டுப் புசிக்கப்படுவதும் அருந்தப் படுவதுமாகிய யாது யாது தேவர்களால் விரும்பப்படுகின்றதோ அவையெல்லாம் நெருப்பில் ஓமஞ் செய்யப்பட்ட அவிர்ப்பாகத்தால் தேவலோகத்தில் அடையப்படுகின்றது.

ஸ்லோகம்.

நாந்யத³ஸ்தி ஸுரேஶாநா மிஷ்டஸித்³தி⁴ப்ரத³ந்தி³வி ।
தோ³க்³த்⁴ரீதே⁴நுர்யதா²நீதா து³:க²தா³க்³ருஹமேதி⁴நாம் ॥ (கக)

நாந்யதஸ்திஸுரேஶாநா மிஷ்டஸித்திப்ரதந்திவி
தோக்த்ரீதேநுர்யதாநீதா து:க்கதாக்ருஹமேதிநாம்

வியாக்யானம்—ஸுரேசாநாம் - தேவர்களுக்கு, திவி - சொர்க்கத்தில், இஷ்டஸித்திப்ரதம் - விரும்பப்பட்டதைச் சாதித்துக் கொடுப்பது, அந்யத் நாஸ்தி - மற்றதில்லை, யதா - எங்ஙனம், தோக்த்ரீ - நற்கரவையுள்ள, தேநு: - பசுவானது, நீதா - (மற்றவர்களால்) கைப்பற்றப்பட்டதாயின், க்ருஹமேதிநாம் - கிருஹஸ்தர்களுக்கு, துக்கதா - துக்கத்தைக் கொடுப்பதோ.

பொழிப்புரை—தேவர்களுக்குச் சொர்க்கத்தில் விரும்பப்பட்டதைச் சாதித்துக் கொடுப்பது மற்றேதுமில்லை. எங்ஙனம் நற்கரவையுள்ள பசு மற்றவரால் கவரப்படின் கிரகஹ்தர்களுக்குத் துக்கத்தின் பொருட்டாகின்றதோ.

ஸ்லோகம்.

தத²வ ஜ்ஞாநவாந்விப்ரோ தே³வாநாந்து³:க²தோ³ப⁴வேத் ।
த்ரித³ஶாஸ்தேந விக்⁴நந்தி ப்ரவிஷ்டா விஷயந்ந்ருணாம் ॥ (கஉ)

ததைவஜ்ஞாநவாந் விப்ரோதேவாநாம்து:கதோபவேத்
த்ரிதஶாஸ்தெநவிக்நந்தி ப்ரவிஷ்டாவிஷயம்ந்ருணும்

வியாக்யானம்—ததைவ - அங்ஙனமே, ஜ்ஞாநவாந் - ஞானவானை, விப்ர: - அந்தணன், தேவாநாம் - தேவர்களுக்கு, து:கத: - துக்கத்தைக் கொடுக்கின்றவன், பவேத் - ஆவான், தேந - ஆதலால், த்ரிதஶா: - தேவர்கள், ந்ருணாம் - மனிதர்களது, விஷயம் - (மங்கை புதல்வராதி) விஷயத்தை, ப்ரவிஷ்டா: - பிரவேசித்தவர்களாய் நின்று, விக்நந்தி - இடையூறு செய்கின்றார்கள்.

பொழிப்புரை—அங்ஙனமே ஞானவானாகிய வந்தணன் தேவர்களுக்குத் துக்கவேதுவாகின்றான். ஆதலால் தேவர்கள் மனிதர்களது மங்கை புதல்வராதி விஷயங்களில் பிரவேசித்தவர்களாய்நின்று இடையூறு செய்கின்றார்கள்.

நுட்பம்—இங்கு, கருமங்களைப் புரிவோர்க்கே தேவரிடம் பத்தியுதிக்கும்; வைராக்கியத்தைப் பெற்று விஷயாதிகளை வெறுத்துத்தள்ளி யுபாஸனை செய்வோருக்குச் சிவனிடம் பத்தி யுதிக்குமேயன்றி மற்றேது மிராதாதலின் இத்தகைய வைராக்கியமுடையோன் தேவப்பிரீதி யேதுவான கருமங்களைச் செய்யாதது பற்றித் தேவர்களுக்குத் துக்க ஏதுவாகின்றான் என்று கூறப்பட்டது. கிருகஸ்தனுக்குச் சுகவேதுவான பசுவை எவனாவது கைப்பற்றி விடுவானாகில், அதனால் அவர்களுக்குத் துன்ப முண்டாவது போலவே தேவர்களுக்குஞ் சுகவேதுவான கருமத்தைப் பெரிதாய் நினைக்காது ஞானத்தையே பெரிதென்று நினைத்துத் தேவப் பிரீதியைச் செய்யாதவன் துன்பவேதுவாவான் என்பது காண்க.

ஸ்லோகம்.

ததோ நஜாயதே பக்தி ஶ்ஶிவே கஸ்யாபி தேஹிந꞉ ।
தஸ்மாதவிது³ஷாம்நைவ ஜாயதே ஶூலபாணிந꞉ ॥ (கசு)

ததோநஜாயதேபக்தி ஶ்ஶிவேகஸ்யாபிதேஹிந꞉
தஸ்மாதவிதுஷாம்நைவ ஜாயதேஶூலபாணிந꞉

வியாக்யானம்—தத꞉ - ஆதலால், கஸ்ய அபி தேஹிந꞉ - (ஞானமார்க்கஞ் சென்ற எம் மனிதனுக்கும்), ஶிவே - சிவனிடம், பக்தி꞉ - பத்தியானது, நஜாயதே - உண்டாகின்றதில்லை, தஸ்மாத் - ஆனதுபற்றியே, அவிதுஷாம் - அறிவில்லாதவர்க்கும், ஶூலபாணிந꞉ - சூலபாணி விஷயமான (பத்தியானது), நஏவஜாயதே - உண்டாகின்றதே யில்லை.

பொழிப்புரை—ஆதலால் ஞானமார்க்கஞ் சென்ற எம்மனிதனுக்கும் சிவனிடம் பக்தியானது உண்டாகின்றதில்லை. ஆனதுபற்றியே அறிவில்லாதவர்க்கும் சூலபாணி விஷயமான பக்தியானது உண்டாகிறதில்லை.

நுட்பம்—இங்கு ஞானமார்க்கஞ் சென்ற எம் மனிதனுக்கும் என்றதனால் உறுதியான பக்தியில்லாமல் நற்பரிபாக மிராமல் ஞானமார்க்கஞ் சென்ற எம் மனிதற்குமென் றறிக. இனி ஞானமார்க்கஞ் செல்லுவதற்குச் சரியான பரிபாக மெதனால் வருமெனின் அதைக் கோடிஜந்மார்ஜிதை꞉ புண்யை꞉ சிவேபக்தி என்ற சுலோகத்தில் கூறுவதைப் பின்னர் கண்டு தெளிக.

ஸ்லோகம்.

யயாகயு௦விஜாதாவி ஐயெ௱விவ்ரூஉ௱௨தெநு௱ணாஜ |
ஜாத௦வாவிஸிவஜ்ஞாந௦ நவிஸ்வாஸ௦ஹஜத்௱ல௦ || (கச)

யதாகதம்சிஜ்ஜாதாபி மத்யேவிச்சித்யதேந்ருணாம்
ஜாதம்வாபிஸிவஜ்ஞாநம் நவிஸ்வாஸம்பஜத்யலம்

வியாக்யானம்—ந்ருணாம் - மனிதருக்கு, யதாகதஞ்சித் - எவ்விதமாவது (எப்புண்ணியத்தாலாவது), ஜாதா அபி - (பத்தி) உண்டாயினும், மத்யே - இடையில், விச்சித்யதே - சேதிக்கப் படுகின்றது (தொலைகின்றது), சிவஞ்ஞானம் - சிவஞ்ஞானமானது, ஜாதம்,வா, அபி - உண்டாயினும், அலம் - போதுமான, விச்வாசம் - நம்பிக்கையை (க்கொடுக்குந் தன்மையை), நபஜதி - அடைவதில்லை.

பொழிப்புரை—மனிதருக்கு எப்புண்ணியத்தாலாவதுபக்தியுண்டானாலும் இடையில் (தேவர்களால்) தொலைந்துவிடுகின்றது; சிவஞானம் உண்டாயினும் அது போதுமானதா யேற்படுவதில்லை.

நுட்பம்—பக்தியுண்டாயினும் இடையே (தேவர்களால்) தொலைந்துவிடுகின்றதென்றதனால், பக்தியின் காரியமாகிய சிவதத்துவாராய்ச்சிக்கு முந்தியே தொலைந்துவிடுகின்றதென்பதறிக. இங்குச் சிவஞானம் உண்டாயினும் என்றதனால் உறுதியான பக்தியினால் உண்டாகு முண்மையான சிவஞான மல்லாமல், போலியா யுண்டாகுஞ் சிவஞானம் என்றறிக.

ருஷிகள்கேள்வி.

யஜெ௱வ௦ஜெவதா விகூராவர௦திதந௱ஹூதாஜ |
வௌருஷ௦தத்ர கவஸ்௱ாஸ்தியெநஜூக்திர௱விஷ௱தி || (கரு)

யத்யேவம்தேவதா விக்நமாசரந்திதநூப்ருதாம்
பௌருஷம்தத்ர கஸ்யாஸ்தியேநமுக்திர்பவிஷ்யதி

வியாக்யானம்—ஏவம் - இங்ஙனம், தேவதாஃ - தேவர்கள், தநூப்ருதாம் - மனிதருக்கு, விக்நம் - இடையூறை, ஆசரந்தி,யதி, - செய்வார்களாயின், யேந - எந்தப் புருஷயத்தினத்தால், முக்திஃ - முக்தியானது, பவிஷ்யதி - நிகழுமோ, பௌருஷம் - அத்தகைய பௌருஷயத்நமானது, தத்ர - இங்கு, கஸ்ய - யாருக்கு, அஸ்தி - உளது.

பொழிப்புரை—இங்ஙனம் தேவர்கள் மனிதருக் கிடையூறுசெய் வார்களாயின் எந்தப் பிரயத்தினத்தினால் முக்திகிட்டுமோ அத்தகைய புருஷயத்தினமானது ஈங்கு எவனுக்குளது.

ஶ்லோகம்.

ஸத்யம்ஸூதாத்மஜப்ரூஹி தத்ரோபாயோஸ்திவாநவா । ஸூதஉவாச । கோடிஜந்மார்ஜிதைஃபுண்யைஶ்ஶிவேபக்திஃப்ரஜாயதே ॥ (கக)

ஸத்யம்ஸூதாத்மஜப்ரூஹி தத்ரோபாயோஸ்திவாநவா | ஸூதஉவாச | கோடிஜந்மார்ஜிதைஃபுண்யைஶ்ஶிவேபக்திஃப்ரஜாயதே.

வியாக்யானம்—ஸூதாத்மஜ - சூதபுத்திரரே, தத்ர - இவ்விஷயத்தில், உபாயோஸ்தி - உபாயம் உளதா, நவா - இல்லையா, ஸத்யம் - உண்மையை, ப்ரூஹி - கூறும் (என்றவுடன் சூதர்), கோடிஜந்மார்ஜிதைஃ - அநேகப் பிறப்புகளில் சம்பாதிக்கப்பட்ட, புண்யைஃ-புண்ணியங்களால், ஶிவே- சிவனிடம், பக்திஃ- பத்தியானது, ப்ரஜாயதே - உண்டாகின்றது, (என்றனர்).

பொழிப்புரை—ஓ சூத புத்திரரே இவ்விஷயத்தில் உபாயமுள்ளதா அல்லது இல்லையோ உண்மையைக் கூறு(மென்றவுடன் சூதர்) அநேகப் பிறப்புகளில் சம்பாதிக்கப்பட்ட புண்ணியங்களால் சிவனிடம் பக்தியுதிக்கின்றது.

இங்கு கோடி என்றதனால் அனேகம் என்றும், சிவ என்றதனால் துரீயம் என்று மறிக.

ஔவைக்குறள்.

பல்லூழி காலம் பயின்றரனை யர்ச்சிக்கில்
நல்லறிவு சற்றே நகும். என்ற கருத்து மிது.

ஶ்லோகம்.

இஷ்டாபூர்த்தாதிகர்மாணி தேநாசரதிமாநவஃ ।
ஶிவார்பணதியாகாமாந் பரித்யஜ்யயதாவிதி ॥ (கள)

இஷ்டாபூர்த்தாதிகர்மாணி தேநாசரதிமாநவஃ
ஶிவார்பணதியாகாமாந் பரித்யஜ்யயதாவிதி

வியாக்யானம்—மாநவ: - மனிதன், தேந - அச்சிவப்பிரஸாதத்தால், இஷ்டாபூர்தாதிகர்மாணி - வேள்வி சிவாலயம் கிணறு, அன்னசத்திரம், குளம், இவைகளாதியை நிருமித்தல் முதலிய கருமங்களை, காமாந் - பயனின் விருப்பத்தை, பரித்யஜ்ய - விடுத்து, சிவார்ப்பணதியா - சிவன் பொருட்டென்ற எண்ணத்தோடு, யதாவிதி - விதிப்படி, ஆசரதி - செய்கிறான்.

பொழிப்புரை—மனிதன் அச்சிவப்பிரசாதத்தாலேயே வேள்வி, சிவாலயம், கிணறு, அன்னசத்திரம், குளம் இவைகளை நிருமித்தல் முதலிய கருமங்களின் பயனை விரும்பாது சிவன் பொருட்டென்றுவெண்ணத்தோடு விதிப்படி செய்கின்றான்.

ஶ்லோகம்.

𑌅𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌤𑍍𑌤𑍇𑌨 𑌶𑌂𑌭𑍋𑌰𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌸𑌦𑍃𑌢𑍋 𑌨𑌰𑌃 ।
𑌤𑌤𑍋 𑌭𑍀𑌤𑌾𑌃 𑌪𑌲𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌵𑌿𑌘𑍍𑌨𑌂 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌸𑍁𑌰𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌃 ॥ (௧௮)

அநுக்ரஹாத்தேநஸம்போர்ஜா யதேஸ⁻த்ருடோநர:
ததோபீதா:பலாயந்தே விக்நம்ஹித்வாஸ⁻ரேஶ்வரா:

வியாக்யானம்—தேந - அதனால், ஸம்போ: - சம்புவினது அநுக்ரஹாத் - அநுக்கிரஹத்தினல், நர: - மனிதன், ஸ⁻த்ருட:-சலியாச்சித்தமுடையவனாக, ஜாயதே - ஆகின்றான், தத: - ஆதலால், ஸ⁻ரேஶ்வரா: - தேவர்கள், விக்நம்-இடையூறை, ஹித்வா - விடுத்து, பீதா: - பயந்தவர்களாய், பலாயந்தே - ஓட்டம் பிடிக்கின்றார்கள்.

பொழிப்புரை— அதனல் சிவாநுக்கிரஹத்தால் மனிதன் சலியாதசித்தமுடையவனாகின்றான். ஆதலால் தேவர்கள் விக்நம் செய்தலைவிடுத்துப் பயம்கொண்டு ஓட்டம் பிடிக்கின்றார்கள்.

கருத்து—கருமங்களைச் சிவன் பொருட்டு என்றே பயனை விரும்பாது செய்யவேண்டுமென்பதாயிற்று.

ஶ்லோகம்.

𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑍇𑌨 𑌸𑌾 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾 𑌚𑌰𑌿𑌤𑍇 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍌𑌳𑌿𑌨𑌃 ।
𑌶𑍃𑌣𑍍𑌵𑌤𑍋 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍇𑌵 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ (௧௯)

ஜாயதேதேநஸா⁻ஶ்ருஷா சரிதேசந்த்ரமௌளிந:
ஶ்ருண்வதோஜாயதேஞாநம் ஞாநாதேவவிமுச்யதே

வியாக்யானம்—தேந - ஆதலால், சந்த்ரமௌளிந: - சிவபெருமானது, சரிதே - சரித்திரத்தில், ஶுஶ்ரூஷா - கேட்கவிச்சை, ஜாயதே - உண்டாகின்றது, ச்ருண்வதோ - கேட்போனுக்கு, ஞாநம் - ஞானமானது, ஜாயதே - உண்டாகின்றது, ஞாநாத், ஏவ, - ஞானத்தினாலேயே, விமுச்யதே - முக்தியை யடைகின்றான்.

பொழிப்புரை—ஆதலால் சிவபெருமானது சரித்திரத்தைக் கேட்க விச்சையுதிக்கின்றது ச்ரவணம் செய்தால் ஞானமுதிக்கின்றது; ஞானத்தினாலேயே முக்தி யடைகின்றான்.

நுட்பம்—ஈண்டு ஆதலால் என்றதனால் தேவர்கள் இடையூறு செய்யாததனால் என்று அறிக. அதனால் தடையற்றுச் சிவபக்தி விருத்தியாக, அவனது மஹிமையை யறிய விரும்பிச் சிவமஹிமா விசாரம் செய்யவே ஞானம் நிகழ்கின்றது ஞானத்தினாலேயே முக்தி யென்பது மூன்றாவது சுலோகத்தி னுரையில் விவரிக்கப்பட்டுளது. இனி ஞானமென்பது யாதெனின்? கூறுவாம்.

சூதஸம்ஹிதை யஞ்ஞவைபவகண்டம்.

பிரமாணம்—ஜ்ஞாநாநாம்ஶம்புவிஜ்ஞாநம் வரிஷ்டம்நேதரத்பவேத்। வேதவாக்யஸமுத்பந்நம் ஶிவஜ்ஞாநம் நிரூபணே॥ ஸம்யக்ஜ்ஞாநமயாக்யாதம்॥

ஜ்ஞாநாநாம்ஶம்புவிஜ்ஞாநம் வரிஷ்டந்நேதரத்பவேத் வேதவாக்யஸமுத்பந்நம் ஶிவஜ்ஞாநம்நிரூபணே ஸம்யஜ்ஞாநம்மயாக்யாதம்

என்றதனால் சிவஞானமென்றே யறிக.

ஶ்லோகம்.

பஹுநாத்ரகிமுக்தேந யஸ்யபக்திஶ்ஶிவேத்ருடா ।
மஹாபாபோபபாபௌககோடிக்ரஸ்தோபிமுச்யதே ॥ (உ0)

பஹுநாத்ரகிமுக்தேந யஸ்யபக்திஶ்ஶிவேத்ருடா
மஹாபாபோபபாபௌக கோடிக்ரஸ்தோபிமுச்யதே

வியாக்யானம்—அத்ர - ஈண்டு, பஹுநா, உக்தேந - மிக்கவுரைப்பதனால், கிம் - யாது உளது, யஸ்ய - எவனுக்கு, ஶிவே - சிவனிடம், த்ருடா - உறுதியான, பக்தி: - பக்தியானது உளதோ, (அவன்) மஹாபாபோ பபாபௌக கோடிக்ரஸ்தோபி - பிரும்ம

ஒறத்தியாதி மகாபாதகங்களினதும் உபபாபங்களினதுமான கூட்டங்களில் பொருந்தினவனாயினும், முச்யதே - முத்தனாகின்றான்.

பொழிப்புரை—ஈண்டு மிக்க வுரைப்பதனால் யாதுளது எவனுக்குச் சிவனிடம் உறுதியான பக்தியுளதோ, அவன் எத்தகைய பாவங்களினின்றும் நீங்கி முத்தியடைகின்றான்.

திருமந்திரம்.

சிவசிவ வென்றிடத் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளும்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவர்
சிவசிவ வென்றிடச் சிவகதி தானே.

என்றதனாற் காண்க.

ஸ்லோகம்.

𑌰𑍂𑌦𑍍𑌧𑌂 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍𑌸𑌮𑌾𑌦𑌾𑌯 𑌕𑍍𑌷𑍁𑌲𑍍𑌲𑌕𑌂 𑌜𑌲𑌮𑍇𑌵𑌵𑌾 ।
𑌯𑍋 𑌦𑌤𑍍𑌤𑍇 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨𑌾𑌸𑍌 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌦𑌤𑍍𑌤𑍇 𑌜𑌗𑌤𑍍𑌤𑍍𑌰𑌯𑌮𑍍 ॥ (உக)

ருத்தம்கிஞ்சித்ஸமாதாய க்ஷுல்லகம்ஜலமேவவா
யோதத்தேநியமேநாஸௌ தஸ்மைதத்தேஜகத்ரயம்

வியாக்யானம்—ருத்தம் - கிஞ்சித் - சிறப்புற்ற எதையாவது, க்ஷுல்லகம் - அற்பமானதையாவது, ஜலம் ஏவ வா - ஜலத்தையே யாவது, ஸமாதாய - எடுத்து, ய: - எவன், நியமேந - நியதமாய், தத்தே - (சிவன்பொருட்டு) கொடுக்கின்றானோ, அஸௌ - இச்சிவ பெருமான், தஸ்மை - அவன் பொருட்டு, ஜகத்ரயம் - மூவுலகத்தையும், தத்தே - அளிக்கின்றார்.

பொழிப்புரை— சிறப்புற்றதா யெதையாவது யல்லது அற்பமானதையாவது அல்லது ஜலத்தையாவது எடுத்து எவன் நியதமாய்ச்சிவபெருமானிடம் சமர்ப்பிக்கின்றானோ. அவனுக்கு அவ்விறைவன் மூவுலகையும் அளித்தருளுகின்றார்.

திருமந்திரம்.

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ண லாரதுகண் டருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம னழுவுகின் றாரே.

ச.

ஸ்லோகம்.

தத்ராப்யஶக்தோநியமாந் நமஸ்காரம்ப்ரதக்ஷிணம் ।
யঃகரோதிமஹேஶஸ்ய தஸ்மைதுஷ்டோபவேச்சிவঃ ॥ (உஉ)

தத்ராப்யஸக்தோநியமாந் நமஸ்காரப்ரதக்ஷிணம்
யঃகரோதிமஹேஸஸ்ய தஸ்மைதுஷ்டோபவேச்சிவঃ

வியாக்யானம்—தத்ர அபி-அதிற்கூட, அசக்தঃ - சத்தியற்றவனாகிய, ய:-எவன், நியமாத்-நியமமாக, மஹேசஸ்ய-மகேச்சுரனுக்கு, நமஸ்காரம்-கீழ் விழுந்து வணங்குதலையும், ப்ரதக்ஷிணம்-சுற்றிவருதலையும், கரோதி - செய்கின்றானோ, தஸ்மை - அவனிடம், சிவঃ-சிவபெருமான், துஷ்டঃ-திருப்தியுடையவராக, பவேத் - ஆவார்.

பொழிப்புரை—அதனில் கூட சத்தியிராது எவன் சிவபெருமானுக்கு நியமமாய்ப் பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்கின்றானோ அவனிடம் அவ்விறைவன் திருப்தியுள்ளவராகின்றார்.

ஸ்லோகம்.

ப்ரதக்ஷிணாஸ்வஶக்தோபி யஸ்ஸ்வாந்தே சிந்தயேச்சிவம் ।
கச்சந்ஸமுபவிஷ்டோவா தஸ்யாபீஷ்டம்ப்ரயச்சதி ॥ (உ௩)

ப்ரதக்ஷிணாஸ்வஸக்தோபி யஸ்வாந்தேசிந்தயேச்சிவம்
கச்சந்ஸமுபவிஷ்டோவா தஸ்யாபீஷ்டம்ப்ரயச்சதி

வியாக்யானம்—ப்ரதக்ஷிணாஸு-ப்ரதக்ஷிணங்களில், அபி-கூட, அசக்தঃ-சக்தியற்றவனான, யঃ-எவன், கச்சந்-நடந்து கொண்டேயாவது, ஸமுபவிஷ்டோ வா-உட்கார்ந்துகொண்டேயாவது, சிவம்-சிவனை, ஸ்வாந்தே-மனதினில், சிந்தயேத்-சிந்திப்பானோ, தஸ்ய-அவனுக்குச் (சிவன்), அபீஷ்டம் - விரும்பிய பொருளை, ப்ரயச்சதி-அளித்தருளுகின்றார்.

பொழிப்புரை—ப்ரதக்ஷிணங்களிற் கூடச் சத்தியற்ற எவன் நடந்துகொண்டேயாவது உட்கார்ந்துகொண்டேயாவது சிவனை மனதினில் சிந்திப்பானேயாகில் சிவபெருமான் அவனுக்குக் கோரும் பொருளைக் கொடுத்தருளுகின்றார்.

திருக்கருவையந்தாதி.

இருக்கினு நிற்கும் போது மிரவுகண் டுயிலும் போதும்
பொருக்கென நடக்கும்போதும் பொருந்தியூண்டுய்க்கும்போதும்

முருக்கிதழ் கனிவா யாரை முயங்கிநெஞ் சழியும் போதும்
திருக்களா வுடைய நம்பா சிந்தையுன் பால தாமே,

என்றதானுங் காண்க.

ஸ்லோகம்.

𑌚𑌂𑌦𑌨𑌂 𑌬𑌿𑌲𑍍𑌵𑌕𑌾𑌷𑍍𑌠𑌸𑍍𑌯 𑌪𑍁𑌷𑍍𑌪𑌾𑌣𑌿𑌵𑌨𑌜𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 ।
𑌫𑌲𑌾𑌨𑌿𑌵𑌨𑌜𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌯𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌕𑌰𑌾𑌣𑌿𑌵𑍈 ॥ (உ௪)

சந்தநப்பில்வகாஷ்டஸ்ய புஷ்பாணிவநஜாந்யபி
பலாநிவநஜாந்யேவ யஸ்யப்ரீதிகராணிவை

வியாக்யானம்—யஸ்ய-எவருக்கு, பில்வகாஷ்டஸ்ய சந்தனம்-வில்வக்கட்டையின் சந்தனமும், வநஜாநி - கானகத்திற் றோன்றிய, புஷ்பாணி - புஷ்பங்களும், அபி - மலர்களும், வநஜாநி - காட்டிலுள்ள, பலாநி ஏவ - பழங்களுமே, ப்ரீதிக ராணிவை - திருப்தியையுண்டு பண்ணுவனவோ.

பொழிப்புரை—எவனுக்கு வில்வக்கட்டையின் சந்தனமும்கானகத்திற்றோன்றிய மலர்களும் கானகப் பழங்களுமே திருப்தியையுண்டு பண்ணுவனவோ. இங்குக் கானகத்திற்றோன்றிய பழங்களென்றது விளா, நெல்லி, நாவல், இலந்தை முதலிய சிவநிவேதனத்திற்குரிய கனிகள் என்றறிக.

ஸ்லோகம்.

𑌦𑍁𑌷𑍍𑌕𑌰𑌂 𑌤𑌸𑍍𑌯𑌸𑍇𑌵𑌾𑌯𑌾𑌂 𑌕𑌿𑌮𑌸𑍍𑌤𑌿𑌭𑍁𑌵𑌨𑌤𑍍𑌰𑌯𑍇 ।
𑌵𑌨𑍍𑌯𑍇𑌷𑍁𑌯𑌾𑌦𑍃𑌶𑍀𑌪𑍍𑌰𑍀𑌤𑌿 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇𑌪𑌰𑌮𑍇𑌶𑌿𑌤𑍁𑌃 ॥ (உ௫)

துஷ்கரந்தஸ்யஸேவாயாம் கிமஸ்திபுவநத்ரயே
வந்யேஷுயாத்ருஶீப்ரீதிர் வர்ததேபரமேஶிது:

வியாக்யானம்—தஸ்ய - அச் சிவபெருமானது, ஸேவாயாம் - பூசையில், துஷ்கரம் - செய்யக்கூடாதது, புவனத்ரயே - மூவுலகிலும், கிம் அஸ்தி - யாது உளது, பரமேசிது: - சிவபெருமானுக்கு, வந்யேஷு - கானகத்திலுள்ள பூஜோபகரணங்களில், யாத்ருசீ - எங்ஙனம், ப்ரீதி: - பிரியமானது. வர்த்ததே - உளதோ.

பொழிப்புரை—அச் சிவபெருமானது பூஜாவிஷயத்தில் சாத்தியமல்லாதது, மூவுலகிலும் யாதுளது; சிவபெருமானுக்குக் கானகத்திலுள்ள பூஜோபகரணங்களில் எங்ஙனம் பிரியுளதோ.

ஶ்லோகம்.

உத்தமேஷ்வபி நாஸ்த்யேவ க்ராமஜேஷ்வபி தாத்ருஶீ ।
தந்த்யக்த்வா தாத்ருஶம் தேவம் யஸ்ஸேவேதாந்யதேவதாம் ॥ (உசு)

உத்தமேஷ்வபிநாஸ்த்யேவ க்ராமஜேஷ்வபிதாத்ருஶீ
தந்த்யக்த்வா தாத்ருஶந்தேவம் யஸ்ஸேவேதாந்யதேவதாம்

வியாக்யானம்—க்ராமஜேஷு - கிராமங்களிற் றோன்றிய, உத்தமேஷு அபி - சிறந்தவைகளான (பூ கனி முதலியவைகளிலும், தாத்ருஶீ - அங்ஙனம் (பிரீதியானது), நாஸ்தியேவ - இல்லவேயில்லை, தாத்ருஶம்-அங்ஙனம் அற்ப சமர்ப்பணத்தினாலேயே அபாரமானப் பிரீதியுடையோனாகிய, தம் தேவம் - அத்தேவனை, த்யக்த்வா - விடுத்து, யஃ - எவன், அந்யதேவதாம் - இதர தேவதையை, ஸேவேத - சேவிப்பவனோ.

பொழிப்புரை—கிராமங்களிற் றோன்றிய சிறந்த பூ கனிகளிலும் அவ்வளவு பிரீதி யில்லவே யில்லை. அங்ஙனம் அபாரகருணாநிதியான அத்தேவனை விடுத்து எவன் இதரதேவதையை உபாசிக்கின்றானோ.

ஶ்லோகம்.

ஸஹிபாகீரதீம் த்யக்த்வா காங்க்ஷதே ம்ருகத்ருஷ்ணிகாம் ।
கிந்துயஸ்யாஸ்திதுரிதம் கோடிஜந்மஸுஸஞ்சிதம் ॥ (உஎ)

ஸஹிபாகீரதீந்த்யக்த்வா காங்க்ஷதேம்ருகத்ருஷ்ணிகாம்
கிந்துயஸ்யாஸ்திதுரிதம் கோடிஜந்மஸுஸஞ்சிதம்

வியாக்யானம்—ஸஃ - அவன், பாகீரதீம் - கங்காநதியை, த்யக்த்வா - விடுத்து, ம்ருகதிருஷ்ணிகாம் - கானனீரை, காங்க்ஷதெஹி - விரும்புகின்றானன்றோ, கிம் து - மற்றோவெனின், யஸ்ய - எவனுக்கு, கோடிஜந்மஸு ஸஞ்சிதம் - அநேகப் பிறப்புகளிற்சம்பாதிக்கப்பட்ட, துரிதம் - பாவமானது, அஸ்தி - உளதோ.

பொழிப்புரை—அவன் கங்காநதியை விடுத்துக் கானனீரை விரும்புகின்றவ னன்றோ மற்றோவெனின் எவனுக்கு அநேகப்பிறப்புகளில் சம்பாதிக்கப்பட்ட பாவமுளதோ.

நுட்பம்—அற்ப பூஜையாலேயே மிக்க கருணை கூரும் சிவபெருமானை விடுத்து வேறு தெய்வத்தை யுபாஸித்தல் கங்காநதியை விடுத்துக் கானனீரை விரும்புதலுக் கொப்பாகும்.

இத்தகையரையே, உமாபதிசிவம்.

நெற்குத்துண்ணு துமிருத்திக் கைவருந்திக் கறவை நிற்க, மல டுகறந் துளந்தளர்ந்து குளிர்பூஞ்சோலை வழியிருக்கக் குழியில்வி ழுந் தளறுபாய்ந்து, விலைதருமென் கரும்பிருக்க விரும்பைமென்று விளக்கிருக்க மின்மினித் தீக்காய்ந்து நொந்தார்.— எனத் திரு வாய்மலர்ந் தருளினர்.

ஶ்லோகம்.

𑌤𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍇𑌨𑌾𑌯𑌂 𑌤𑍍𑌵𑌰𑍍𑌥𑍋𑌮𑍋𑌹𑌾𑌨𑍍𑌧𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌨𑌕𑌾𑌲𑌨𑌿𑌯𑌮𑍋𑌯𑌤𑍍𑌰 𑌨𑌦𑍇𑌶𑌸𑍍𑌯𑌸𑍍𑌥𑌲𑌸𑍍𑌯𑌚 ॥ (௨௮)

தஸ்யப்ரகாஶதேநாயம் த்வர்தோமோஹாந்தசேதஸ:
நகாலநியமோயத்ர நதேஶஸ்யஸ்தலஸ்யச

ஶ்லோகம்.

𑌯𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍𑌤𑌂𑌰𑌮𑌤𑍇 𑌤𑌤𑍍𑌰𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌨𑌕𑍇𑌵𑌲𑌮𑍍 ।
𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑍇𑌨𑌶𑌿𑌵𑌸𑍍𑌯𑌾𑌸𑍌 𑌶𑌿𑌵𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍 ॥ (௨௯)

யத்ராஸ்யசித்தம்ரமதே தத்ரத்யாநேநகேவலம்
ஸ்வாத்மத்வேநஶிவஸ்யாஸௌ ஶிவஸாயுஜ்யமாப்நுயாத்

வியாக்யானம்—தஸ்ய மோஹாந்த சேதஸ: - அந்த அஞ்ஞா ன விருளால் மூடப்பட்ட மனதுடையவனுக்கு, அயம் - இந்த, அர் த்த: - தத்துவமானது, ந ப்ரகாஶதே - விளங்குகிறதில்லை, யத்ர எவ்விறைவனது விஷயமாக, காலநியம் - காலநியமும் (இக்காலமே யிவருக்குரியது) என்பதும், ந - இல்லையோ, தேசஸ்ய - தேசத்தி னுடையதும், ஸ்தலஸ்ய ச - இருக்கும் ஸ்தாநத்தினுடையதுமான, நியமமும், ந - இல்லையோ, அஸ்ய-இவனது, சித்தம் - மனமானது, யத்ர-எவ்விடத்தில் எக்காலத்தில், ரமதே-உருசிக்கின்றதோ, தத்ர- அத்தேச காலங்களில், ஶிவஸ்ய - சிவனை, ஸ்வாத்மத்வேந - தானாக கேவலம், த்யாநேந - தியானத்தினாலேயே, அஸௌ - இங்ஙனம் தியானிக்கும் மனிதன், ஶிவஸாயுஜ்யம் - சிவஸாயுஜ்ஜிய முத்தியை, ஆப்நுயாத் - அடைவான்

பொழிப்புரை—அஞ்ஞான இருளால் மூடப்பட்ட மனதுடைய வனுக்கு இத்தத்துவமானது விளங்குகின்றதில்லை எவ்விறைவனது விஷயமாய்க் காலதேச விருப்பிடங்களின் நியமமில்லையோ இவ னது மனமானது எத்தேச காலங்களில் உருசிக்கின்றதோ அத்தேச

காலங்களில் சிவனைத் தானாகவே தியானிப்பதினாலேயே இங்ஙனம் தியானிப்பவன் சிவஸாயுச்சியத்தை யடைகின்றான்.

நுட்பம்—ஈண்டுச் சிவனைத் தானாகவென்றதனால் சிவோகம் பாவனை விதிக்கப்பட்டதறிக அற்றேல் சருவஞ்ஞனான சிவபெருமானைத் தானாகப் பாவித்த லொவ்வுமோ வெனின் சிவோகம் பாவனை யளவிலடங்கா மஹிமையுடையதாதலின் குற்றமின்றென்க.

சிவோகம் பாவனையாவது கருடோகம் பாவனை போலும், கருடோகம்பாவனை யாவது மாந்திரிகன் ஆதிதைவிக கருடனை நாடோறும் பயின்றுவந்த பயிற்சி விசேடத்தால் அம்மந்திர ரூபமே தானாக அநந்நியபாவனை செய்து தன்னறிவு அதன் வயத்ததாம்படி உறைத்துநிற்றல். அவ்வாறு நின்று அம் மந்திரக்கண் கொண்டு பார்ப்பவே அஃது அவ்விட வேகத்தைமாற்றுதல் ஒரு தலையாகலின் அப்பாவனை ஈண்டைக் குவமையாயிற்று. (இது திராவிடமகா பாஷ்யத்திற் கண்டது.)

தரிசனோபநிடதம்.

பிரமாணம்—ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விஶ்வரூபம் மஹேஶ்வரம் । ஸோஹமித்யாதரேணைவ த்யாயேத்யோகீஶ்வரேஶ்வரம் ॥

ஊர்த்வரேதம்விரூபாக்ஷம் விஶ்வரூபம்மஹேஸ்வரம்
ஸோஹமித்யாதரேணைவ த்யாயேத்யோகீஸ்வரேஸ்வரம்

மேனோக்கிய ரேதசுவுடையவனும் நெற்றிக்கண்ணனும் விச்வரூபனும் யோகீச்சுரர்களால் சேவிக்கப் படுகிறவனும் ஆகிய சிவபெருமானை அவனே யான்என்று ஆதரவுடன் தியானிக்கவேண்டும்.

உருத்திர இருதய உபநிடதம்.

அதிஷ்டானம் ஸமஸ்தஸ்ய ஜகதஸ்ஸத்யசித்கநம் ।
அஹமஸ்மீதி நிஶ்சித்ய வீதஶோகோ பவேந்முநி: ॥

அதிஷ்டாநம்ஸமஸ்தஸ்ய ஜகதஸ்ஸத்யசித்கநம்
அஹமஸ்மீதிநிஸ்சித்ய வீதஸோகோபவேந்முநி:

எல்லா ஜகத்திற்கும் ஆதாரமாயும் மெய்ஞ்ஞான வடிவனும் ஆகிய இறைவன்யானே யாகிறேன்என்று மௌனியாய்த் தியானிப்பவன் சோகத்தைத் தாண்டுகின்றான்

அமிருத பிந்தூபநிடதம்.

𑌤𑌦𑍇𑌵𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌂 𑌨𑌿𑌰𑌞𑍍𑌜𑌨𑌮𑍍 ।
𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍 ॥

ததேவம்நிஷ்களம்ப்ரஹ்ம நிர்விகல்பம்நிரஞ்ஜநம்
தத்ப்ரஹ்மாஹமிதிஜ்ஞாத்வா ப்ரஹ்மஸம்பத்யதேத்ருவம்

நிஷ்களமும், நிருவிகல்பமும், நிரஞ்சனமுமானபிரமம் அஃதே. அப்பிரமமாஞ்சிவனே யான் என்று அறிந்து சிவனை யடைகின்றான்.

தேஜோபிந்தூபநிடதம்.

𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌭𑌾𑌵𑌯 ।
𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑍍𑌮𑌿 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍋𑌽𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

ஸர்வவ்யாபாரமுத்ஸ்ருஜ்ய அஹம்ப்ரஹ்மேதிபாவய
அஹம்ப்ரஹ்மாஸ்மிமந்த்ரோயம் ஜ்ஞாநாநந்தம்ப்ரயச்சதி

எல்லா வியாபாரத்தையும் விடுத்து யானே சிவனென்று பாவனை செய்க, யானே சிவனெனும் இம்மந்திரம் ஞானாநந்தத்தை யளித்தருளும்.

திரிசிகிப்பிராம்மணோபநிடதம்.

𑌅𑌹𑌮𑍇𑌵 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ।
𑌸𑌮𑌾𑌧𑌿𑌃 𑌸 𑌤𑍁 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 ॥

அஹமேவபரப்ப்ரஹ்ம ப்ரஹ்மாஹமிதிஸம்ஸ்திதிஃ
ஸமாதிஸ்ஸதுவிஜ்ஞேயஃ

யானே பரனான சிவன் சிவனே யான் என்ற பாவனையே ஸமாதியென்றறியத் தக்கது.

தக்ஷிணாமூர்த்தி யுபநிடதம்.

𑌸𑍋𑌽𑌹𑌮𑌿𑌤𑌿 𑌯𑌾𑌵𑌦𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌭𑌵𑌤𑌿 ॥

ஸோஹமிதியாவதாஸ்திதிஸ்ஸாநிஷ்டாபவதி

அவனே யான் என்றிருக்கும் வரையில் நிஷ்டையாகும்.

கந்தோபநிடதம்.

𑌤𑍍𑌯𑌜𑍇𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌂 𑌸𑍋𑌽𑌹𑌂𑌭𑌾𑌵𑍇𑌨 𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍 ॥

த்யஜேதஜ்ஞாநநிர்மால்யம் ஸோஹம்பாவேநபூஜயேத்

அஞ்ஞானத்தைத் தொலைக்கவேண்டும் (சோஹம் பாவனை) அவனே யானென்ற பாவனையால் பூஜிக்கவேண்டும்.

சாண்டில்லியோபநிடதம்.

𑌉𑌪𑌾𑌸𑍍𑌤𑍇𑌸𑍋𑌽𑌹𑌮𑌿𑌤𑌿𑌸𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 ॥

உபாஸ்தேஸோஹமிதிஸப்ரஹ்மவித்பவதி

அவனே யானென்று உபாஸிப்பவன் சிவஞானியாகின்றான்.

பைங்களோபநிடதம்.

𑌅𑌹𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑍍𑌮𑍀𑌤𑍍𑌯𑌨𑍁𑌸𑌂𑌧𑌾𑌨𑌂𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 ॥

அஹம்ப்ரஹ்மாஸ்மீத்ய நுஸந்தாநம்குர்யாத்

யானே சிவனாகின்றேனென்று அநு சந்தானம் செய்ய வேண்டும்.

மஹோபநிடதம்.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌹𑌮𑌿𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌵𑍀𑌤𑌶𑍋𑌕𑍋𑌭𑌵𑍇𑌨𑍍𑌮𑍁𑌨𑌿𑌃 ॥

ப்ரஹ்மைவாஹமிதிஜ்ஞாத்வாவீதஶோகோபவேந்முநி:

சிவனே யானென்றறிந்த முனிவன் துக்கத்தைத் தாண்டுகின்றான்.

அந்நபூர்ணோபநிடதம்.

𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌷𑌯𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍁𑌖𑌾𑌦𑍍𑌵𑌯𑌮𑍍 ।

𑌏𑌕𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑍋𑌭𑌵𑍇𑌨𑍍𑌮𑍁𑌨𑌿𑌃 ॥

தத்வித்யாவிஷயப்ரஹ்ம ஸத்யஜ்ஞாநஸுகாத்வயம்

ஏகம்ப்ரஹ்மாஹமஸ்மீதி க்ருதக்ருத்யோபவேந்முநி:

வித்தைக்கு விஷயமானவனும் உண்மையறிவானந்தனும் அத்துவயனும் ஏகனுமான (பிரமமே) சிவனே யானென்று கிருதகிருத்தியனாகின்றான்.

துரீயாதீதாவதூதோபநிடதம்.

𑌅𑌹𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌕𑌲𑍍𑌪𑌕𑍋𑌟𑌿𑌶𑌤𑌾𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 ।

𑌸𑌂𑌚𑌿𑌤𑌂𑌵𑌿𑌲𑌯𑌂𑌯𑌾𑌤𑌿 ॥

அஹம்ப்ரஹ்மேதிவிஜ்ஞாநாத் கல்பகோடிஶதார்ஜிதம்

ஸஞ்சிதம்விலயம்யாதி

யானே சிவன் என்றறிதியானத்தால் அநேக கற்பங்களிற் சம்பாதிக்கப்பட்டுள்ள கருமங்கள் தொலைகின்றன என்பதாதியுபநிடதங்களாலும்,

ஸர்வஞானோத்தரவாகமம்.

யஶ்ஶிவஸ்ஸோஹமேவேதி அத்வயம்பாவயேத்ஸதா ॥

யஶ்ஶிவஸ்ஸோஹமேவேதி அத்வயம்பாவயேத்ஸதா

யாதொரு சிவன் யானே யென்று ஐக்கியபாவனை செய்க.

தேவிகாலோத்தரம்.

அஹமேவபரம்ப்ரஹ்ம ஜகந்நாதோமஹேஶ்வர: ।
இதிஸ்யாந்நிஶ்சிதோமுக்த: ॥

அஹமேவபரம்ப்ரஹ்ம ஜகந்நாதோமஹேஸ்வர:
இதிஸ்யாந்நிஸ்சிதோமுக்த:

ஜகந்நாதனும்பரப்பிரும்மமுமான மஹேச்சுரன் யானேஎன்று நிச்சயிப்பவன் முக்தனாகின்றான்.

இங்ஙனமே சதுர்வேத தாத்பர்ய ஸங்கிரகமூலமாய் ச்ருதி ஸூக்திரத்நமாலையில், ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் பரமென்று வேதம் பிரதி பாதித்ததற்குக் காரணம் கூறியவிடம்.

சதுர்வேததாற்பர்ய ஸங்கிரக ச்ருதிசூக்திரத்நமாலை.

ப்ரஹ்மோச்யதே பரமஸௌ பரமஞ்ச தத்வம் ஜ்யோதி:
பரஞ்ச பரமேஶ்வர பத்மநாப: । த்வத்பாவனைகபஜநாத்த்வ
தநந்யபாவாந்மந்த்ரீயதாகருட பாவநயாகருத்மாந் ॥

ப்ரஹ்மோச்யதேபரமஸௌ பரமஞ்சதத்வம் ஜ்யோதி:
பரஞ்சபரமேஸ்வர பத்மநாப: - த்வத்பாவனைகபஜநாத்த்வ
தநந்யபாவாந்மந்த்ரீயதாகருட பாவநயாகருத்மாந்

ஓ பரமேசுவரனே, கருடமந்திர உபாஸகன் கருடபாவனையால் எங்ஙனம் கருடத்தன்மை பெறுகின்றானோ அதுபோல உம்மினும் அந்நியன் என்ற பாவனையைவிட்டு உம்மோடு ஐக்கியபாவனையை ஏகாக்கிரமாய்ச் செய்ததனால் இப்பதுமநாபனான திருமால் பரப்ப்ருமமென்றும் பரமதத்துவமென்றும் பரஞ்சோதி யென்றும் கூறப்படுகின்றார் என்று சிவோகம்பாவனை மஹிமையாலேயே மஹா விஷ்ணுவை வேதமானது பரம் என்றும் சோதியென்றும் வழங்குகின்றது என்பதாதிப் பிரமாணங்களாலும்,

### திருவாசகம்.

சிவனென யானும் தேறினன் காண்க.

எனும் திராவிட வேதத்தானும்,

### திருமந்திரம்.

கருட னுருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற்
குருவி னுருவங் குறித்தவப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே.

எனும் திருமந்திர மாலையானும்,

### சிவஞானசித்தியார்.

கண்டவிவை யல்லேனா னென்றகன்று காணாக்
    கழிபரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த
தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே
    சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றன்றி
விண்டகலு மலங்களெல்லாங் கருடதியா னத்தின்
    விடமொழியு மதுபோல விமலதையு மடையும்
பண்டைமறை களுமதுநா னானே னென்று
    பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

எனுந் திராவிடோபநிடதத்தானும் காண்க.

### ஸ்லோகம்.

𑌅𑌤𑌿𑌸𑍍𑌵𑌲𑍍𑌪𑌤𑌰𑌾𑌯𑍁𑌃𑌶𑍍𑌰𑍀𑌰𑍍𑌭𑍂𑌦𑍇𑌶𑌾𑌂𑌶𑌾𑌧𑌿𑌪𑍋𑌽𑌪𑌿𑌯𑌃
𑌸 𑌤𑍁 𑌰𑌾𑌜𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌵𑌾𑌦𑌿𑌨𑌂 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌸𑌾𑌨𑍍𑌵𑌯𑌮𑍍 ॥ (௩௦)

அதிஸ்வல்பதராயுஶ்ரீர்பூதேஶாம்ஶாதிபோபியஃ
ஸதுராஜாஹமஸ்மீதிவாதிநம்ஹந்திஸாந்வயம்

வியாக்யானம்—பூதேஶாம்ஶாதிபோபி - மனிதனுக்கு அதிபனாயுள்ளவனும், அதிஸ்வல்பதராயுஶ்ரீஃ - மிக்க வற்பமானவாயுளையும் செல்வத்தையு முடையோனுமாய், யஃ - யாதொருவனுளனோ, ஸஃது - அவனோவெனின், அஹம் - யான், ராஜா அஸ்மீ இதி - அரசனாகின்றேனென்று, வாதினம் - சொல்லுகின்றவனை, ஸாந்வயம் - அவனுடைய வினத்தோடுகூட, ஹந்தி - கொல்லுகின்றான்.

பொழிப்புரை—மனிதருக்கே யதிபனாயும் மிக்க வற்பவாயுளையும் செல்வத்தையும் உடையோனா யெவனுளனோ? அவன் யானே அரசன் என்று கூறுவோனை அவனினத்தோடுகூடவதைக்கின்றான்.

ஸ்லோகம்.

[illegible] ।
[illegible] ॥ (௩௧)

கர்த்தாபிஸர்வலோகாநா மக்ஷயைய்ஸ்வர்யவாநபி
ஶிவஶ்ஶிவோஹமஸ்மீதி வாதிநம்யஞ்சகஞ்சந

ஸ்லோகம்.

[illegible] ।
[illegible] ॥ (௩௨)

ஆத்மநாஸஹதாதாத்ம்ய பாகிநம்குருதேப்ருஶம்
தர்மார்த்தகாமமோக்ஷாணாம் பாரம்யாஸ்யதயேநவை

வியாக்யானம்—ஸர்வலோகாநாம் - எல்லா வுலகங்களுக்கும், கர்த்தா அபி - படைப்போனாயினும், அக்ஷயைசுவர்யவாநபி - குன்றாத வைசுவர்யத்தை யுடையவனாயினும், ஶிவ: - சிவபெருமான், ஶிவோஹம் அஸ்மி இதி - சிவனேயாகின்றே னென்று, வாதிநம் - கூறுவோனை, யஞ்சகஞ்சந - எவனையும், ஆத்மநாஸஹ - தன்னோடுகூட, ப்ருஶம் - நன்றாய், தாதாத்ம்ய பாகிநம் - தாதான்மியத்தை யடைவோனாக, குருதே - செய்கின்றான், யேநவை - எதனாலேயே, தர்மார்த்த காமமோக்ஷாணாம் - அறம்பொருளின்ப வீடுகளின், பாரம் - கரையை, யாஸ்யத - அடைவீர்களோ.

பொழிப்புரை—எல்லா வுலகங்களையும் படைப்போ னாயினும் சிவபெருமான் ஶிவோஹம் என்று கூறுவோனை எம்மனிதனையும் தன்னோடு நன்கைக்கியப் படுத்திக் கொள்ளுகின்றார் அறம்பொருளின்ப வீடுகளின் கரையை எதனாலேயே யடைவீர்களோ.

இங்கு தாதான்மியம் என்றதனால் முக்தியென் றறிக. இம் முக்தியே பரமுக்தி யென்றும் கூறப்படுவதாம்.

ஸ்லோகம்.

[illegible] ।

முநயஸ்தத்ப்ரவக்ஷ்யாமி வ்ரதம்பாஶுபதாபிதம்

வியாக்யானம்—முநய: - ஓ முனிவர்களே, பாசுபதாபிதம் - பாசுபதம் என்று பெயர்பெற்ற, தத் - அந்த, வ்ரதம் - விரதத்தை, ப்ரவக்ஷ்யாமி - உரைக்கின்றேன்.

பொழிப்புரை—ஓ முனிவர்களே, பாசுபதமென்று வழங்கு மவ் விரதத்தை யுரைக்கின்றேன்.

பிரமாணம்—இனிப் பாசுபத விரதமானது யாதெனின்,

𑌵𑍍𑌰𑌤𑌮𑍇𑌤𑌤𑍍𑌪𑌾𑌶𑍁𑌪𑌤𑌂 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑌿𑌤𑌿𑌭𑌸𑍍𑌮 𑌵𑌾𑌯𑍁𑌰𑌿𑌤𑌿𑌭𑌸𑍍𑌮 𑌜𑌲𑌮𑌿𑌤𑌿𑌭𑌸𑍍𑌮 𑌸𑍍𑌥𑌲𑌮𑌿𑌤𑌿𑌭𑌸𑍍𑌮 𑌵𑍍𑌯𑍋𑌮𑍇𑌤𑌿𑌭𑌸𑍍𑌮 𑌸𑌰𑍍𑌵𑌂𑌵𑌾𑌇𑌦𑌂 𑌭𑌸𑍍𑌮 𑌮𑌨𑌏𑌤𑌾𑌨𑌿 𑌚𑌕𑍍𑌷𑍂𑌂𑌷𑌿𑌭𑌸𑍍𑌮𑌾𑌨𑌿 । 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌭𑌸𑍍𑌮𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾, 𑌵𑌿𑌮𑍃𑌜𑍍𑌯𑌾𑌙𑍍𑌗𑌾𑌨𑌿𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌶𑍇𑌤𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌵𑍍𑌰𑌤𑌮𑍇𑌤𑌤𑍍𑌪𑌾𑌶𑍁𑌪𑌤𑌂 𑌪𑌶𑍁𑌪𑌾𑌶𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯

வ்ரதமேதத்பாசுபதம் அக்நிரிதிபஸ்ம வாயுரிதிபஸ்ம ஜலமிதிபஸ்ம ஸ்தலமிதிபஸ்ம வ்யோமேதிபஸ்ம ஸர்வம்வாஇதம் பஸ்ம மநஏத்யேதாநி சக்ஷூம்ஷிபஸ்மாநி - அக்நிரித்யாதிநா பஸ்மக்ருஹீத்வா, விம்ருஜ்யாங்காநிஸம்ஸ்ப்ருசேத் தஸ்மாத் வ்ரதமேதத்பாசுபதம் பசுபாசவியோக்ஷாய என்றுகூறிய அதருவசிரோபநிடதாதி வாக்கியங்களாலும்,

சூதஸம்கிதை.

𑌪𑍁𑌨𑌸𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌚𑍍𑌛𑌿𑌵𑌜𑍍𑌞𑌾𑌨 𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌂𑌮𑍁𑌨𑌿𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑌾𑌃 ।
𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌸𑌮𑍁𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌂 𑌭𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌯𑌾𑌦𑌰𑍇𑌣𑌚 ॥
புநஸ்ஸாக்ஷாச்சிவஜ்ஞாந ஸித்யர்த்தம்முநிபுங்கவா:
அக்நிஹோத்ரஸமுத்பந்நம் பஸ்மாதாயாதரேணச

என்பதாதி வாக்கியங்களாலும் பிரதி பாதிக்கப்பட்டுள தறிக.

நுட்பம்—பாசுபதம், பிரதம், சிரோமிரதம், அத்தியாசிரமம், சாம்பவம், ஐசுவரம் என்பன பாசுபத விரதத்திற்குப் பெயராகச் சூதசங்கிதையிலேயே கூறப்பட்டிருக்கின்றன. இதனால் பசுமம், ஐசுவரியம், ஐசுவரம் என்பனவும் (பாதாதி கேசாந்தம் அக்கினி முதலிய மந்திரங்கொண்டு தரிக்கப்படும்) விபூதி விரதமாகிய பாசுபதவிரதத்துக்குப் பெயராமென்க. இந்த விபூதி விரதானுஷ்டான வாயிலாக உமாசமேதராகிய சிவபெருமான் தியானிக்கப்படுங்கால் இந்த யோகம் பாசுபத யோகமெனப் படுமென்க.

ஶ்லோகம்.

𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌤𑍁𑌵𑌿𑌰𑌜𑌾𑌂𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌂 𑌭𑍂𑌤𑌿𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌧𑌾𑌰𑌿𑌣𑌃 ॥ (௩௩)
க்ருத்வாதுவிரஜாந்தீக்ஷாம் பூதிருத்ராக்ஷதாரிண:

𑌜𑌪𑌨𑍍𑌤𑍋 𑌵𑍇𑌦𑌸𑌾𑌰𑌾𑌖𑍍𑌯𑌂 𑌶𑌮𑍍𑌭𑍋𑌰𑍍𑌨𑌾𑌮𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑌮𑍍 ।
𑌸𑌨𑍍𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌤𑍇𑌨 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌦𑍈𑌵𑍀𑌂 𑌤𑌨𑍁𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥 ॥ (௩௪)

ஜபந்தோவேதஸாராக்யம் ஶம்போர்நாமஸஹஸ்ரகம்
ஸந்த்யஜ்யதேநமர்த்யத்வம் தைவீந்தநுமவாப்ஸ்யத

வியாக்யானம்—விரஜார் தீக்ஷாம் - விரசாதீக்ஷையை, க்ருத்வா - செய்து, பூதிருத்ராக்ஷதாரிணஃ - விபூதி ருத்திராக்கங்களைத் தரித்தவர்களாய், வேதஸாராக்யம் - வேதஸாரமென்று பெயர் பெற்ற, ஶம்போஃ நாமஸஹஸ்ரகம் - சிவஸஹஸ்ர நாமத்தை, ஜபந்தோ - ஜபித்தவர்களாய்க் கொண்டு (இருங்கள்), தேந - அதனால், மர்த்யத்வம் - மனிதத்தன்மையை, ஸந்த்யஜ்ய - துலைத்து, தைவீம் தநும் - தெய்வத்தன்மை பெற்ற தேகத்தை, அவாப்ஸ்யத - அடைவீர்கள்.

பொழிப்புரை—விரசாதீக்ஷையைச் செய்து விபூதி ருத்திராக்கங்களை யணிந்தவர்களாய் வேதஸாரமென்ற சிவஸஹஸ்ர நாமத்தைச் செபம் செய்துகொண் டிருங்கள். அதனால் மனிதத் தன்மையைத் துலைத்துச் சிவனருள் பாலிக்க யோக்கியமான தேகத்தைப் பெறுவீர்கள்.

நுட்பம்—இங்கு மனிதத்தன்மையைத் துலைத்து என்றதனால் மனதின் அழுக்கைத் துலைத்து என்றும் தெய்வத் தன்மைபெற்ற என்றதனால் சிவனருள் பாலிக்க யோக்கியமான என்றும் கொள்க.

ஶ்லோகம்.

𑌤𑌤𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑍋 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌶𑌙𑍍𑌕𑌰𑍋 𑌲𑍋𑌕𑌶𑌙𑍍𑌕𑌰𑌃 ।
𑌭𑌵𑌤𑌾𑌂 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑌾𑌮𑍇𑌤𑍍𑌯 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌂 𑌵𑌃 𑌪𑍍𑌰𑌦𑌾𑌸𑍍𑌯𑌤𑌿 ॥ (௩௫)

ததஃப்ரஸந்நோபகவாந் ஶங்கரோலோகஶங்கரஃ
பவதாந்த்ருஶ்யதாமேத்ய கைவல்யம்வஃப்ரதாஸ்யதி

வியாக்யானம்—ததஃ - பின்னர், லோகசங்கரஃ - உலகெல்லாவற்றிற்கும் சுகமளிப்போனான, பகவான் - பகவனான, சங்கரஃ - சிவபெருமான், பவதாம் - உங்களுக்கு, த்ருச்யதாம் - காணப்படுந் தன்மையை, ஏத்ய - பெற்று, (பிரஸந்நராய்த் தோன்றி) கைவல்யம் - முக்தியை, வஃ - உங்களுக்கு, ப்ரதாஸ்யதி - அளித்தருளுவார்.

பொழிப்புரை—பின்னர் உலகமனைத்தினுக்கும் சுகமளிப்போனான பகவானாகிய சிவபெருமான் உங்கள் முன்னிலையில் பிரஸந்நராயாவிர்ப்பவித்துக் கைவல்ய மெனும் முக்தியை யுங்களுக் களித்தருளுவார்.

ஶ்லோகம்.

𑌰𑌾𑌮𑌾𑌯𑌦𑌣𑍍𑌡𑌕𑌾𑌰𑌣𑍍𑌯𑍇 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌦𑌾𑌤𑍍𑌕𑍁𑌮𑍍𑌭𑌸𑌂𑌭𑌵𑌃 ।
𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂𑌵𑌃𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌶𑍃𑌣𑍁𑌧𑍍𑌵𑌂𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ॥ (௩௬)

ராமாயதண்டகாரண்யே யத்ப்ராதாத்கும்பஸம்பவ:
தத்ஸர்வம்வ:ப்ரவக்ஷ்யாமி ஶ்ருணுத்வம்பக்தியோகிந:

வியாக்யானம்—தண்டகாரண்யே - தண்டகாரண்யத்தில், கும்பஸம்பவ: - குடபவமுனிவராகிய வகத்தியர், ராமாய-ராமன்பொருட்டு, யத் - யாதொன்றை, ப்ராதாத் - உபதேசம் புரிந்தாரோ, தத் ஸர்வம் - அதெல்லாவற்றையும், வஃ - உங்களுக்கு, ப்ரவக்ஷ்யாமி - கூறுகின்றேன், பக்தியோகிநஃ - பக்திபுடையவர்களாய், ஶ்ருணுத்வம் - கேளுங்கள்.

பொழிப்புரை — தண்டகாரண்யத்தில் அகத்தியமா முனிவர் ராமன் பொருட்டு எதை யுபதேசித்தனரோ, அஃதெல்லாவற்றையு முங்களுக் குரைக்கின்றேன் நீங்கள் பக்தி யுடையோர்களா யிருந்து கேளுங்கள்.

பக்தியோகவத்தியாய முற்றிற்று.

---

உ

சிவாப்யாம்நமஃ

## இரண்டாவது

## வைராக்கியயோக அத்தியாயம்.

---

ருஷிகள்வினா.

𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌮𑌾𑌗𑌤𑍋𑌗𑌸𑍍𑌤𑍍𑌯𑍋 𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌿𑌮𑍍 ।
𑌕𑌥𑌂𑌵𑌾𑌵𑌿𑌰𑌜𑌾𑌂𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌂 𑌕𑌾𑌰𑌯𑌾𑌮𑌾𑌸𑌰𑌾𑌘𑌵𑌮𑍍 ॥ (௧)

கிமர்த்தமாகதோகஸ்த்யோ ராமசந்த்ரஸ்யஸந்நிதிம்
கதம்வாவிரஜாந்தீக்ஷாம் காரயாமாஸராகவம்

வியாக்யானம்—அகஸ்த்யஃ- அகத்தியமா முனிவர், கிமர்த்தம்- எதற்காக, ராமசந்த்ரஸ்ய - இராமனது, ஸந்நிதிம்- எதிரில், ஆகதஃ- வந்தார், விரஜாம்தீக்ஷாம் - விரஜாதீக்ஷையை, ராகவம் - ராமனுக்கு, கதம்வா - எங்ஙனம், காரயமாஸ - செய்துவைத்தார்.

பொழிப்புரை—ருஷிகள் கேட்கின்றனர். அகத்தியமா முனிவர் எதற்காக ராமனிடம் வந்தார். விரசாதீக்கையை ராமனுக் கெவ்வி தம் செய்து வைத்தார்.

ஸ்லோகம்.

ததஃகிமாப்தவாந்ராமஃ ஃலந்தத்வக்துமர்ஹஸி ।
ராவணேநயதாஸீதா ஹ்ருதாஜநகாத்மஜா ॥ (௨)

ததஃகிமாப்தவாந்ராமஃ பலந்தத்வக்துமர்ஹஸி
ராவணேநயதாஸீதா ஹ்ருதாஜநகாத்மஜா

ஸ்லோகம்.

ததாவியோகதுஃகேந விலபந்நாஸராகவஃ ।
நிர்நித்ரோநிரஹங்காரோ நிராஹாரோதிவாநிஶம் ॥ (௩)

ததாவியோகதுஃகேந விலபந்நாஸராகவஃ
நிர்நித்ரோநிரஹங்காரோ நிராஹாரோதிவாநிஶம்

வியாக்யானம்—தத: - அதனால், ராம: - ராமன், கிம் பலம் - என்னபயனை, ஆப்தவாந் - அடைந்தான், தத் - அதை, வக்தும் - சொல்லுவதற்கு, அர்ஹஸி- யோக்கியமாகின்றீர்கள். ஜநகாத்மஜா- ஜநகன் பெண்ணாகிய, ஸீதா- ஸீதையானவள், ராவணேந - ராவணனால், யதா - எப்பொழுது, ஹ்ருதா - அபகரிக்கப்பட்டாளோ.

ததா - அப்போது, வியோகது:கேந - பிரிவாற்றாமையா லுண்டாய துக்கத்தால், ராகவ: - இராமர், திவாநிஶம்-இரவும் பகலும். நிர்நித்ர: - நித்திரை யற்றவராயும், நிரகங்கார: - அகங்கார மற்றவராயும், நிராஹார: - ஆகார மற்றவராயும், விலபந்- புலம்பிக்கொண்டும், ஆஸ - இருந்தார்.

பொழிப்புரை— அதனால் ராமன் என்ன பயனை யடைந்தான் அதைத் தாங்கள் சொல்லுவீர்களாக. ஜனகன் பெண்ணாகிய ஸீதை யானவள் ராவணனால் எப்பொழுது அபகரிக்கப்பட்டாளோ.

அப்போது பிரிவாற்றாமையா லுண்டாய துக்கத்தால் ராமன் இரவும் பகலும் நித்திரையற்றும் அகங்காரமற்றும் ஆகாரமற்றவனாகவு மிருந்து புலம்பிக்கொண் டிருந்தார்.

இராமாயணம்.

சாயுந் தம்பி திருத்திய தண்டளிர்
தீயு மங்கவை தீர்கெனுஞ் செவ்விருந்

தாயு மாவி புழுங்க வழுங்குமால்
வாயு நெஞ்சும் புலர மயங்குவான்.

பிரிந்த வேதுகொல் பேரபி மானங்கொல்
தெரிந்த தில்லை திருமலர்க் கண்ணியைப்
பொருந்த வாயிரங் கற்பங்கள் போக்குவான்
இருந்து கண்டிலன் கங்குலி னீறரோ.

ஸ்லோகம்.

மொக்ஷமைச்சத்ததஃப்ராணாந் ஸாநுஜோரகுநந்தநஃ ।
லோபாமுத்ராபதிர்ஜ்ஞாத்வா தஸ்யஸந்நிதிமாகமத் ॥ (௪)

மோக்துமைச்சத்ததஃப்ராணாந் ஸாநுஜோரகுநந்தநஃ
லோபாமுத்ராபதிர்ஜ்ஞாத்வா தஸ்யஸந்நிதிமாகமத்

வியாக்யானம்—ததஃ - பிறகு, ஸாநுஜ:- சகோதரனுடன்கூடிய, ரகுநந்தநஃ - ராமன், ப்ராணாந் - பிராணங்களை, மோக்தும் - துறப்பதற்கு, ஐச்சத் - விரும்பினான், லோபாமுத்ராபதிஃ- அகத்தியமாமுனிவர், ஞாத்வா - அறிந்து, தஸ்ய - அவ்விராமனது, ஸந்நிதிம் - சந்நிதியை (எதிரில்), ஆகமத் - அடைந்தார்.

பொழிப்புரை—பிறகு சகோதரனுடன் கூடிய ராமன் உயிர் துறக்க விரும்பினான். அகஸ்தியமாமுனிவ ரிதையறிந்து ராமனுக்கெதிரில் தோன்றினார்.

ஸ்லோகம்.

அதைநம்போதயாமாஸ ஸம்ஸாராஸாரதாம்முநிஃ ।
கிம்விஷீதஸிராஜேந்த்ர காந்தாகஸ்யவிசார்யதாம் ॥ (௫)

அதைநம்போதயாமாஸ ஸம்ஸாராஸாரதாம்முநிஃ
கிம்விஷீதஸிராஜேந்த்ர காந்தாகஸ்யவிசார்யதாம்

வியாக்யானம்—அத - பின்னர், முநிஃ - முனிவர், ராமம் - ராமனை (ராமனுக்கு), ஸம்ஸாரா ஸாரதாம் - ஸம்ஸாரம் துச்சமென்பதை, போதயாமாஸ - போதித்தார், ராஜேந்த்ர - ஓ அரசருள் சிறந்தவனான ராமா, கிம் - ஏன், விஷீதஸி - துக்கிக்கின்றனை, காந்தா- காதலி யென்கின்றனையே அவள், கஸ்ய - யாருக்கு, விசார்யதாம் - விசாரித்தறியத் தக்கது (என்றனர்) அகஸ்தியர்.

பொழிப்புரை—பிறகு, முனிவர் ராமனுக்குச்சம்ஸாரம் துச்சம் என்பதைப் போதனை செய்தார். அகத்தியர் கூறியதாவது அரச

ருள் சிறந்தவனை ஓ ராமனே மனைவி யென்கின்றனையே அவள் யாருக்கென்று விசாரித்தறியத் தக்கது.

நுட்பம்—இங்கு விசாரித்தறியத் தக்கது என்றதனால் ஞானி நிலையின் வழி விசார உருவமாய்ப் போதிக்கின்றார் என்பதறியக் கிடக்கிறது, ஈண்டு அனுபவம்இருவகையாம். அஞ்ஞானியின் அனுபவம் ஒன்று; மற்றொன்று ஞானியின் அனுபவம். பாசத்தால்கட்டுண்டவன் அஞ்ஞானி, பாசநீங்கிச் சிவஞானம் பெற்றவன் ஞானியாம். பாசபந்தமுள்ள வரையில் சீவத்துவமுளது. பாசமானது அஞ்ஞானம் ஆவிருதி மலம் மாயை ஸம்ப்தி மஹாமோஹம். அவித்தியை என்பதாதிச் சொற்களால் வழங்கப்படுவதாம். இம்மாயையின் வசப்பட்டு அல்லற்படுவோர்களே சீவர்களாம் பசுக்களென்றும் வழங்குவதுண்டு. இதற்குக்காரணம்,

ஜாபாலியுபநிடதம்.

பிரமாணம்—கயம்ஜீவாஃபஶவஇதி கயம் தத்பதிரிதிஸ தஊவாச யதா தருணாஶிநோ விவேகஹீநாஃ பரப்ரேஷ்யாஃ க்ருஷ்யாதிகர்மஸு நியுக்தாஃ ஸகலதுஃகஸஹாஸ்ஸ்வஸ்வாமிபத்யமாநாஃ கவாதயஃபஶவஃ யதா தஸ்வாமிநஇவ ஸர்வஜ்ஞஈஶஃபஶுபதிஃ ॥

கதம்ஜீவாஃபஶவஇதி கதந்தத்பதிரிதிஸதமுவாச யதாத்ருணாஶிநோ விவேகஹீநாஃ பரப்ரேஷ்யாஃ க்ருஷ்யாதிகர்மஸு நியுக்தாஃ ஸகலதுஃகஸஹாஸ்ஸ்வஸ்வாமிபத்யமாநாஃ கவாதயஃபஶவஃ யதாதஸ்வாதாமிநஇவ ஸர்வஜ்ஞஈஶஃபஶுபதிஃ

சீவர்களைப் பசுக்களென்றும் ஈச்சுரனை பசுபதியென்றும் ஏன் கூறப்படுகின்றது என்று வினவப்பதில் கூறியதாவது.எங்ஙனம் புற்களைப் புசிப்பனவும் விவேகமற்றனவும் பிறனால் ஏவப்படுகின்றனவும் சகிப்பனவும் தனது எஜமானனால் கட்டப்படுவனவுமாய்ப்பசுக்களுளவோ அவ்விதமே பசுக்களான சீவர்களாம் அவைகளின் எஜமானன்போல ஸர்வஞ்ஞனும் இறைவனுமாகிய பசுபதியாம், என்பதாதி மறைமொழிகளைக் கண்டறிக. இங்ஙனம் ஸம்ஸார பந்தத்தில் கிடந்துழலும் சீவர்களின் நிலையே(அனுபவமே)அஞ்ஞானிநிலையாம்.

ஞானிநிலையாவது ஈதெல்லாம் மாயாவிகாரம் துச்சமென்றொதுக்கித்தள்ளிப் பேரின்பமான சிவானந்தத்தைப் பெறுதற்குறிய

வுபதேசாதியை யோர் ஆசிரியரிட மிருந்து பெற்றுச் சிவபெருமானது உபாஸனையால் நிகழுவதான அவனது அருளால் ஞானத்தைப் பெற்றுச் சுகிக்கும் பெரியோர்களின் அனுபவம் அல்லது நிலையேயாம். இங்குச் சீதையைவிட்டுப் பிரிந்து துக்கித்துக் கொண்டிருக்கும் ராமனுக்கு ஞானிநிலையை யுபதேசித்துத் துக்கத்தை விலக்குவதற்காக, முனிவர் ஓ ராமனே நீ இங்ஙனம் துக்கித்தல் யுக்தமன்று. மனைவியை யிழந்தேன் என்கின்றனையே மனைவியாவது யார் எவனுக்கு அதைச் சற்று யோசித்துப்பார், அங்ஙன மாராய்ந்து பார்க்குங்கால் மனைவியென்பதும் கணவனென்பதும் சித்தியாது ஞானிக்குச் சகலமும் சிவமென்று தோன்றுமே யொழிய வேறு தோற்றாது ஆதலின் சகலத்தையும் ஸீதாதேவியாய்ப் பார்க்காமல் சற்று யோஜனை செய்துபார் என்பதாதி ஞானியின் நிலையா மனுபவத்தைக் கூறினர்.

ஸ்லோகம்.

ஜடஃகிம் நவிஜாநாதி தேஹோயம்பாஞ்சபௌதிகஃ ।
நிர்லேபஃபரிபூர்ணஶ்ச ஸச்சிதாநந்தவிக்ரஹஃ ॥ (௬)

ஜடஃகிம்நவிஜாநாதி தேஹோயம்பாஞ்சபௌதிகஃ
நிர்லேபஃபரிபூர்ணஸ்ச ஸச்சிதாநந்தவிக்ரஹஃ

வியாக்யானம்—பாஞ்சபௌதிகஃ - ஐம்பூதங்களினின்றுண்டாய, அயம் தேஹஃ - இச்சடலம் (தேகம்), ஜடஃ - சடமென்று, நவிஜாநாதிகிம் - (நீ) யறியவில்லையா என்ன, நிர்லேபஃ-அஸங்கனும், பரிபூர்ணஃ - வியாபகனும், ஸச்சிதானந்த விக்ரஹஃ - உண்மையறிவானந்த வடிவனுமாகிய,

பொழிப்புரை—பஞ்சபூதங்களினின்றுந் தோன்றிய இச்சரீரம் சடமென்பதை நீ யறியாயாவென்ன, அசங்கனும் வியாபகனும் சச்சிதானந்தனுமாகிய,

ஸ்லோகம்.

ஆத்மாஸஞ்ஜாயதே நைவ ம்ரியதே நசதுஃகபாக் ।
ஆத்மாஸஞ்ஜாயதே நைவம்ரியதேநசதுஃகபாக்

வியாக்யானம்—ஆத்மா - ஆன்மா, நஸஞ்ஜாயதே ஏவ - உண்டாவதேயில்லை. நம்ரியதே - (மறுபடியும் இறப்பதுமில்லை), துஃகபாக்சந - துக்கமுடையதுமில்லை,

பொழிப்புரை—ஆன்மா பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை துக்கியுமல்ல.

நுட்பம்—ஈண்டுக் கூறப்பட்ட ஆன்மாசீவான்மாவேயாம். இனி சீவான்மாவுக் கிங்குகூறப்பட்ட அசங்க பரிபூரண ஸச்சிதாநந்த உருவமும் துக்கமற்றிருத்த லென்பதும் எங்ஙனமொவ்வும் எனின் ஒவ்வாதென்பதே யுண்மையென்க. ஆயினும் இங்கு பாசபந்தம்பெற்று அல்லற்படுஞ் சீவர்களின் பசுத்துவ நிலையான அஞ்ஞானி நிலையைநோக்கிக் கூறப்பட்டதல்ல. பாசநீங்கிய முத்தான்மாக்களின் நிலையாகிய ஞானிநிலையை நோக்கியே கூறப்பட்டது. இங்கிஃதறியற்பாலது சீவன், சிவன், பாச மல்லது மாயை இவைகள் மூன்றும் அனாதியேயாம்.

பிரமாணம்— சூதஸம்கிதை.

𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌪𑌶𑌵𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯𑌜𑌗𑌤𑌃𑌕𑌰𑍍𑌤𑌾 𑌪𑌶𑍋𑌰𑌨𑍍𑌯𑌃𑌪𑌰𑌶𑍍𑌶𑌿𑌵𑌃 ॥
𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍇𑌷𑌾 𑌅𑌨𑌾𑌦𑍍𑌯𑍇𑌵𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌃 ॥

ஆத்மாநःபஶவஸ்ஸர்வே ப்ரோக்தா அஜ்ஞாநிநஸ்ததா
விஶ்வஸ்யஜகதःகர்த்தா பஶோரந்யःபரஶ்ஶிவ:
அஜ்ஞாநமாத்மநாமேஷா மநாத்யேவஸ்வபாவத:

ஆன்மாக்க ளெல்லோரும் அஞ்ஞானிக ளாதலால் பசுக்க ளென்னப்படுவார்கள். எல்லாச் சகத்திற்கும் கர்த்தா பசுக்களுக் கந்நியனன பரசிவனேயாம். இவர்களுக்குள்ள வஞ்ஞான மனாதியேயாம்.

திருமந்திரம்.

பதிபசு பாச மெனப்பகர் மூன்றில்
பதியி னைப்போல் பசுபாச மனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணுகிற் பசுபாச நிலாவே.

என்பனவற்று லறிக. இங்ஙன மனாதியான சீவனது அனாதி சிவத்துவத்தை யனாதியாய்த் தடைப்படுத்திக் கொண்டிருக்கு மாணவமான அஞ்ஞானமானது நீங்கினல் தடைப்பட்டிருந்தசிவத்துவம் அபிவியத்தமாம். இவ்வாறு அபிவியத்தமான சிவத்துவத்தை யுடைய சீவர்களே முக்தர்களாம்.

திருமந்திரம்.

அணுதி சிவரூப மாகிய வான்மாத்
தனுதி மலத்தாற் றடைப்பட்டு நின்றது
தனுதி மலமுந் தடையற்ற போதே
யணுதி சிவ ரூபமாகிய வாறே.

என்றபடி இத்தகைய முத்தான்மாவினிலை துக்க மற்ற நிலையா தலின் ஈண்டு அதைக் கூறியதறிக.

ஸ்லோகம்.

ஸூர்யோஸௌஸர்வலோகஸ்ய சக்ஷுஷ்ட்வேநவ்யவஸ்தித꞉॥ (எ)

ஸூர்யோஸௌஸர்வலோகஸ்ய சக்ஷுஷ்ட்வேநவ்யவஸ்திதஃ
ததாபிசாக்ஷுஷைர்தோஷைர்நகதாசித்விலிப்யதே।
ஸர்வபூதாந்தராத்மாபி தத்வத்து꞉கைர்நலிப்யதே॥ (அ)

ததாபிசாக்ஷுஷைர்தோ ஷைர்நகதாசித்விலிப்யதே
ஸர்வபூதாந்தராத்மாபி தத்வத்துஃகைர்நலிப்யதே

வியாக்யானம்—அஸௌ ஸூர்யஃ - இச்சூரியனானவன், ஸர்வ லோகஸ்ய - எல்லா வுலகிற்கும், சக்ஷுஷ்ட்வேநவ் யவஸ்திதஃ - கண்ணின் தன்மையுடையோனாகத் தீர்மானிக்கப் பட்டவன் (ஆகின்றான்), ததாபி - அங்ஙனமாயினும், சாக்ஷுஷைஃ தோஷைஃ - கண் சம்பந்தமான குற்றங்களால், கதாசித் - ஒருக்காலும், நவிலிப்யதே - சம்பந்திப்பதில்லை. ஸர்வபூதாந்தராத்மாபி - எல்லாப் பூதங்களினுள் நிற்கின்றவனான வான்மாவாயினும், தத்வத் - அதுபோலவே, துக்கைஃ - துக்கங்களோடு, நலிப்யதே - சம்பந்திப்பதில்லை.

இச்சூரியன் எல்லா வுலகினுக்குங் கண்ணாயினும் கண்களின் குற்றங்களா லெங்ஙனம் சம்பந்திப்பதில்லையோ, அங்ஙனமே எல்லாப் பூதங்களினுள் ஆன்மா நிற்கும் பொருளாயினும் துக்கங்களோடு பொருந்துவதில்லை.

இனி முற்சுலோகத்தில் கூறிப்போந்த ஞானி நிலையாவது; சீவத்துவம் நீங்கிச் சிவத்துவ மபிவ்யக்த மானவர்களின் நிலையே யாம். அதாவது சிவாநந்தாநுபவ நிலையேயென்க. இதையே,

பிரமாணம்— தைத்திரீயோபநிடதம்.

ப்ரஹ்மவித்ப்ரஹ்மைவபவதி; ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்ம

ப்ரஹ்மவித்ப்ரஹ்மைவபவதி ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்ம

பிரும்மத்தை (சிவத்தை) யறிந்தவன் பிரும்ம (சிவ) மாகின்ருன். சத்தியமாயும் ஞானமாயும் அனந்தமாயு முள்ளது பிரும்மம்.

திருமந்திரம்.

சிவமா யவமான மும்மலந் தீரப்
பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானனந்தத்தே
துவமார் துரியஞ் சொருபம தாமே.

என்பதாதி மறைமொழிகளா லிங்கிலேயே பிரதி பாதிக்கப்பட்டுளது. இத்தகைய நிலைமையிலிலேயே தடைப்பட்டிருந்த சச்சிதாநந்தம் தோற்ற முற்றுச் சிவமாவது. சிவத்திற்குத் துக்கமென்பதே யணுகாவாதலின், சிவத்துவம் பெற்ற ஞானிக்கும் துக்கமணுகாது என்பதாம்.

கடவல்லியுபநிடதம்.

𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌯𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌚𑌾𑌕𑍍𑌷𑍁-
𑌷𑍈𑌰𑍍𑌬𑌾𑌹𑍍𑌯𑌦𑍋𑌷𑍈𑌃 ॥

ஸூர்யோயதாஸர்வலோகஸ்ய சக்ஷுர்நலிப்யதேசாக்ஷு
ஷைர்பாஹ்யதோஷை:

ஸருவ பூதங்களுக்கு மந்தரான்மாவாயினும் ஸருவபூதங்களின் குற்றங்களோடு சம்பந்திப்பதில்லை யென்பதற்கு மட்டும் இங் குதாரணம் கூறப்பட்டதறிக.

அவதாரிகை.

இங்ஙனம் ராமனைப் பார்த்து அகத்தியமா முனிவர் ஓ ராமனே சீதையெனும் காந்தையை விட்டுப் பிரிந்து விட்டேன் நான் மிகவும் துக்கியென்கின்றனையே சீதையின் தேகத்தின் பிரிவாற்றுமையால் துக்கத்தை யனுபவிக்கின்றனையா? அல்லது சீதையின் ஆன்மாவின் பிரிவாற்றுமையா? என்று இருவித வினவைக் கேட்பதுபோல மனதில் கருதிப் பின்னர் சீதையின் ஆன்மாவை விட்டுப் பிரிந்தது பற்றித்துக்கத்தை யனுபவிக்கின்றே னென்பது குற்றமென்பதைச் சென்றசுலோகத்தால் நிரூபித்துஇனிச் சீதையின் தேகத்தைவிட்டுப் பிரிந்ததுபற்றி துக்கியென்பதும் யுக்தமல்லவென்று நிரூபிக்கின்ருர்.

ஸ்லோகம்.

[illegible] ।
[illegible] ॥

*தேஹோபிமலபிண்டோயம் முக்தஜீவோஜடாத்மக:*
*தஹ்யதேவஹ்நிநாகாஷ்டைஶ் ஶிவாத்யைர்பக்ஷ்யதேபிவா*

வியாக்யானம்—மலபிண்டம் - மலபிண்டமாயும், ஜடாத்மக: - சடவுருவா யுள்ளதும் (ஆகிய) அயம் தோஹோபி - இத்தேகமும், முக்தஜீவ: - உயிரை யிழந்து விட்டதானல், வஹ்நிநா - நெருப்பால், காஷ்டை: - கட்டைகளோடுகூட, தஹ்யதே - எரிக்கப்படுகின்றது, அதவா - அல்லது, ஶிவாத்யை: - நரி முதலியவைகளால், பக்ஷ்யதே - புசிக்கப்படுகின்றது.

பொழிப்புரை—மலபிண்டமாயும் சடமாயுமுள்ள இத்தேகமானது சீவனை யிழந்து விடுமாயின் தீயால் கட்டைகளோடு கூட தகிக்கப்படுகின்றது. அல்லது நரிமுதலியவைகளால் புசிக்கப்படுகின்றது.

திருவிளையாடல்.

நாய்நம தெனநரி நமதெனப் பிதா
தாய்தம தெனநமன் றனதெனப் பிணி
பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப் படும்யாக்கை யாரதே. என்றதனுற்காண்க.

ஶ்லோகம்.

𑌤𑌥𑌾𑌪𑌿 𑌨𑍈𑌵 𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌵𑌿𑌰𑌹𑍇 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾𑌵𑍍𑌯𑌥𑌾 ।
*ததாபிநைவஜாநந்தி விரஹேதஸ்யகாவ்யதா*

வியாக்யானம்— ததாபி - அங்ஙனமாயினும், நஜாநந்த்யேவ - அறிகின்றார்களில்லை. தஸ்ய - அத்தகைய சரீரத்தினது, விரஹே பிரிவில், காவ்யதா - எத்துக்கமுளது.

பொழிப்புரை—மலபிண்டமாயும் சடமாயும் நெருப்பிற்காவது நரி முதலியவைகளுக்காவது இரையாகிய தேகத்தை, அருகிலிருக்கப்பெறாது இழந்துவிட்டே னென்று கூறித் துக்கிக்கின்றனையே யிஃதுயுக்தமல்ல வென்று இங்குக் கூறியதா யறியற்பாலது.

அவதாரிகை,

இங்ஙனம் ராமனைக் குறித்துக் கூறி யினி யஞ்ஞானிகளது அநுபவ மயக்கத்தைப் பொதுவாகக் கூறுகின்றார்.

ஶ்லோகம்.

[illegible] ॥ (க௦)
[illegible] ।

ஸுவர்ணகௌரீ தூர்வாயா தளவச்யாமளாபிவா
பீநோத்துங்கஸ்தநாபோக புக்நஸூக்ஷ்மாவலக்நகா

வியாக்யானம்— ஸுவர்ணகௌரீ - பசும்பொன்னிற முடையாள், தூர்வாயாః, தளவத், (அல்லது) அருகம்புல்லின்தளம்போல ச்யாமளா - சாமள வர்ணமுடையவளும், பீநோத்துங்க ஸ்தநாபோக புக்நஸூக்ஷ்மாவலக்நகா - பருத்து முயர்ந்து முள்ளத் தனதடத்தால் வாட்டமுற்ற சிற்றிடையாளும்.

பொழிப்புரை—பசும்பொன்னிறமுடையாளும் அல்லது அருகம்புல்லின் தளம்போல சாமள வர்ணமுடையவளும் பருத்துமுயர்ந்து முள்ளத் தனதடத்தால் வாட்டமுற்ற சிற்றிடையாளும்.

ஶ்லோகம்.

𑌬𑍃𑌹𑌨𑍍𑌨𑌿𑌤𑌂𑌬𑌜𑌘𑌨𑌾 𑌰𑌕𑍍𑌤𑌪𑌾𑌦𑌸𑌰𑍋𑌰𑍁𑌹𑌾 ॥ (௧௧)
𑌰𑌾𑌕𑌾𑌚𑌂𑌦𑍍𑌰𑌮𑍁𑌖𑍀𑌬𑌿𑌂𑌬 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌂𑌬𑌰𑌦𑌚𑍍𑌛𑌦𑌾 ।
𑌨𑍀𑌲𑍇𑌂𑌦𑍀𑌵𑌰𑌨𑍀𑌕𑌾𑌶 𑌨𑌯𑌨𑌦𑍍𑌵𑌯𑌶𑍋𑌭𑌿𑌤𑌾 ॥ (௧௨)

ப்ருஹந்நிதம்பஜகநா ரக்தபாதஸரோருஹா
ராகாசந்த்ரமுகீபிம் பப்ரதிபிம்பரதச்சதா
நீலேந்தீவரநீகாஶ நயநத்வயஶோபிதா

வியாக்யானம்— ப்ருஹந்நிதம்பஜகநா - பருத்த பின்னிடையாளும், ரக்தபாதஸரோருஹா - சிவந்த பாதார விந்தத்தை யுடையாளும், ராகாசந்த்ரமுகீ - பூர்ண சந்திரன் போன்ற முகத்தினளும், பிம்பப்ரதி பிம்பரதச்சதா - கொவ்வைக்கனிக்கு நிகரான உதட்டை யுடையாளும், நீலேந்தீவர நீகாசநயநத்வயசோபிதா - நீலோத்பலத்திற்கு நிகரான கண்களால் விளங்குவாளும்.

பொழிப்புரை—பருத்த பின்னிடையாளும் சிவந்த பாதாரவிந்தத்தையுடையாளும் பூர்ண சந்திரன்போன்ற முகத்தினளும் கொவ்வைக்கனிக்கு நிகரான உதட்டை யுடையாளும் நீலோத்பலத்திற்கு நிகரான கண்களால் விளங்குவாளும்.

ஶ்லோகம்.

𑌮𑌤𑍍𑌤𑌕𑍋𑌕𑌿𑌲𑌸𑌲𑍍𑌲𑌾𑌪𑌾 𑌮𑌤𑍍𑌤𑌦𑍍𑌵𑌿𑌰𑌦𑌗𑌾𑌮𑌿𑌨𑍀 ।
𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑍈𑌰𑌨𑍁𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌮𑌾𑌂𑌪𑌂𑌚𑍇𑌷𑍁𑌶𑌰𑍋𑌤𑍍𑌤𑌮𑍈𑌃 ॥

மத்தகோகிலஸல்லாபா மத்தத்விரதகாமிநீ
கடாக்ஷைரநுக்ருஹ்ணதி மாம்பஞ்சேஷுஶரோத்தமைః

வியாக்யானம்—மத்தகோகில ஸல்லாபா - மதித்த குயிலினது போன்ற குரலுடையாளும், மத்தத்விரத காமிநீ - மதங்கொண்ட யானையினது போன்ற நடையாளும், ஆகிய இம்மங்கை, மாம் - என்னை, பஞ்சேஷுசரோத்தமை: - சிறந்த, மன்மதபாணங்களான கடாக்ஷை: - பார்வைகளால், அநுக்ருஹ்ணாதி - அநுக்கிரகிக்கின்றாள்.

பொழிப்புரை—மதித்த குயிலினதுபோன்ற குரலுடையாளும், மதங்கொண்ட யானையினதுபோன்ற நடையாளும் ஆகிய இம்மங்கை என்னைச் சிறந்த மன்மதபாணங்களான பார்வைகளால் அநுக்கிரகிக்கின்றாள்.

ஸ்லோகம்.

𑌇𑌤𑌿 𑌯𑍋 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌮𑍂𑌢𑌃 𑌸𑌦𑍍𑌯𑌃 𑌪𑌞𑍍𑌚𑍇𑌷𑍁𑌶𑌾𑌸𑌿𑌤𑌃 ।
𑌤𑌸𑍍𑌯𑌾𑌵𑌿𑌵𑍇𑌕𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌶𑍃𑌣𑍁𑌷𑍍𑌵𑌾𑌵𑌹𑌿𑌤𑍋 𑌨𑍃𑌪 ॥ (௧௪)
இதியோமந்யதேமூட: ஸத்ய:பஞ்சேஷுஶாஸித:
தஸ்யாவிவேகம்வக்ஷ்யாமி ஶ்ருணுஷ்வாவஹிதோந்ருப

வியாக்யானம்—இதி - என்று, பஞ்சேஷுஶாஸித: - மன்மதனுலேவப்பட்டு, ஸத்ய: - உடனே, மூட: - மூடனுன, ய: - யாதொருவன், மந்யதே - எண்ணுகிருனே, தஸ்ய - அவனது, அவிவேகம் - அஞ்ஞானத்தை, வக்ஷ்யாமி - கூறுகின்றேன், ந்ருப - ஓ அரசனே, அவஹித: - சாவதானமாய், ஶ்ருணுஷ்வ - கேட்பாயாக.

பொழிப்புரை—என்று மன்மதனுலேவப்பட்டு உடனே மூடனுன யாதொருவன் எண்ணுகிருனே அவனது அஞ்ஞானத்தைக் கூறுகின்றேன் ஓ அரசனே சாவதானமாய்க் கேட்பாயாக.

அவதாரிகை.

தேகம் சடமாதலின் அதைக் கண்டு மயக்கங் கொள்வதும் யுக்தமல்ல என்று கூறி யிங்கு ஆன்மாவைக்குறித்து மயங்குவதும் உசிதமல்ல வென்பதை ஏதுவுடன் நிரூபிக்கின்றார்.

ஸ்லோகம்.

𑌨 𑌸 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 𑌨 𑌪𑍁𑌮𑌾𑌨𑍇𑌷 𑌨𑍈𑌵 𑌚𑌾𑌯𑌂 𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌃 ।
𑌅𑌰𑍍𑌥𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌦𑍇𑌹𑍀 𑌸 𑌜𑍀𑌵𑌨𑌃 ॥ (௧௫)
நசஸ்த்ரீநபுமாநேஷ நைவசாயம்நபும்ஸக:
அர்த்த:புருஷ:பூர்ண: த்ரஷ்டாதேஹீஸஜீவந:

வியாக்யானம்—ஏஷ꞉ - இவன் (இவ்வான்மா) ஸ்த்ரீசந - பெண்ணுமல்ல, ஏஷ꞉ - இவன், புமாந்ந - புருஷனுமல்ல, அயம் - இவன் நபும்ஸக꞉ சநஏவ - நபும்ஸகனுமல்ல, அமூர்த்த꞉ - மூர்த்தியற்றவனும், புருஷ꞉ - சரீரத்திலுள்ளவன், பூர்ண꞉ - நிறைந்தவன், த்ரஷ்டா - காண்போன், தேஹீ - தேஹதாதான்மிய முடையவன், ஸ꞉ - அவன், ஜீவன꞉ - சீவிக்கச்செய்வோன்.

பொழிப்புரை—இவ்வான்மா ஆணுமல்ல பெண்ணுமல்ல அலியுமல்ல காணக்கூடிய வுருவற்றவன் சரீரத்திலுள்ளவன் நிறைந்தவன் காண்போன் தேகதாதான்மிய முடையவன் அவன் சீவிக்கச் செய்வோன்.

கருத்து—இங்கு இவ்வான்மா ஆணுமல்ல பெண்ணுமல்ல அலியுமல்ல என்றதனுல் ஆண், பெண், அலி யென்பது அங்கங்களை நோக்கி வந்தது ஆதலின் அவை தேகதருமமேயன்றி யான்ம தருமமல்லவென்றறிக.

சுவேதாசுவதரோபநிடதம்.

பிரமாணம்—𑌨𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 𑌨𑌪𑍁𑌮𑌾𑌨𑍇𑌷 𑌨𑍈𑌵𑌾𑌯𑌂 𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌃 ।

𑌯𑌦𑍍𑌯𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌮𑌾𑌦𑌤𑍍𑌤𑍇 𑌤𑍇𑌨 𑌤𑍇𑌨 𑌸𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 ॥

நசஸ்த்ரீநபுமாநேஷ நைவசாயம்நபும்ஸக꞉

யத்யச்சரீரமாதத்தேதேந தேநஸயுஜ்யதே

இவன் ஆணுமல்ல பெண்ணுமல்ல அலியுமல்ல எவ்வெத்தேகமெடுப்பானே அவ்வத்தேகத்தோடு கூடுவான் என்று கூறியது காண்க. இனி அமூர்த்தன் நேரில் காணக்கூடிய வுருவமுடையவன் அல்ல என்றதனுல் உயிர் கூறப்படும் சேதனவுருவம் சூநியமல்லவென்பதுமறிக. புருஷ꞉ - தேகத்திலுள்ளவன் என்றதனுல் தேகாதியைப் பிரவர்த்திக்கச் செய்கின்றவன், தேகம் சடமாதலின் தானே பிரவர்த்தியாது சேதனனுகிய வான்மாவாலேயே பிரவர்த்திக்க வேண்டும் என்பதறிக.

பௌஷ்கராகமம்.

𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑍋𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌸𑍍𑌸𑌦𑌾 |
𑌸𑍍𑌵𑌤𑌃𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌶𑍂𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌜𑍍𑌜𑌗𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑍇𑌘𑌟𑌾𑌦𑌿𑌵𑌤𑍍 |
𑌯𑌸𑍍𑌤𑍁𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌕𑌸𑍍𑌸𑍋𑌯 𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑌿𑌪𑌰𑌿𑌪𑌠𑍍𑌯𑌤𑍇 ||

ப்ரவர்தமானோதேஹா திஸ்சேதநாதிஷ்டிதஸ்ஸதா
ஸ்வத:ப்ரவ்ருத்திஶூந்ய த்வாஜ்ஜகத்தத்வேகடாதிவத்
யஸ்துப்ரவர்தகஸ்ஸோய மாத்மேதிபரிபட்யதே

சேதனனால் அதிஷ்டிக்கப்பெற்றே எப்பொழுதும் தேகாதி பிரவர்த்திக்கின்றது. ஜகத்தத்துவத்தில் குடாதிபோல தானே பிரவிர்த்தி யற்றதாதலால் என்க இதனைப் பிரவர்த்திக்கச் செய்வோன் எவனோ அவனே யான்மா எனப்படும்.

என்பதாதி வாக்கியங் காண்க. இனி பூர்ணன் என்றதனால் வியாபகன் என்பதறிக. அற்றேல்

𑌵𑌾𑌲𑌾𑌗𑍍𑌰𑌶𑌤𑌭𑌾𑌗𑌸𑍍𑌯 𑌶𑌤𑌧𑌾𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌸𑍍𑌯𑌚 |
𑌭𑌾𑌗𑍋𑌜𑍀𑌵𑌸𑍍𑌸𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌸𑍍𑌸 𑌚𑌾𑌨𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌯𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 ||

வாலாக்ரஶதபாகஸ்ய ஶததாகல்பிதஸ்யச
பாகோஜீவஸ்ஸவிஜ்ஞேயஸ்ஸ சாநந்த்யாயகல்பதே

மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறதுவாயிரமாயினல்
ஆவாயின் கூறு நூறுயிரத்தொன்றே.

என்ற உபநிடதம் திருமந்திரம் முதலிய முன்னூற்களில் சீவன் அணுவிலும் சிறிய பரிமாணமுடையோன் என்றது அவலமோவெனின் அல்லவென்க. சீவன் உண்மையில் வியாபகனே யாயினும் பாசத்தாற் கட்டுண்டு தேகத்தினிற் சிறைப்பட்டு அணுவாயினன்.

காமிகம்.

𑌨𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑍋𑌹𑍍𑌯𑍇𑌷𑌃 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌚𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 |
𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑍋𑌪𑌿𑌶𑌰𑍀𑌰𑍇𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌃𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 ||

நித்யஜ்ஞாநமயோஹ்யேஷ: வ்ருத்திஜ்ஞாநஞ்சஶாஶ்வதம்
வ்யாபகோபிஶரீரேஸ்மிந் வர்ததேவ்யாபக:ப்ரபு:

இவன் நித்தியஞானமயன் வ்ருத்திஞானமும் சாச்வதமே இவன் வியாபகனாயினும் இச்சரீரத்தினில் அவ்வியாபகனா யிருக்கின்றான்.

என்று கூறிய பிரமாணங்களைக் கண்டுதெளிக. இனிக் காண்போன் என்றதனால் இஃதறிக. அதாவது காண்பன விந்திரியங்களாயினும் அவ்விந்திரியங்களும் தானே காண்பனவல்ல மற்று இவ்வான்மாவாலேயே காண்பனவாம்.

### கடவல்லியுபநிடதம்.

𑌯𑍇𑌨 𑌰𑍂𑌪𑌂 𑌰𑌸𑌂 𑌗𑌨𑍍𑌧𑌂 𑌶𑌬𑍍𑌦𑌾𑌨𑍍 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌂𑌶𑍍𑌚 𑌮𑍈𑌥𑍁𑌨𑌾𑌨𑍍 |
𑌏𑌤𑍇𑌨𑍈𑌵 𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 ||

யேநரூபம்ரஸம்கம்தம் ஶப்தாம்ஸ்பர்ஶாம்ஶ்சமைதுநாந்
பதேநைவவிஜாநாதி

எதனால் உருவத்தையும் ரஸம் கந்தம் சப்தம் ஸ்பர்ஶம் சேர்க்கை இவைகளையும் எவனால் அறிகின்றானோ.

### காமிகம்.

𑌅𑌹𑌮𑍇𑌵 𑌚 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌰𑌸𑌯𑌾𑌮𑌿 𑌚 𑌨𑌾𑌨𑍍𑌯𑌥𑌾 |
𑌨𑌹𑍍𑌯𑍇𑌤𑌦𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑍇 𑌕𑌥𑌞𑍍𑌚𑌿𑌦𑍁𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ||

அஹ்மேவசபஶ்யாமி ரஸயாமிசநாந்யதா
நஹ்யேததிந்த்ரியாத்மத்வே கதஞ்சிதுபபத்யதே

யானே காண்கின்றேன் ரஸிக்கின்றேன் மற்றது அல்ல இஃது இந்திரியம் ஆன்மாவெனின் எவ்வாற்றானு மியையாது.

என்பதாதி பிரமாணங்களா லறிக. அற்றேல் மனமே யிந்திரியங்களை யறியச்செய்கின்றது ஆன்மாவல்ல வென்பதே யொவ்வுமெனின் அல்ல. மனமும் சடமாதலின் அதனையும் ஏவுவோன் மற்றொருவன் இருக்கவேண்டும் அவனே சீவன். மனம் சுபாவமாய் அறிகின்றதல்ல. ஆன்ம சம்பந்தத்தாலேயே யறியவேண்டியதாம் இதனை

### சிவஞானபோதம்.

𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌦𑌨𑍍𑌯𑍋 𑌽𑌨𑍍𑌵𑌿𑌤𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌦𑍍 𑌭𑌵𑍇𑌤𑍍 ||

ஆத்மாந்த꞉கரணாதந்யோ ந்யந்விதோமந்த்ரிவத் பவத்

ஆன்மா மனதிற்கு அந்நியனுயினும் மந்திரியும் அரசனும் போலக்கூடியுள்ளன.

இயற்கையில் ஆளமாளாத மந்திரி அரசன் ஆணைகொண்டு ஆள்வதுபோல் இங்கு ஆன்மாவால் மனமறிவதறிக. அற்றேல் ஆன்மாவாலேயே மனம் அறிகின்றது என்பது என்னே? ஆன்மாவே நேரில் மனதை அவாவாமல் அறியக்கூடாதோவெனின் அல்ல. எங்ஙனம் எனின் சூரியனுல் நேரில் தகிக்கமாளாத துரும்பை அச்சூரியவொளியின் சம்பந்தத்தால் சூரியகாந்தம் தகிப்பதுபோலென்க. இங்ஙனம் நேரில் அறியாது தனது அறிவால் மனுதியை யறியச்செய்வது பற்றி ஆன்மா காண்போன் என்றது.

காமிகம்.

சிந்மாத்ரஸ்சேதயத்யந்யாந் ஸ்வயஞ்சேதயதேததா |
சிந்மாத்ரஸ்சேதயத்யங்யாங் ஸ்வயஞ்சேதயதேததா

சிங்மாத்திரன் இதரங்களை அதாவது மனுதிகளை அறியச்செய்கிறவன் அவனே அங்ஙனம் அறியச் செய்யப்படுகிறுன்.

சிவஞானபோதம்.

விதந்த்யக்ஷாணிபும்ஸார்தாந் |
விதந்த்யக்ஷாணிபும்ஸார்தாங்

என்பதாதி வாக்கியங்களா லறிக, இவனே தேகாபிமானியென்பது எல்லோருக்கு மனுபவசித்தமாதலின் அதை யிங்கு விரிக்கவில்லை. இங்ஙனம் சீவனது உருவமாதலால், மங்கையை விட்டுப் பிரிந்து அனுபவிக்கின்றதாய்க் கூறும் துக்கத்திற்கு ஏதுவானது சீதையின் ஆன்மாவை விட்டுப் பிரிந்தது என்பது யுக்தமல்ல என்று கூறினுர்.

அவதாரிகை.

இனித் தேகத்தைப்பற்றி நினைத்துத் துக்கிக்கின்றேன் என்பதும் யுக்தமல்ல என்பதை யுக்தியுடன் நிரூபிக்கின்றுர்.

ஶ்லோகம்.

யா தநூம்ருதுர்பாலா மலபிண்டாத்மிகா ஜடா | (கசு)
ஸா ந பஶ்யதி யத்கிஞ்சித் ந ஶ்ருணோதி ந ஜிக்ரதி ||

யாதந்வங்கீம்ருதுர்பாலா மலபிண்டாத்மிகாஜடா
ஸாநபஶ்யதியத்கிஞ்சிந்ந ஶ்ருணோதிநஜிக்ரதி

வியாக்யானம்—தந்வங்கீ - மெல்லியள் (என்றும்), ம்ருதுঃ - அழகியவள் (என்றும்), பாலா - சிறுமி (என்றும்), யா - எவள் (கூறப்படுகின்றாளோ), மலபிண்டாத்மிகா - மலபாண்ட வுருவமானவளும், ஜடா - சடமானவளும் (ஆகிய சரீரவுருவமான) ஸா - அவள், நபச்யதி - பார்க்கின்றதில்லை, யத்கிஞ்சித் - ஒன்றையும், நச்ருணோதி - கேட்பதுமில்லை, நஜிக்ரதி - முகருவதில்லை.

பொழிப்புரை—மெல்லியள் என்றும் அழகியவள் என்றும் சிறுமியென்றும் எம்மங்கை கூறப்படுகின்றாளோ, மலபிண்டமாயும் சடமாயுமுள்ள தேகவுருவான அவள் பார்ப்பதுமில்லை கேட்பதுமில்லை முகருவதுமில்லை.

பார்த்தல் கேட்டல் முகருதல் முதலிய தருமங்கள் ஆன்மாவுக்கே யுளவாதலால் மலாகாரமாயும் ஜடமாயுமுள்ள தேகம் பார்ப்பது முதலிய தொழிலைச் செய்கின்றதென்று கூறுவதும் அதைக் கண்டு மயங்குவதும் தக்கதல்ல என்று கூறப்பட்டதா யறிக.

ஶ்லோகம்.

சர்மமாத்ரம் தநும் தஸ்யா புத்வா த்யஜஸ்வ ராகவ |
யா ப்ராணாததிகா ஸைவ ஹந்த தே ஸ்யாத் க்ருணாஸ்பதம் ||

சர்மமாத்ரந்தநுந்தஸ்யாபுத்வாத்யக்ஷஸ்வராகவ
யர்ப்ராணாதிகாஸைவஹந்ததேஸ்யாத்க்ருணாஸ்பதம்

வியாக்யானம்—ராகவ - ஓராகவனே, தஸ்யாঃ - அவளுடைய, தநும் - தேகத்தை, சர்மமாத்ரம் - தோல்மாத்திரமென்று, புத்வா - அறிந்து, த்யக்ஷஸ்வ - (விரும்பாது) தள்ளிவிடுவாயாக, யா - எம்மங்கை, ப்ராணாத் - பிராணனிலும், அதிகா - மேற்பட்டவளோ, ஹந்த - அந்தோ, ஸா ஏவ - அவளே, தே - உனக்கு, க்ருணாஸ்பதம் - துக்கஹேதுவாம்.

பொழிப்புரை — ஓ ராகவனே அம்மங்கையின் தேகத்தைத் தோல் மாத்திரமாயறிந்து விரும்பாது தள்ளிவிடுவாயாக. எம்மங்கை பிராணனிலும் மதிகமோ, அந்தோ! அவளே யுனக்குத் துக்க ஏதுவாம்.

ஸ்லோகம்.

ஜாயஂதெயதிஹூவெதஹூ꞉ ெஹாஸ்தாஂவஹௌதிகா꞉ |
ஆத்மாயதெகஸ்ஸெஹஷு வரிவூணஸ்ஸநாதந꞉ ‖ (கஅ)
ஜாயந்தேயதிபூதேப்ய꞉ தேஹாஸ்தத்பாஞ்சபௌதிகா꞉
ஆத்மாயதேகலஸ்தேஷு பரிபூர்ணஸ்ஸநாதந꞉

வியாக்யானம்—தேஹா꞉ - தேகங்கள், பூதேப்ய꞉ - பூதங்களி னின்றே, யதி ஜாயந்தே - உண்டாகின்றனவன்றே. தத் - ஆதலின் பாஞ்சபௌதிகா꞉ - பஞ்சபூதத்தினது விகாரங்களேயாம், ஆத்மா - ஆத்மாவானவன், யதேகல꞉ - யாதொரு சாக்ஷியாயும், தேஷு - அத்தேகங்களில், பரிபூர்ண꞉ - பூரணனுயும், ஸநாதந꞉ - ஸநாதனனுயு முள்ளவன்.

பொழிப்புரை—தேகங்கள் பூதங்களிலேயே யுண்டாகின்றனவ ன்றே. ஆதலால் பஞ்சபூதங்களின் விகாரங்களேயாம். ஆன்மா தேகசாக்ஷியும் பரிபூர்ணனும் ஸநாதனனுமாம்.

இங்கு ஆன்மாதேகத் துண்ணின்று மனதையே யறியச்செய் கின்றுன் ஆதலால் சாக்ஷியென்று கூறப்பட்டது. பரிபூர்ணனென் பது முன்னம் விளக்கப்பட்டது. ஸநாதனன் என்றதனுல் அநாதி யென்றறிக.

ஸ்லோகம்.

காகாஂதாதஜ꞉ காஂத꞉ ஸவவஸஹொதரா꞉ |
நிமிதாயாஂகுஹாவஸ்ரூஂ தஜவஹீநதாஂமத꞉ ‖ (கக)
காகாந்தாதத்ரக꞉ காந்த꞉ ஸர்வஏவஸஹோதரா꞉
நிர்மிதாயாங்க்ருஹாவல்யாம் ததவச்சிந்நதாங்கதம்
நஹஸஸ்ராஂதுதூயாஂ நகாஂஶித்திரூஹதி |
தமுதாதாவிதெஹெஷுவரிவூணஸநாதந꞉ ‖ (உ௰)
நபஸ்தஸ்யாந்துதக்தாயாம் நகாஞ்சித்க்ஷதிம்ருச்சதி
தத்வதாத்மாபிதேஹேஷுபரிபூர்ணஸ்ஸநாதந꞉

வியாக்யானம்—தத்ர - இஃதிங்ஙனமிருக்க, கா - எவள், காந்தா - மங்கை, கஃ - எவன், காந்தஃ - கணவன், ஸர்வே - எல்லோரும், ஸஹோதராஃஏவ - உடன்பிறந்தவர்களே, க்ருஹாவள்யாம் - வீடுகள், நிர்மிதாயாம் - கட்டப்பட்டனவாயின், ததவச்சின்னதாம் - அதனுள் தடுக்கப்பட்ட (அடங்கின) தன்மையை, கதம் - அடைந்ததான, நபஃ - ஆகாயமானது, தஸ்யாம் - அவ்வீடுகள், தக்தாயாம்- தஹிக்கப்பட்டனவாயின், காம்சித்க்ஷதிம் - ஒருகெடுதியையும், நருச்சதி - அடைவதில்லையே, தத்வத் - அதுபோல, பரிபூர்ணஃ - பரிபூர்ணனும், ஸநாதனஃ - எப்பவுமுள்ளவனுமான, ஆத்மாபி - ஆன்மாவும், தேகேஷு - தேகங்களில்.

பொழிப்புரை—இஃதிங்ஙனமிருக்க, எவள் மனைவி, எவன் கணவன், எல்லோர்களும் ஸகோதரர்களே. வீடுகள் கட்டப்படுமாயின் அவைக்குளடங்கிய வாகாயமானது அவ்வீடுகள் தஹிக்கப்பட்டபின் ஓர்கெடுதியையும் எங்ஙனம் அடையாதோ, பரிபூர்ணனும் ஸநாதனனுமான வான்மாவும் தேகங்களில் அங்ஙனமேயாம்.

நுட்பம்—இஃதிங்ஙனமிருக்க வென்றதனால், ஆன்மா தேகேந்திரியமனமாதிகளுக் கந்நியனாயிருக்க வென்றறிக. மனைவி, கணவன் முதலிய சொற்களால் கூறப்படுவது தேகமே ஆன்மாவன் றென்பதாம். முற்கூறிய வேதுக்களால் இவ்விரண்டில் ஒன்று மியையவில்லையாதலின் மனைவியாவது எவள் என்பதாதி கூறப்பட்டதறிக. இனிச் சரீரமழிந்தால் சீவன் அழிவதில்லை, சரீரம் தோன்றினால் சீவன் தோன்றவேண்டுமென்ற நியமுமில்லை ஆன்மா (வருவப்பொருளாத) லனுதியும் விபுவமாதலால், இதற்கு உதாரணமாக வீட்டுள் ஆகாயமும்போலென்று கூறப்பட்டது. இதனால் தோன்றுவதும் அழிவதும் தேகத்திற்கே யன்றி யான்மாவுக் கல்லவென்பது அறியவேண்டியது.

ஸ்லோகம்.

ஹநி॥ோ॥ெநஷு॥ெதஷெ॥வஹுயம॥ெநவவிஹநி॥ெந।
ஹம॥தாவெநூநி॥ெதஹம॥தீ॥ம ஹதஷெூநி॥ெதஹதழ॥

ஹந்யமாநேஷுதேஷ்வேவஸ்வயம்நைவவிஹந்யதே
ஹந்தாசேந்மந்யதேஹந்தும் ஹதஸ்சேந்மந்யதேஹதம்

தாவுபௌநவிஜாநீதோ நாயம்ஹந்திநஹந்யதே ।
அஸ்மாந்ருபாதிது:கேந கிம் கேதஸ்யாஸ்திகாரணம் ॥

வியாக்யானம்—ஏவம் - இவ்விதம், தேஷு - தேகங்கள், ஹந்யமானேஷு - கொல்லப்படுவனவா யிருக்க, ஸ்வயம் - தான் (ஆன்மா) நஹிஹந்யதே ஏவ- கொல்லப்படுவதே யில்லை, ஹந்தாசேத் - வதம் செய்வோனே வெனின், ஹந்தும் - (மற்றொருவனைக்) கொல்லவேண்டுமென்று, மந்யதே - நினைக்கிறன், ஹத:சேத் - வதமடைவோனே வெனின் ஹதம் - (ஆன்மாவை) வதமடைந்தவன் என்று, மந்யதே - எண்ணுகின்றன். தா உபௌ - அவ்விருவர்களும், நவிஜாநீத: - அறிகின்றவர்களல்ல, அயம் - இவன், ந ஹந்தி - கொல்லுவதுமில்லை, நஹந்யதே - கொல்லப்படுகின்றது மில்லை, அஸ்மாத் - இக்காரணத்தால், ந்ருப - ஓ அரசனே, அதிதுக்கேந - மிக்கத் துக்கத்தால், கேதஸ்ய - தவித்தலுக்கு, கிம் காரணம் - என்னகாரணம், அஸ்தி - உளது.

பொழிப்புரை—இங்ஙனம் தேகங்களே வதமடைவது தான் வதமடைவதில்லை வதம் செய்வோன் தான் மற்றொருவனைக் கொல்லவேண்டுமென்று நினைக்கிறன் வதமடைவோன் தான் வதமடைகின்றதாக நினைக்கிறன் இவ்விருவர்களும் அறிகின்றவர்க ளல்ல. இவன் கொல்லுவதில்லை. கொல்லப்படுவதுமில்லை. இக்காரணத்தால், ஓ அரசனே அதிக துக்கத்தால் தவித்தலுக்கு ஏது யாதுளது.

நுட்பம்—இங்கு அருவப்பொருளான வான்மாவை வதைக்கவியலாது உருவப்பொருளான தேகங்களுக்கே வதைமுதலியன என்பது உண்மையா யிருக்க ஆன்மா வதைசெய்வோ னகவும் ஆன்மாவே வதைக்கப்படுவோன் என்றும் நினைத்தல் அறிவின்மையால் நிகழ்ந்ததென விளக்கியதறிக. இதனல் தேகாதிக் கந்நியமாய் ஆன்மாவே றொன்றில்லை யென்று கூறும், சார்வாகாதியர்களின் கொள்கை மறுக்கப்பட்டது.

ஶ்லோகம்.

ஸ்வஸ்வரூபம்விதித்வேதம் து:கம்த்யக்த்வாஸுகீபவ ।
ஸ்வஸ்வரூபம்விதித்வேதம் து:கந்த்யக்த்வாஸுகீபவ

வியாக்யானம்— ஸ்வஸ்வரூபம் - தன் ஸ்வரூபத்தை, விதித்வா - அறிந்து, இதம் - இந்த, துஃகம் - துக்கத்தை, த்யக்த்வா - விடுத்து, ஸுகீ - ஸுகமுடையவனுய், பவ - ஆகுக.

பொழிப்புரை—தன் ஸ்வரூபத்தை யறிந்து இத்துக்கத்தை விடுத்துச் சுகம்பெறுவாயாக.

நுட்பம்— ஈண்டு தேகாதிகளுக் கந்நியமா யிருத்தலே தனக்குளது என்று அறிதலே தனதுருவத்தை யறிதல் ஆதலால் அஃதிங்கு விதிக்கப்பட்டது.

பைங்களோபநிடதம்.

பிரமாணம்—𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌦𑌾𑌵𑌿𑌚𑌾𑌰𑌯𑍇𑌜𑍍𑌜 𑌜𑌡𑌜𑍀𑌵𑌪𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 |

தஸ்மாத்ஸதாவிசாரயேஜ்ஜ கஜ்ஜீவபராத்மநஃ

ஆதலால் எப்பொழுதும் சடம் சித் பரன்களை விசாரிக்கவேண்டும்.

தரிசனேபநிடதம்.

𑌆𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯𑌪𑌰𑌿𑌕𑍍𑌷𑌯𑌃 |

ஆத்மஸ்வரூபவிஜ்ஞாநா தஜ்ஞாநஸ்யபரிக்ஷயஃ

ஆன்ம உருவத்தின் ஞானத்தால் அஞ்ஞானத்தின் துலைவு.

திருமந்திரம்.

தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னையறி யாமற் ருனே கெடுகின்ருன்
தன்னை யறியு மறிவை யறிந்தபின்
தன்னையே யர்ச்சிக்கத் தானே.

தன்னை யறிந்தக்கால் பாசங்களையும் பரனையும் அறியலாகும் ஆதலால் இங்ஙனம் கூறப்பட்டது.

இராமர்கேள்வி.

𑌮𑍃𑌤𑍇𑌦𑍇𑌹𑌸𑍍𑌯𑌨𑍋𑌦𑍁𑌃𑌖𑌂 𑌨𑍈𑌵𑌚𑍇𑌤𑍍𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ||

முநேதேஹஸ்யநோதுஃகம் நைவசேத்பரமாத்மநஃ

𑌸𑍀𑌤𑌾𑌵𑌿𑌯𑍋𑌗𑌜𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌹𑍃𑌦𑌿 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 |

𑌸𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌸𑍍𑌯𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑌿𑌕𑌵𑌯𑍋𑌵𑌿𑌦𑍁𑌃 || (௨௪)

ஸீதாவியோகதுஃகாக்நிர்மாம் பஸ்மீகுருதேகதம்
ஸதாநுபூயதேபோர்தஸ்ஸ நாஸ்தீதித்வயேரிதஃ

வியாக்யானம்— முனே - ஓ முனிவரே, துக்கம் - துக்கமானது, தேஹஸ்ய - தேகத்திற்கு, ந - அல்ல, பரம் - மற்றேவெனின், ஆத்மனச - ஆன்மாவுக்கும், நைவசேத் - இல்லாவிடில், ஸீதாவியோக துக்காக்நிஃ - ஸீதையின் பிரிவினுலுண்டாகிய துக்கமெனும் அக்கினியானது, மாம் - என்னை, கதம் - ஏன், பஸ்மீகுருதே - தகிக்கின்றது, ஸதா - எப்பொழுதும், யஃஅர்த்தஃ - யாதொருவிஷயமானது, அநுபூயதே - அனுபவிக்கப்படுகின்றதோ, ஸஃ - அவ்விஷயமானது, நாஸ்தீதி - இல்லையென்று, த்வயா-தங்களால், ஈரிதஃ-கூறப்பட்டது.

பொழிப்புரை— ஓ முனிவரே துக்கமானது தேகத்திற்கல்ல. மற்றேவெனின் ஆன்மாவுக்கு மல்லவெனின் சீதையைவிட்டுப் பிரிந்த துக்கமெனும் அக்கினியானது என்னைக் கொளுத்துகின்றதேன் எப்பொழுதும் யாதொரு விஷயமானது அனுபவிக்கப்பட்டு வருகின்றதோ அஃது இல்லையென்று தங்களால் கூறப்பட்டதே.

நுட்பம்— இங்கு இராமன் முனிவரைப் பார்த்து எப்பொழுதும் அனுபவிக்கப்படும் துக்கத்தைத் தாங்கள் தேகத்திற்கு மல்ல ஆன்மாவிற்குமல்ல என்று அனுபவவிரோதமாய் உரைக்கின்றீர்களே. அதை நான் அங்கீகரிப்ப தெவ்விதமென்று ஆசங்கை கொண்டான் என்பதறிக.

ஸ்லோகம்.

ஜாயதாம் தத்ரவிஶ்வாஸஃ கத²ம் மே முநிபுங்க³வ
அந்யோ ஽ஸ்தி நாஸ்தி கோ போ⁴க்தா யேந ஜந்து꞉ ப்ரதப்யதே
ஸுக²ஸ்ய வாபி து³꞉க²ஸ்ய தத்³ ப்³ரூஹி முநிஸத்தம ॥ (உரு)

ஜாயதாந்தத்ரவிஶ்வாஸஃ கதம்மெமுநிபுங்கவ
அந்யோஸ்திநாஸ்திகோ போக்தாயேநஜந்துஃப்ரதப்யதே
ஸுகஸ்யவாபிதுஃகஸ்ய தத்ப்ரூஹிமுநிஸ்த்தம

வியாக்யானம்—தத்ர - அவ்விஷயத்தில், மே - எனக்கு, விச்வாஸஃ - நம்பிக்கையானது, கதம்ஜாயதாம் - எங்ஙனம் உண்டாகும்

முனிபுங்கவ - ஓ முனிவர்கோனே, யேந - யாதொரு துக்கத்தால், ஜந்துஃ - சீவன், ப்ரதப்யதே - தபிக்கின்றானோ, (அத்தகைய துக்கத்தை) போக்தா - அனுபவிக்கின்றவன், அஸ்தி - இருக்(கவேண்டியதே)கின்றான், நாஸ்தி - இல்லை(யெனின்) அந்யஃ - வேறு, கஃ-எவன், ஸுகஸ்ய, துக்கஸ்ய, வா, அபி - சுகத்திற்குந் துக்கத்திற்கும் ஏதுவாவான், முனிஸத்தம - ஓ முனிவரரே, தத்ப்ரூஹி - அதனையுரைக்க வேண்டும்.

பொழிப்புரை— இவ்விஷயத்தில் எனக்கு எவ்விதம் நம்பிக்கையுண்டாகும். ஓ முனிவர்கோனே எதனால் சீவன் தவிக்கின்றானோ அத்துக்கத்தை யனுபவிக்கின்றவன் ஒருவனிருக்கவேண்டும். அல்லவெனின்; வேறு எவன் சுகதுக்கத்திற் கேதுவாம். ஓ முனிவரரே அதனையுரைக்கவேண்டும்.

இங்கு இராமன் முனிவரை நோக்கித் துக்கியென்ற வனுபவத்திற்கேது யாதென்று வினவினரென்று அறிக.

அகஸ்தியர்விடை.

ஃ ஜ்ஞேயா ஶாம்பவீ மாயா யயா ஸம்மோஹ்யதே ஜகத் ॥ (உசு)

துர்ஜ்ஞேயாஶாம்பவீமாயா யயாஸம்மோஹ்யதேஜகத்

வியாக்யானம்— துர்ஜ்ஞேயா - அறியவரியதான, ஶாம்பவீ - சம்பு ஸம்பந்தமான, மாயா - மாயை (யேஏது), யயா - எந்தமாயையால், ஜகத் - உலகம் (சீவர்கள்), ஸம்மோஹ்யதே - பிரமிப்பதோ.

பொழிப்புரை—அறியவரியதும் சம்பு ஸம்பந்தமுமாகிய மாயை (யேஏதுவாம்) எந்தமாயையால் சீவர்கள் பிரமிக்கின்றனரோ.

இங்குச் சம்புசம்பந்தமான என்றதனுல் சம்புவுக் கடங்கிய என்பது அறிக.

ஸ்லோகம்.

மாயாந்து ப்ரக்ருதிம் வித்யா ந்மாயிநந்து மஹேஶ்வரம்।
அஸ்யாவயவபூதைஸ்து வ்யாப்தம் ஸர்வமிதம் ஜகத் ॥ (உஎ)

மாயாந்துப்ரக்ருதிம்வித்யா ந்மயிநந்துமஹேஶ்வரம்
அஸ்யார்வயவபூதேந வ்யாப்தம்ஸர்வமிதம்ஜகத்

வியாக்யானம்—மாயாம்து-மாயையையோவெனின், ப்ரகிருதிம்-ப்ரகிருதி (முதற்காரணம்) என்று, வித்யாத் - அறிக, மாயிநம்து - மாயையை வசப்படுத்தியோனே, மஹேச்வரம் - மஹேச்சுரனென்றறிக. அஸ்ய - இவனது, அவயவபூதை: - அவயவமா யிருப்பவனால், இதம்ஜகத் ஸர்வம் - இச்செகமெலாம், வ்யாப்தம் - வியாபிக்கப் பட்டுளது.

நுட்பம்—முற் சுலோகத்தில் மாயை சம்பு சம்பந்தமானது என்று கூறப்பட்டது. இதற்கு மேற்கோளாக சுவேதாச்சுவதரம் கூறிய (மாயாம்து) என்ற சுருதியே இங்கு சுலோகமாய்க் கூறப் பட்டது.

ஸ்லோகம்.

𑌸𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌕𑍋𑌽𑌨𑌨𑍍𑌤𑍋 𑌵𑌿𑌭𑍁𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ।
𑌤𑌸𑍍𑌯𑍈𑌵𑌾𑌂𑌶𑍋 𑌜𑍀𑌵𑌲𑍋𑌕𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌹𑍃𑌦𑌯𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥

ஸத்யஜ்ஞாநாத்மகோநந்தோ விபுராத்மாமஹேச்வரः
தஸ்யைவாம்சோஜீவலோகே ப்ராணிநாம்ஹ்ருதயேஸ்திதः

வியாக்யானம் — ஸத்யஞானத்மகः - சத்தியஞானவடிவனும், அனந்தः - தேசகாலவரையற்றவனும், விபுः - வியாபகனுமாயுள்ள, ஆத்மா - ஆன்மாவனவர், மஹேச்வரः - மகேச்வரனுவார், தஸ்ய ஏவ அம்சः - அவருடைய அம்சமே, ஜீவலோக - சீவலோகத்தில், ப்ராணிநாம் - பிராணிகளது, ஹ்ருதயே - இருதயத்தினில், ஸ்திதः - உள்ளவன்.

பொழிப்புரை — ஸத்தியஞானவடிவனும் தேசகாலவரையற்றவனும் - விபவு (மான) ஆன்மாவே மஹேச்வரனுவான். அவனுடைய அம்சமே ஜீவலோகத்தில் பிராணிகளுடைய இருதயத்திலுள்ளவன்.

நுட்பம்—முந்திய சுலோகத்தில் சம்புவுக்கடங்கியதே மாயையென்று கூறிய பாசத்தினைத் துலைக்கவேண்டுமாயின் அதையடக்கியாளுவோனுன சிவபெருமானது சொரூபம் விளங்கவேண்டுமாதலின் அவனிலக்கணத்தைச் சத்தியஞானனந்த வென்பதாதியால் கூறிப் பின்னர் ஆன்மாவினிலக்கணத்தையும், அவனம்சமே யென்பதாதியால் கூறினர். பரமான்மா வியாபகச்சித்தாதல்போல ஆன்மா

ஏகதேசச்சித்தாய் விளங்கலின் சாதியொருமைப்பற்றி அம்சமெனவும், பரமான்மா ஆன்மாவினிடத்து அத்துவிதமுற்றிருத்தலின் பிராணிகள் இருதயத்திலுள்ளவனென்றும் கூறினர்.

பிரமாணம்— தாயுமானவர்.

அப்பொருளு மான்மாவு மாரணநூல் சொன்னபடி
தப்பிலாச் சித்தொன்றுஞ் சாதியினு லெப்படியுந்
தேர்ற்றுவிதஞ் சிவாகமமே சொல்லுகிட்டை
யாரு மிடத்தத்து விதமாம்.

ஸ்லோகம்.

𑌵𑌿𑌸𑍍𑌫𑍁𑌲𑌿𑌙𑍍𑌗𑌾 𑌯𑌥𑌾 𑌵𑌹𑍍𑌨𑍇𑌰𑍍𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌕𑌾𑌷𑍍𑌠𑌯𑍋𑌗𑌤𑌃 ।
𑌅𑌨𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑍍𑌬𑌦𑍍𑌧𑌾𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑌦𑌂𑌶𑌾 𑌮𑌹𑍇𑌶𑌿𑌤𑍁𑌃 ॥ (௨௧)

விஸ்புலிங்காயதாவஹ்நே ர்ஜாயந்தேகாஷ்டயோகதஃ
அநாதிகர்மஸம்பத்தா ஸ்தத்வதம்சாமஹேசிதுஃ

வியாக்யானம்— யதா - எங்ஙனம், காஷ்டயோகதஃ - கட்டையின் ஸம்பந்தத்தால், வஹ்நேஃ - நெருப்பினின்றும், விஸ்புலிங்காஃ - தணற்பொறிகள், ஜாயந்தே - உண்டாகின்றனவோ, தத்வத் - அது போலவே, அநாதிகர்மஸம்பத்தாஃ-அனுதியான கருமங்களோடு பொருந்தியவர்களும், மஹேசிதுஃ-மகேச்வரனது, அம்சாஃ-அம்சங்களுவார்கள் (சீவர்கள்).

பொழிப்புரை—எங்ஙனம் கட்டையின் ஸம்பந்தத்தால் நெருப்பினின்று தணற்பொறிகள் உண்டாகின்றன வோ அங்ஙனமே அநாதி கருமங்களிற் பொருந்திய வர்களும் மகேச்வரனது அம்சங்களாயுமுள்ளவர்கள் சீவர்கள்.

நுட்பம்— ஈண்டும் அம்சமென்றது இரண்டுஞ் சித்தென்னுந் தருமநோக்கி ஔபசாரிகமாய்க் கூறப்பட்டது.

பிருகதாருண்ணியம்.

𑌯𑌥𑌾𑌗𑍍𑌨𑍇𑌰𑍍𑌵𑌿𑌸𑍍𑌫𑍁𑌲𑌿𑌙𑍍𑌗𑌾 𑌵𑍍𑌯𑍁𑌚𑍍𑌚𑌰𑌨𑍍𑌤𑌿 𑌏𑌵𑌮𑍇𑌵𑌾𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥
யதாக்நேர்விஸ்புலிங்காவ்யுச்சரந்தி ஏவமேவாஸ்மாதாத்மநஃ

ஸ்லோகம்.

𑌅𑌨𑌾𑌦𑌿𑌵𑌾𑌸𑌨𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌇𑌤𑌿 𑌦𑍇𑌶𑌿𑌤𑌾𑌃 ।
𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌚𑍇𑌤𑌿 𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍 ॥ (௩௰)

அநாதிவாஸநாயுக்தாஃ க்ஷேத்ரஜ்ஞா இதிதேஸ்ம்ருதாஃ
மநோபுத்திரஹங்கார ச்சித்தம்சேதிசதுஷ்டயம்

வியாக்யானம்—அநாதிவாஸநாயுக்தா:-அநாதிவாஸனையுடைய வர்களான, தே - அச்சீவர்கள், க்ஷேத்ரஜ்ஞா இதி - க்ஷேத்திரஞ் ஞர்கள் என்று, ஸ்ம்ருதா: - கூறப்பட்டவர்கள், மன: - மனம், புத்தி: - புத்தி, அஹங்கார: - அகங்காரம், சித்தஞ் சேதி - சித்தம் என்று இங்ஙனம், சதுஷ்டயம் - நான்குளது.

பொழிப்புரை—அநாதி வாசனை யுடையவர்களான அச்சீவர்கள் க்ஷேத்திரஞ்ஞர்கள் என்று கூறப்படுவார்கள், மனம் புத்தி சித்த மகங்காரமென நான்குளது.

நுட்பம்.— இங்கு அநாதி வாஸனையுடைய வர்களென்றதனால் வாஸனையால் வந்த பலத்தைப் புசிப்பவர்கள் என்பது அறிக. இனிச், சீவசொரூபத்தையறியச், சாதனமான அந்தக்கரணத்தின் உருவத்தைக் கூறுகின்றனர், மனம் புத்தியென்பதாதியால்.

ஸ்லோகம்.

𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌤𑍇𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌮𑍍𑌬𑌿𑌤𑌾𑌃 ।
𑌜𑍀𑌵𑌤𑍍𑌵𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑍁𑌃𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑌏𑌵𑌤𑍇 ॥ (௩௧)

அந்த:கரணமித்யாஹுஸ்தத்ரதேப்ரதிபிம்பிதா:
ஜீவத்வம்ப்ராப்துயு:கர்ம பலபோக்தாரஏவதே

வியாக்யானம்.—அந்தக்கரணம் - (முற் கூறிய நான்கும்) அந் தக்கரணம், இதி ஆஹு: - என்று கூறுகின்றார்கள்; தத்ர - அங்கு, ப்ரதி பிம்பிதா: - ப்ரதிபிம்பித்தவர்களான, தே - அவர்கள், ஜீவத் துவம் - சீவத்து வத்தை, ப்ராப்நுயு: - அடைவார்கள், தே எவ - அவர்களே, கர்மபல போக்தார: - கருமபலத்தைப் புசிப்பவர்களாம்.

பொழிப்புரை.— முற்குறிக் கப்பட்ட நான்கும் அந்தக்கரண மென்று கூறப்படும் (அதனில் பிரதிபிம்பித்தவர்கள்) சீவத்து வத் தைப்பெறுவோர்கள். அவர்களே கருமபலத்தைப் புசிப்பவர்கள்.

நுட்பம்.— இங்கு பிரதிபிம்பித்தவர்கள் என்றதனால் எங்ஙனம் பிரதிபிம்பத்திற்கு ஏதுவான நீர்முதலிய பொருள்கள் நீங்கினால் பிரதிபிம்பம் துலேகின்றதோ அங்ஙனமே சீவத்து வத்திற்கு

ஏதுவான பாசம் நீங்கினால் சிவத்துவம் துலங்கின்றது என்பதை யித னாலறிக.

ஸ்லோகம்.

ததோவைஷயிகம்தேஷாம் ஸுகம்வாதுஃகமேவவா |
தஏவபுஞ்ஜதேபோகா யதநேஸ்மிந்சரீரகே || (௩௨)

ததோவைஷயிகம்தேஷாம் ஸீகம்வா துஃகமேவவா
தஏவபுஞ்ஜதேபோகா யதநேஸ்மின்சரீரகே.

வியாக்யானம்—ததஃ - ஆதலால், தஏவ - அவர்களே, தேஷாம் - அவர்களது, வைஷயிகம் - விஷயஸம்பந்தமான, ஸுகம் வா - ஸுகத்தையாவது, துக்கம் ஏவவா - துக்கத்தையாவது, போகாயதநே - புசிப்பதற்கிடமாகிய, அஸ்மிந் சரீரகெ - இச்சரீரத்தின்கண், புஞ்ஜதே - புசிக்கின்றார்கள்.

பொழிப்புரை—ஆதலால அவர்களே அவர்களது விஷயஸம்பந்தமான சுகத்தையும் அல்லது துக்கத்தையும் புசிக்கவிடமான இச்சரீரத்தின்கண் ணனுபவிக்கின்றார்கள்.

ஸ்லோகம்.

ஸ்தாவரம்ஜங்கமஞ்சேதி த்விவிதம்வபுருச்யதே |
ஸ்தாவராஸ்தத்ரவ்ருக்ஷாஸ்யுஸ்ஸூக்ஷ்மாகுல்மலதாதயஃ || (௩௩)

ஸ்தாவரம்ஜங்கமம்சேதி த்விவிதம்வபுருச்யதே
ஸ்தாவராஸ்தத்ரவ்ருக்ஷாஸ்யு ஸ்ஸூக்ஷ்மாகுல்மலதாதயஃ

வியாக்யானம் —வபுஃ - சரீரம், ஸ்தாவரம் - ஸ்தாவரம், ஜங்கமஞ்ச - ஜங்கமும், இதி - என்று, த்விவிதம் - இருவிதமாய், உச்யதே - கூறப்படுவதாம், தத்ர - ஆண்டு, ஸ்தாவராஃ - ஸ்தாவரங்கள், வ்ருக்ஷாஃ - விருக்ஷங்கள், ஸூக்ஷ்மாஃ - சூக்குமங்களான, குல்மலதாதயஃ - செடி கொடி முதலியவைகளே, ஸ்யுஃ - ஆவன.

பொழிப்புரை— சரீரமானது தாவரம் ஜங்கமம் என்றிருவகையாம் ஆண்டுத்தாவரங்கள் விருக்ஷங்கள் சூக்குமங்களான செடி கொடி முதலியன.

### ஸ்லோகம்.

𑌅𑌣𑍍𑌡𑌜𑌾𑌸𑍍𑌵𑍇𑌦𑌜𑌾𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑌦𑍍𑌗𑌰𑍍𑌭𑌜𑌾 𑌇𑌤𑌿𑌜𑌙𑍍𑌗𑌮𑌾𑌃 |
𑌯𑍋𑌨𑌿𑌮𑌨𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌶𑌰𑍀𑌰𑌤𑍍𑌵𑌾𑌯 𑌦𑍇𑌹𑌿𑌨𑌃 || (௧௪)

𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌮𑌨𑍍𑌯𑍇𑌨𑍁𑌸𑌂𑌯𑌨𑍍𑌤𑌿 𑌯𑌥𑌾𑌕𑌰𑍍𑌮𑌯𑌥𑌾𑌶𑍍𑌰𑍁𑌤𑌮𑍍 |
𑌸𑍁𑌖𑍍𑌯𑌹𑌂𑌦𑍁𑌃𑌖𑍍𑌯𑌹𑌂𑌚𑍇𑌤𑌿 𑌜𑍀𑌵𑌏𑌵𑌾𑌭𑌿𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 || (௧௫)

*அண்டஜாஸ்வேதஜாஸ்தத்வ த்கர்பஜா இதிஜங்கமா:*
*யோநிமந்யேப்ரபத்யந்தே சரீரத்வாயதேஹிந:*
*ஸ்தாணுமந்யேநுஸம்யந்தி யதாகர்மயதாச்ருதம்*
*ஸுக்யஹம்து:க்யஹஞ்சேதி ஜீவஏவாபிமந்யதே.*

வியாக்யானம்— *ஜங்கமா: - ஜங்கமங்கள், அண்டஜா: - முட்டையிலிருந்துந்தோன்றுவதான பக்ஷி பாம்புமுதலியன, ஸ்வேதஜா: - வியர்வையிலிருந்துண்டாவன, தத்வத் - அங்ஙனமே, கர்ப்பஜா: -கருப்பையினின்றுண்டாவன, இதி - என (வழங்கப்படும்) அந்யேதேஹிந: - இதர தேகிகள் (தேவர்கள்), சரீரத்வாய - சரீரத்துவத்தின் பொருட்டு, யோநிம் - கர்ப்பகோசத்தை, ப்ரபத்யந்தே - அடைகின்றார்கள்.*

*அந்யே - இதரர்கள் (நரகிகள்), யதாகர்மம், யதாச்ருதம் - கர்மத்திற்கும் மறைக்குமிணங்க, ஸ்தாணும் - ஸ்தாவரசரீரத்தை, அநுஸம்யந்தி - அடைகின்றனர், அஹம், ஸுகி, - யான் சுகி, அஹம், துக்கி, ச,-யான் துக்கியென்று, ஜீவஏவ - சீவனே, அபிமந்யதே - அபிமானிக்கின்றான்.*

பொழிப்புரை—*ஜங்கமங்கள், அண்டஜங்கள் ஸ்வேதஜங்கள் கருப்பஜங்கள் என வழங்கப்படும் (தேவர்) இதர தேஹிகள் சரீரத்தைப் பெறுவதற்கெனக் கருப்பையை யடைகின்றனர் மற்றவர்கள் (அதாவது நரகிலிருந்து வருவோர்) கருமங்களுக்கும் சாத்திரங்களுக்குமிணங்க (ஸ்தாவரம்) புல்பூண்டு செடி கொடி மரங்களாய் இருக்குந்தன்மையை யடைகின்றனர். யான் சுகி யான் துக்கியென்று சீவனே யபிமானிக்கின்றவன்.*

ஸ்லோகம்.

நிர்லேபோபி பரம்ஜ்யோதிர் மோஹிதஸ்ஸம்புமாயயா |

நிர்லேபோபிபரம்ஜ்யோதி ர்மோஹிதச்சம்புமாயயா

வியாக்கியானம்—நிர்லேபஃ - நிர்லேபனும், பரம்ஜ்யோதிஃ அபி - பரஞ்சோதியாவோனுமாயினும், சம்புமாயயா - சம்புமாயையால், மோஹிதஃ - மயங்குவோனுகின்ருன்.

நுட்பம்—முந்திய சுலோகத்தில் சீவனே சுகியென்றும் துக்கியென்றும் அபிமானிக்கின்ருன் என்று கூறப்பட்டது, பிறகு மாயை நுலேந்தால் எவன் பரஞ்சோதியும் சுகதுக்க மற்றவனுமாகின்ருனே அவனே சுகிதுக்கியென்ற வனுபவத்தையுடையோன் என்பது எங்ஙனமொவ்வுமெனின் அதற்கேதுவை ஆன்மாவின் கன்மத்திற்குத் தக்கபடி சம்புவாற் காரியப்படுத்துகிற மாயையால் மோகத்தைப் பெற்று என்று கூறினர்.

ஸ்லோகம்.

காமஃக்ரோதஸ்ததாலோபோ மதோமாத்ஸர்யமேவச || (௩௬)

மோஹச்சேத்யரிஷட்வர்க மஹங்காரகதம்விதுஃ |

காமஃக்ரோதஸ்ததாலோபோ மதோமாத்ஸர்யமேவச

மோஹச்சேத்யரிஷட்வர்க மஹங்காரகதம்விதுஃ

வியாக்யானம்—காமஃ - காமம், க்ரோதஃ - க்ரோதம், ததாலோபஃ - அங்ஙனமே லோபமும், மதஃ - மதமும், மாத்ஸர்யஃ ஏவச - மாச்சரியமும், மோஹஃச - மோஹமும், இதி அரிஷட்வர்க்கம் - ஆகிய இவ்வறுவகைச்சத்துருக்களும், அகங்காரகதம் - அகங்காரத்தினிலடங்கியது என்று, விதுஃ - அறிகின்ருர்கள்.

பொழிப்புரை—காமம் குரோதம் லோபம் மதம் மாச்சரியம் மோஹம் எனுமிவ்வாறு பகைகளும் ஆங்காரத்தினிலடங்கு மெனப் படும்.

ஸ்லோகம்.

ஸத்வவ்யத்யயதோஜீவஸ்ய ஜாக்ரதவஸ்தயோஃ || (௩௭)

ஸ்வப்னோத்தஹாவாது ஜீவஸ்யகாரணம்தஃ |

ஸஷுப்திரவஸ்தா காரணம்ஸ்வஸ்ய ஸர்வதயோஃ || (௩௮)

ஸஏவபத்யதேஜீவ ஸ்வப்நஜாக்ரதவஸ்தயோ:.
ஸுஷுப்தௌததபாவாச்ச ஜீவச்சங்கரதாங்கத:
ஸஏவமாயயாஸ்ப்ருஷ்ட: காரணம்சுகது:கயோ:

வியாக்யானம் — ஸ: - ஜீவ:, ஏவ - அச்சீவனே, ஸ்வப்நஜாக்ரதவஸ்தயோ: - சொப்பனம் சாக்கிரமிவ்விரு அவத்தைகளிலும், பத்யதே - கட்டுப்படுகிறான், ஜீவ:- சீவன், ஸுஷுப்தௌ - சுஷுப்தியில், ததபாவாச்ச - அஃதிராததால், சங்கரதாம் - சுகத்தையனுபவிக்குந்தன்மையை, கத: - அடைந்தவனாகின்றான், ஸ:ஏவ - அவனே, மாயயா - மாயையால், ஸ்ப்ருஷ்ட: - சம்பந்திக்கப் பெற்றவனைக்கொண்டு, ஸுகதுக்கயோ: - சுகதுக்கங்களுக்கு, காரணம் - ஏதுவாகின்றான்.

பொழிப்புரை — அச்சீவனே ஜாக்கிரம் ஸ்வப்நம் என்ற வவஸ்தைகளில் கிடந்துழலுகின்றான். சுழுப்தியில் அந்தக்கரணம் ஒடுங்கியிருக்கின்றமையால் சீவன் சிவனாகின்றான் அதாவது சுகமடைகின்றான். பின்னரும் அவனே மாயாகருமத்தால் சுகதுக்கம்பெற்று அல்லல்படுகின்றான்.

நுட்பம் — இங்கு மூலத்தில், சுஷுப்திகாலத்தினில் சங்கரத்துவத்தையடைகின்றான் என்று கூறியுளதாயினும் சங்கரத்துவம் என்றதற்குச் சுகத்தையனுபவிக்குந் தன்மையென்றே பொருள் கொள்ள வேண்டியதே யுசிதம். என்னே ? தத்துவ காரியங்கள் பெரும்பாலுமில்லையாகலின் என்க.

கைவல்லியோபநிடதம்.

பிரமாணம்—ஸுஷுப்திகாலேஸகலேவிலீநே தமோபிபூத

ஸ்ஸுகரூபமேதி ||

ஸுஷுப்திகாலேசகலேவிலீநே தமோபிபூதஸ்ஸுகரூபமேதி.

சுஷுப்திகாலத்தினில் எல்லாமொடுங்கவே தமசினால் ஆக்ரமிக்கப்பட்டுச் சுகரூபனாகின்றான்.

ஸ்லோகம்.

ஸூர்யஜதவஸ்துஸ்ரவாங் மாயாஸம்பந்தமேவ |
தத்தாவிவேகஜ்ஞாநேந நகோவந்தா த்ருஷ்டிஸ்ஸுகாக ||

ஶுக்தௌ ரஜதவத்விச்வம் மாயயா த்ருச்யதே சிவே
ததோவிவேகஜ்ஞாநேந நகோப்யத்ராஸ்தி து:கபாக்.

வியாக்யானம் — ஶுக்தௌ - இப்பியில், ரஜதவத் - வெள்ளிபோல விஶ்வம் - எல்லாம், சிவே - சிவனிடம், மாயயா திருச்யதே - மாயையால்காணப்படுகிறது, தத: - ஆதலால், விவேகஞ்ஞாநேந - விசாரித்தவறிவால், அத்ர - இங்கு, க:அபி - ஒருவனும், துக்கபாக் - துக்கத்தைப்பெறுவோனாக, நாஸ்தி - இல்லை.

பொழிப்புரை — இப்பியில் வெள்ளிபோல எல்லாப் பிரபஞ்சமும் சிவனிடம் மாயையால் காணப்படுகின்றது. ஆதலால் ஈண்டு விசாரித்தறியுங்கால், துக்கமடைவோனெவனுமில்லை.

நுட்பம்—இப்பியில் வெள்ளிபோலென்றதனால், இப்பியை யறியாதகாலத்து வெள்ளி தோன்றுவதும் இப்பி தோன்றியகாலத்து வெள்ளி தோன்றாததும் எங்ஙனமோ அதுபோல, சிவஞான மிராத காலத்து உலகுதோன்றும், சிவஞானகாலத்தில் உலகு தோன்றாது என்பதறிக. சிவனிடம் என்றதனால் சிவனே ஸர்வாதாரன் என்பதும் மாயையால் என்றதனால், மாயையே யுலகாய்ப் பரிணமிக்கின்றதென்பதுமறிக.

ததோவிரம து:காத்த்வம் கிம்முதா பரிதப்யஸே ।
இராமர்விஞ-ஊெநஸவ-ழிஜஂஸத்ஂ யதூஉஜெஂ கூபெரிதஂ॥(சய)

ததோவிரமது:காத்வம் கிம்முதாபரிதப்யஸே
முநேஸர்வமிதம்ஸத்யம் யந்மதக்ரேத்வயேரிதம்.

வியாக்யானம்—தத: - ஆதலால், த்வம் - நீ, துக்காத் - துக்கத்தினின்றும், விரம - ஒழிவடைவாயாக. கிம் - ஏன், முதா - வியர்த்தமாக, பரிதப்யஸே - பரிதவிக்கிறனே, இராமன் கூறியதாவது, முநே - ஓ முனிவரே, மதக்ரே - எனக்கெதிரில், த்வயா - உங்களால், யத் - யாதொன்று, ஈரிதம் - கூறப்பட்டதோ, இதம் ஸர்வம் - இதெல்லாம், ஸத்யம் - உண்மை.

பொழிப்புரை—ஆதலால் நீ துக்கத்தினின்று ஒழிவடைவாயாக ஏன்வியர்த்தமாய்த் தவிக்கின்றனே. இராமன் ஓ முனிவரே என்னிடம் தங்களால் கூறப்பட்டதெல்லாம் உண்மையே.

ஸ்லோகம்.

𑌤𑌥𑌾𑌪𑌿 𑌨 𑌜𑌹𑌾𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌮𑍁𑌲𑍍𑌬𑌣𑌮𑍍 |
𑌮𑌤𑍍𑌤𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌥𑌾 𑌮𑌦𑍍𑌯𑌂 𑌨𑌷𑍍𑌟𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌪𑌿 𑌦𑍍𑌵𑌿𑌜𑌮𑍍 || (௪௧)

ததாபிநஜஹாத்யேத த்ப்ராரப்தாத்ருஷ்டமுல்பணம்
மத்தம்குர்யாத்யதாமத்யம் நஷ்டாவித்யமபித்விஜம்.

வியாக்யானம்—ததா அபி - அங்ஙனமாயினும், ஏதத் - இத்துக்கமானது, நஜஹாதி - விடவில்லை, உல்பணம் - கடுமையான, ப்ராரப்தாத்ருஷ்டம் - பிராரப்தகருமமானது, யதா - எங்ஙனம், மத்யம் - மத்யமானது, நஷ்டாவித்யம் - அவித்தை தொலையப்பெற்றவனாகிய, த்விஜம்அபி - அந்தணனையும், மத்தம்குர்யாத் - மதிக்கச்செய்கின்றதோ. (அவ்வாறு என்றறிக.)

பொழிப்புரை—அங்ஙனமாயினும் இந்தத் துக்கமானது விடவில்லை. கடுமையான ப்ராரப்தகருமமானது அஞ்ஞானம்நீங்கிய வந்தணனையும் எவ்வாறு கள்ளானது மதிக்கச்செய்யுமோ அவ்வாறென்க.

நுட்பம்—இங்குப் பிராப்தமானது என்றதனால் - அனுபவிக்கத் தொடங்கியவினை, யதாவது ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாமியம் என்பதான மூவ்வகைக்கருமத்தினுள் ஏற்கனவே சம்பாதித்துப் பரிபாகமில்லாமல் அப்பரிபாகத்தை எதிர்பார்த்துக்கொண்டு அந்தக்கரணத்தில் பொருந்தி வாஸநாமயமாய் நிற்கும் கருமமே சஞ்சிதமாம் இச்சஞ்சிதகருமங்களுள் பரிபாகப்பட்டு அனுபவிக்க எழுந்த கருமமே பிராரப்தம். அனுபவிக்கவந்த இச்சென்மத்தில் இனிச் செய்யுங்கருமமே ஆகாமியமாம். இதனுள் பிராரப்தத்தைத்தடுக்க மாளாது. அது ஞானத்தினாற்றொலையாது. இதற்குதாரணம் ஞானியாயினும் கட்குடித்தால் அவனுக்கு எங்ஙனம் மதத்தை யுண்டாக்குமோ அங்ஙனமே பிராரப்தமும் வருத்துபாதாம் ஞானத்தினாற்றொலையாதென்றறிக. இதையேபின் னிரூபிக்கின்றனர்.

ஸ்லோகம்.

𑌤𑌦𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌭𑍋𑌗𑍋𑌽𑌪𑌿 𑌨 𑌜𑌹𑌾𑌤𑌿 𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌨𑌮𑍍 |
𑌤𑌤𑌃 𑌕𑌿𑌂 𑌬𑌹𑍁𑌨𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌂 𑌸𑌶𑌿𑌵𑌸𑍍𑌯𑌤𑌃 || (௪௨)

தத்வத்ப்ராரப்தபோகோபி நஜஹாதிவிவேகிநம்
ததஃகிம்பஹுநோக்தேந ப்ராரப்தம்ஸசிவஸ்ம்ருதஃ.

வியாக்யானம்—தத்வத் - அதுபோல, ப்ராரப்தபோகஃ - பிராப்தகருமமானது, விவேகிநம் அபி - விவேகியைக்கூட, நஜஹாதி - விட்டுவிடாது, ததஃ - ஆதலின், பஹுநோக்தேந - மிக்கக்கூறுவதால், கிம் - யாதுளது, ப்ராரப்தம் - பிராரப்தமானது, ஸஃ ஶிவஃ அச்சிவனென்றே, ஸ்மிருதஃ - தீர்மானிக்கப்பட்டது.

பொழிப்புரை—அதுபோல ப்பிராரப்தகருமமானது விவேகியைக்கூடவிடாது. ஆதலின் மிக்கக்கூறுவதால் யாதுபயன் பிராரப்தமானது சிவன் என்று எண்ணப்பட்டது. இங்குச் சிவன் என்று கூறியது ஔபசாரிகவபேதம் என்பதறிக. சிவபெருமானைத்தடுப்பது எவராலும் மாளாததுபோல பிராரப்தத்தையும் தடுக்கமாளாது ஆதலால் அங்ஙனம் கூறப்பட்டது. சிவபெருமான் என்ற சொல்லுக்கு முற்கூறிய ஒப்புமை ஸம்பந்தத்தால் கௌணவிருத்தியிலக்கணையால் வலியுடையது என்று ஆகுபெயர்கொள்க.

ஶ்லோகம்.

ബാധതേ മാം ദിവാരാത്രമഹങ്കാരോഽപി താദൃശഃ ।
അത്യന്തപീഡിതോ ജീവഃ സ്ഥൂലദേഹം വിമുഞ്ചതി ॥ (௪௩)

பாததேமாம்திவாராத்ர மஹங்காரோபிதாத்ருசஃ
அத்யந்தபீடிதோஜீவ ஸ்தூலதேகம்விமுஞ்சதி.

வியாக்யானம்—தாத்ருசஃ - அங்ஙனமான, அஹங்காரோபி - அஹங்காரமும், மாம் - என்னை, திவாராத்ரம் - இரவும் பகலும், பாததே - தொந்தரவுசெய்கின்றது, அத்யந்தபீடிதஃ - மிக்கத்தொந்தரவுபெறுவானாகில், ஜீவஃ-சீவன், ஸ்தூலதேகம் - தூலதேகத்தினை, விமுஞ்சதி - விடுகின்றான்.

பொழிப்புரை—அங்ஙனமான அகங்காரமும் என்னை இரவும் பகலும் தொந்தரவு செய்கின்றது, மிக்கத்தொந்தரவடைவானாகில் சீவன் தூலதேகத்தை விடுகின்றான்.

ஸ்லோகம்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑍀𑌵𑌾𑌪𑍍𑌤𑌯𑍇𑌮𑌹𑍍𑌯𑌂 𑌉𑌪𑌾𑌯𑌃𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑌾𑌂𑌤𑍍𑌵𑌯𑌾 ।
தஸ்மாஜ்ஜீவாப்தயேமஹ்யம் உபாயஃக்ரியதாம்த்வயா

வியாக்யானம்—தஸ்மாத் - ஆதலால், ஜீவாப்தயே - ஜீவிப்ப தன்நிமித்தம், மஹ்யம் - எனக்கு, உபாயஃ - உபாயமானது, த்வயா - உங்களால், க்ரியதாம் - கற்பிக்கத்தக்கது.

பொழிப்புரை —ஆகையால் (நான்) சீவிப்பதின் பொருட்டு எனக்கொரு உபாயமானது உம்மால் சொல்லத்தக்கது.

இரண்டாவதத்தியாய முற்றிற்று.



# மூன்றுவ தத்தியாயம்.



## அகஸ்தியர்விடை.

𑌨 𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌵𑌚𑌃 𑌪𑌥𑍍𑌯𑌂 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌦𑌿𑌪𑍀𑌡𑌿𑌤𑌃 ।
𑌹𑌿𑌤𑌂 𑌨 𑌰𑍋𑌚𑌤𑍇 𑌤𑌸𑍍𑌯 𑌮𑍁𑌮𑍂𑌰𑍍𑌷𑍋𑌰𑌿𑌵 𑌭𑍇𑌷𑌜𑌮𑍍 ॥

நக்ருஹ்ணுதிவச:பத்யம் காமக்ரோதாதிபீடித:
ஹிதம்நரோசதேதஸ்ய முமூர்ஷோரிவபேஷஜம்.

வியாக்யானம் — காமக்ரோதாதிபீடித: - காமக்குரோதாதிகளால் பீடிக்கப்பட்டவன், பத்யம்வச: - இதமானசொல்லே, நகிருஹ்ணுதி - கேட்கின்றதில்லை, தஸ்ய - அவனுக்கு, முமூர்ஷோ: - உயிர்துறப்போருக்கு, பேஷஜம்இவ - மருந்துபோல, ஹிதம் - இதமானது, நரோச்தே - ருசிப்பதில்லை.

பொழிப்புரை — காமக்குரோதம் முதலியவைகளால் பீடையடைந்தவன் இதமான சொல்லைக் கேட்கிறதில்லை. ஆயுள் முடிந்தவனுக்கு ஔஷதம் யுக்தமாய்த்தோன்றாததுபோல் அவனுக்கும் இதம் ருசிக்காது.

நுட்பம்—சென்ற அத்தியாயத்தி னிறுதியில், துக்கமடையாமலிருப்பதற்கு யாதாவது கூறவேண்டுமென்ற இராமரது வசனத்திற்கு இச்சுலோகத்தினல் பதிலுரைக்கின்றார். ஓ ராம! நீ துக்கமடையாதிருக்க வேண்டுமாயின் துக்க ஏதுக்களான காமக்குரோதாதிகளாய அறுபகையும் துலைக்கவேண்டுமாதலால் அங்ஙனம் துலைப்பதற்குறிய தத்துவத்தை யுபதேசித்தேன், அது உனக்கு சிதமாய்ப்புலப்படவில்லை யென்பதைப்பொதுவாய்க்கூறி அதற்கு ஓர் உதாரணமும் இச்சுலோகத்திலேயே கூறப்பட்டது.

## ஸ்லோகம்.

𑌶𑍇𑌯𑍍𑌯𑌸𑍂𑌕𑍍𑌤𑌂 𑌪𑌾𑌨𑍀𑌤𑌾 𑌸𑍀𑌤𑌾𑌶𑍍𑌚𑍈𑌤𑍍𑌯𑌨𑌾𑌯𑌿𑌨𑌾 ।
𑌰𑍂𑌪𑌾𑌸𑍍𑌯𑌤𑌿 𑌨𑌾𑌰𑍇𑌣𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌤𑌵 𑌸𑌨𑍍𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 ॥ (உ)

மத்யேசமுத்ரம்யாநீதா ஸீதாதைத்யேநமாயிநா
ஆயாஸ்யதிநரச்ரேஷ்ட ஸாகதம்தவஸந்நிதிம்.

வியாக்யானம்—நரச்ரேஷ்ட - ஓ நரச்ரேஷ்டனே, மாயிநா - மாயாவியான, தைத்யேந - அரக்கனால், மத்யேஸமுத்ரம் - சமுத்திர நடுவில், யாஸீதா - யாதொரு ஸீதையானவள், நீதா - கொண்டு போகப்பட்டாளோ, ஸா - அச்சீதை, தவ, ஸந்நிதிம், - உன்னருகில், கதம் - எப்படி, ஆயாஸ்யதி - வருவாள்.

பொழிப்புரை—ஓ நரச்ரேஷ்டனே மாயாவியான அரக்கனால் சமுத்திரநடுவில் எந்தச்சீதை கொண்டு போகப்பட்டனளோ அச் சீதை உன் சந்நிதிக்கெவ்விதம்வருவாள்.

நுட்பம்.—சீதை இராமனால் கிரகிக்கப்படுவளென்பது அகஸ்தியரறிந்தும் இராவணனுடைய பராக்கிரமத்தைக் குறிப்பாலுணர்த்துகின்றார்.

ஸ்லோகம்.

ஶஹ்யந்தேதேவதாஸ்ஸர்வா த்வாரிமர்கடயூதவத் |
கிஞ்சசாமரதாரிண்யோ யஸ்யஸந்திஸுராங்கநா: ‖ (௯)

பத்யந்தேதேவதாஸ்ஸர்வா த்வாரிமர்க்கடயூதவத்
கிஞ்சசாமரதாரிண்யோ யஸ்யசந்திசுராங்கநா:

வியாக்யானம் — யஸ்ய - எவனது, த்வாரி - வாசற்படியில், ஸர்வா:, தேவதா: - எல்லாத்தேவர்களும், மற்கடயூதவத் - குரங்குக் கூட்டம்போல, பத்தியந்தே, கட்டப்படுகின்றார்களோ, கிஞ்ச - மேலும், யஸ்ய - எவனுக்கு, ஸுராங்கநா: - தேவஸ்திரீகள், சாமரக்ராஹிண்ய: - சாமரம்பிடித்தவர்களாய், ஸந்தி - இருக்கின்றனரோ.

பொழிப்புரை—எந்த ராவணனது வாசலில் எல்லா தேவர்களும் குரங்குக்கூட்டம்போல கட்டுப்பட்டுநிற்கின்றார்களோ அன்றியும் எந்த அரக்கனுக்குத் தேவமங்கையர்களெல்லோரும் சாமரம் வீசுகின்றனரோ.

முந்திய சுலோகத்தில், சீதை எப்படி உன்னிடம் வரக்கூடும், என்று கூறினர், அங்ஙனம் அவள் வரமாளாது என்பதற்கு ஏதுக்களை இச்சுலோகம்தொடங்கி நான்கு சுலோகங்களால் கூறுகின்றார். அவ்வேதுக்களோவெனின், மிக்க பராக்கிரமமுள்ள அவ்

வரக்கனால் கொண்டுபோகப்பட்ட சீதையைக்கொண்டு வரவேண்டு மானால் அவ்வரக்கனை வென்றால் தான் முடியும் அவனையோவெல்ல மாளாது என்று கூறத்தொடங்கினர்.

ஸ்லோகம்.

[Grantha script]
[Grantha script] ॥ (௪)

புங்க்தேத்ரிலோகீமகிலாம் யஶ்ஶம்புவரதர்ப்பித:
நிஷ்கண்டகம்தஸ்யஜய: கதம்தவபவிஷ்யதி.

வியாக்யானம்— ய: - எவன், ஶம்புவரதர்ப்பித: - சிவபெருமானது வரன்களால் கர்வமடைந்தவனாய்க்கொண்டு, த்ரிலோகீம் அகிலாம் - மூவுலகனைத்தையும், நிஷ்கண்டகம் - தடையற்று, புங்க்தே - புசிக்கின்றானோ, தஸ்ய - அவனுடைய, ஜய: - ஜயமானது, தவ - உனக்கு, கதம் - எங்ஙனம், பவிஷ்யதி - ஏற்படும்.

பொழிப்புரை—எவன் சிவபெருமானது வரத்தினால் கர்வமடைந்தவனாய் மூவுலகனைத்தும் இடையூறற்றுப் புசிக்கின்றானோ அவனை நீ எவ்விதம் செயிக்கக்கூடும்.

ஸ்லோகம்.

[Grantha script] ।
[Grantha script]॥ (௫)

இந்திரஜிந்நாமபுத்ரோய ஸ்தஸ்யாஸ்தீசவரோத்தத:
தஸ்யாக்ரேஸங்கரேதேவா: பஹுவாரம்பலாயிதா:

வியாக்யானம்— ய: - எவன், ஈசவரோத்தத: - ஈஸ்வரன்கொடுத்தவரங்களால் மதங்கொண்டவனும், இந்திரஜித் - இந்திரஜித், நாம - என்று பிரசித்திபெற்றவனுமாய் உளனோ அவன், தஸ்ய - அந்த ராவணனுக்கு புத்ரன், தஸ்ய - அவ்விந்திரஜித்தின், அக்ரே - முன், ஸங்கரே - யுத்தத்தில், தேவா: - தேவர்கள், பஹுவாரம் - அநேக முறை, பலாயிதா: - பயந்து ஓடினவர்கள்.

பொழிப்புரை — எவன் சிவபெருமானது வரங்களால் மதித்தவனுமாய் இந்திரசித்தென்று பிரசித்தி பெற்றவனுமா யிருக்கின்

ருனே. அவன் ராவணனுக்குப் புதல்வன். அவனெதிரில் உயுத்தத்தில் நிற்கமாளாது தேவர்களும் பன்முறை பயந்தோடினார்கள்.

ஸ்லோகம்.

𑌕𑍁𑌮𑍍𑌭𑌕𑌰𑍍𑌣𑌾𑌹𑍍𑌵𑌯𑍋 𑌭𑍍𑌰𑌾𑌤𑌾 𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍀𑌤𑍍𑌸𑍁𑌰𑌸𑍂𑌦𑌨𑌃 ।
𑌅𑌨𑍍𑌯𑍋 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌚𑌿𑌰𑌞𑍍𑌜𑍀𑌵𑍀 𑌵𑌿𑌭𑍀𑌷𑌣𑌃 ॥ (௬)

கும்பகர்ணஹ்வயோப்ராதா யஸ்யாஸ்திஸுரஸூதந:
அந்யோதிவ்யாஸ்த்ரஸம்யுக்த: சிரஞ்சீவீவிபீஷண:.

வியாக்யானம்—ஸுரஸூதந: - தேவருக்கந்தகனன, கும்பகர்ணாஹ்வய: - கும்பகருணனென்பவன், யஸ்ய - எவனுக்கு, ப்ராதா - சகோதரனோ எவனுக்கு, அந்ய:-மற்றொரு சகோதரன், திவ்யாஸ்திரஸம்யுக்த: - திவ்வியாஸ்திரங்களையுடையோனும், சிரஞ்சீவி - வெகுகாலம் சீவித்திருப்பவனுமாகிய, விபீஷண: - விபீஷணனென்பவனோ.

பொழிப்புரை—தேவருக்கந்தகனும் கும்பகர்ணனென்று பெயருள்ளவன் எவனுக்குச் சகோதரனோ, எவனுக்கு மற்றொரு சகோதரன் திவ்வியாஸ்திரங்களையுடையோனும் வெகுகாலம் சீவிப்போனுமான விபீஷண னென்பவனோ.

ஸ்லோகம்.

𑌦𑍁𑌰𑍍𑌗𑌂 𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌿 𑌲𑌙𑍍𑌕𑌾𑌖𑍍𑌯𑌂 𑌦𑍁𑌰𑍍𑌜𑌯𑌂 𑌦𑍇𑌵𑌦𑌾𑌨𑌵𑍈𑌃 ।
𑌚𑌤𑍁𑌰𑌙𑍍𑌗𑌂 𑌬𑌲𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌕𑍋𑌟𑌿𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑌯𑌾 ॥ (௭)

துர்கம்யஸ்யாஸ்திலங்காக்யம் துர்ஜயம்தேவதானவை:
சதுரங்கம்பலம்யஸ்ய வர்ததேகோடிஸங்க்யயா.

வியாக்யானம் — யஸ்ய - எவனுக்கு, துர்க்கம் - எவராலும் போகமாளாததான, லங்காகாக்யம்-இலங்கையென்ற நகரம், அஸ்தி- உளதோ, யஸ்ய - எவனுக்கு, தேவதானவை: - தேவாசுரர்களால் துர்ஜ்ஜயம் - ஜயிக்கமாளாததான, சதுரங்கம்பலம்-நால்வகைச்சேனையும், கோடிஸங்க்யயா - கோடிக்கணக்காய், வர்த்ததே - இருக்கின்றதோ.

பொழிப்புரை—எவனுக்கு எவராலும் போகக்கூடாததான லங்கையென்ற நகரம் உளதோ, எவனுக்குத் தேவாசுரர்களால் செயிக்கக்கூடாததும் கோடிக்கணக்காயுமுள்ள நால்வகைச் சைன்னியம் உளதோ.

ஸ்லோகம்.

ஏகாகிநா த்வயா ஜெய: ஸகதம் ரகுநந்தந |
ஆகாங்க்ஷதே கரே தர்த்தும் பால: சந்த்ரமஸம் யதா ||
ததா த்வம் காமமோஹேந ஜயம் தஸ்யாபிவாஞ்சஸி |

ஏகாகிநா த்வயாஜேய: ஸகதம்ரகுநந்தந
ஆகாம்க்ஷதேகரேதர்த்தும் பாலச்சந்த்ரமஸம்யதா
ததா த்வம்காமமோஹேந ஜயம்தஸ்யாபிவாம்சஸி

வியாக்யானம் — ரகுநந்தன - ஓ ரகுவம்சத்திலுண்டான ராமனே, ஸ: - அவ்விராவணன், ஏகாகிநா - ஒருவனுன, த்வயா-உன்னுல், கதம் - எப்படி, ஜேய: - செயிக்கப்படுவான், பால: - குழந்தை, யதா-எப்படி, சந்த்ரமஸம்-சந்திரனே, கரேதர்த்தும்-கையில்வைத்துக்கொள்ள, ஆகாங்க்ஷதே - விரும்புகின்றதோ, ததா - அதுபோல, த்வம்-நீ, காமமோஹேந - காமமயக்கத்தால், தஸ்ய - அவனது, ஜயம்-ஜெயத்தை, அபிவாஞ்சஸி - விரும்புகின்ருய்.

பொழிப்புரை—ஓ ரகுநந்தனு அவ்விராவணன் ஒருவனுகிய உன்னுல் எப்படி செயிக்கப்படுவான், குழந்தை சந்திரனேப் பிடித்துக் கையில் வைத்துக்கொள்ள எவ்விதம் விரும்புகின்றதோ அவ்விதமே நீ காமமயக்கத்தால் அவ்விராவணனே செயிக்கவிரும்புகின்ருய்.

இராமர்வினு.

க்ஷத்ரியோஹம் முநிச்ரேஷ்ட பார்யா மே ரக்ஷஸாஹ்ருதா (அ)
யதி தம் ந நிஹந்ம்யாசு ஜீவநே மேஸ்தி கிம் பலம் |
க்ஷத்ரியோஹம்முநிச்ரேஷ்ட பார்யாமேரக்ஷஸாஹ்ருதா
யதிதம்நநிஹநம்யாசு ஜீவநேமேஸ்திகிம்பலம்.

வியாக்யானம் — முநிச்ரேஷ்ட - ஓ முனிவர்கோனே, அஹம் - நான், க்ஷத்திரிய:-க்ஷத்திரியன், மேபார்யா -எனது மனேவி ரக்ஷஸா -

அரக்கனால், ஹ்ருதா - அபகரிக்கப் பட்டாள், தம் - அவ்வரக்கனை, ஆசு - சீக்கிரமாய், நஹிஹந்மியதி - கொல்லாவிடில், மே - எனக்கு, ஜீவநே - ஜீவிப்பதில், கிம் பலம் அஸ்தி - என்ன பயனுள்ளது.

பொழிப்புரை — ஓ முனிவரரே, யான் க்ஷத்திரியன் எனது மனைவி அரக்கனால் அபகரிக்கப்பட்டனள் அவ்வரக்கனைச் சீக்கிரமாய்க் கொல்லாவிடில் சீவிப்பதில் எனக்கு யாது பயன்.

ஸ்லோகம்.

𑌅𑌤𑌸𑍍𑌤𑍇 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌬𑍋𑌧𑍇𑌨 𑌨𑌮𑍇𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 ॥ (௧௰)

அதஸ்தேதத்வபோதேந நமேகிஞ்சித்ப்ரயோஜநம்

வியாக்யானம் — அதஃ - ஆதலால், தே - தங்களது, தத்வபோதேந - தத்துவஞான உபதேசத்தால், மே - எனக்கு, நகிஞ்சித்பிரயோஜநம் - கொஞ்சமும் பிரயோஜனமில்லை.

பொழிப்புரை — ஆதலால் தங்களது தத்துவோபதேசத்தால் எனக்கு ஒரு பயனுமில்லை.

ஸ்லோகம்.

𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌦𑌯𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇 𑌦𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍈𑌸𑍍𑌤𑌨𑍁𑌰𑍍𑌮𑌮 ।
𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑍋𑌽𑌪𑌿𑌮𑍇𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌜𑍀𑌵𑌨𑌂𑌹𑌨𑍍𑌤𑍁𑌮𑍁𑌦𑍍𑌯𑌤𑌃 ॥ (௧௧)

காமக்ரோதாதயஸ்ஸர்வே தஹ்யதேதைஸ்தநுர்மம
அகங்காரோபிமேநித்யம் ஜீவநம்ஹந்துமுத்யதஃ.

வியாக்யானம் — காமக்ரோதாதயஃஸர்வே - காமம் குரோதம் முதலியவைகளெல்லாம் என்னிடமுள, தைஃ - அவைகளால், மம தநுஃ - எனதுதேகம், தஹ்யதே - கொளுத்தப்படுகின்றது, அஹங்காரோபி - அகங்காரமும், மே - எனது, ஜீவம் - ஜீவனை, ஹந்தும் - கொல்லுவதற்கு, நித்தியம் - எப்பொழுதும், உத்யதஃ - தயாராயிருக்கின்றது.

பொழிப்புரை—காமம் குரோதம் முதலியவைகளெல்லாம் என்னிடமிருக்கின்றன. அவைகளால் எனது தேகம் கொளுத்தப்படுகின்றது. அகங்காரமும் எனது சீவனைக்கொல்லுவதற்கு எப்பொழுதும் தயாராகவேயிருக்கின்றது.

ஶ்லோகம்.

𑌹𑍃𑌤𑌾𑌯𑌾𑌂 𑌨𑌿𑌜𑌕𑌾𑌨𑍍𑌤𑌾𑌯𑌾𑌂 𑌶𑌤𑍍𑌰𑍁𑌣𑌾𑌵𑌮𑌤𑌸𑍍𑌯 𑌵𑌾 |
𑌯𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌬𑍁𑌭𑍁𑌤𑍍𑌸𑌾 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌸 𑌲𑍋𑌕𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌧𑌮𑌃 || (௧௬)

*ஹ்ருதாயாம்நிஜகாந்தாயாம் சத்ருணாவமதஸ்ய்வா*
*யஸ்யதத்வபுபுத்யாஸ்யாத்ஸ லோகேபுருஷாதமஃ.*

வியாக்யானம்—*நிஜகாந்தாயாம் - தனது மனைவி, ஹருதாயாம் - அபஹரிக்கப்பட்டிருக்கும்போது, சத்ருணாவமதஸ்ய்வா - அல்லது சத்துருவால் அவமானம் செய்யப்பட்டவனை, யஸ்ய - எவனுக்கு, தத்வபுபுத்ஸா - தத்துவஞா நேச்சையானது, ஸ்யாது - உண்டாகின்றதோ, ஸஃ - அவன், லோகே - உலகத்தில், புருஷாதம: - புருஷருக்குள் அதமனேயாவான்.*

பொழிப்புரை — *தனது மனைவி அபகரிக்கப்பட்டிருக்கும் பொழுது அல்லது சத்துருவா லவமானமடைந்தவனுயிருக்கும் பொழுதாவது எவனுக்குத்தத்துவோபதேசம்பெற அல்லது தத்துவாராய்ச்சிசெய்யவேண்டுமென்ற விருப்பமுண்டாகின்றதோ உலகத்தில் அவன் புருஷருக்குள் அதமனேயாவான்.*

ஶ்லோகம்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌵𑌧𑍋𑌪𑌾𑌯𑌂 𑌲𑌙𑍍𑌘𑌯𑌿𑌤𑍍𑌵𑌾𑌮𑍍𑌬𑍁𑌧𑌿𑌂 𑌮𑍁𑌨𑍇 |
𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌮𑍇 𑌮𑍁𑌨𑌿𑌶𑌾𑌰𑍍𑌦𑍂𑌲 𑌤𑍍𑌵𑌤𑍍𑌤𑍋 𑌨𑌾𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌮𑍇 𑌗𑍁𑌰𑍁𑌃 ||

*தஸ்மாத்தஸ்யவதோபாயம் லங்கயித்வாம்புதிம்முநே*
*ப்ருஹிமேமுநிசார்தூல த்வத்தோநாந்யோஸ்திமேகுருஃ.*

வியாக்யானம்—*முநே - ஓ முனிவரே, தஸ்மாத் - ஆதலால், அம்புதிம் லங்கயித்வா - கடலைத்தாண்டி, தஸ்ய வதோபாயம் - அவனைக்கொல்லுமுபாயத்தை, ப்ருஹி - கூறுங்கள். முநிசார்த்தூல - ஓ முனிச்ரேஷ்டரே, மே - எனக்கு, த்வத்தஃ - உங்களிலும், அந்யஃ - அந்நியரான, குருஃ - ஆசிரியர், நாஸ்தி - இல்லை.*

பொழிப்புரை — *ஓ முநிவரே, ஆதலால் கடலைத்தாண்டி உயுத்தத்தில் அவனைக்கொல்லுவதில் எனக்கு உபாயத்தைக் கூறுங்கள் முனிவருட் சிறந்தவரே தங்களைத் தவிர எனக்கு வேறு குருவில்லை.*

### அகஸ்தியர்விடை.

𑌅𑌗𑌸𑍍𑌤𑍍𑌯 𑌉𑌵𑌾𑌚 — 𑌏𑌵𑌂 𑌚𑍇𑌚𑍍𑌛𑌰𑌣𑌂 𑌯𑌾𑌹𑌿 𑌪𑌾𑌰𑍍𑌵𑌤𑍀𑌪𑌤𑌿𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 |
𑌸 𑌚𑍇𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑍋 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑌾𑌞𑍍𑌛𑌿𑌤𑌾𑌰𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌦𑌾𑌸𑍍𑌯𑌤𑌿 ‖

அகஸ்த்யஉவாச—ஏவம்சேச்சரணம்யாஹி பார்வதீபதிமவ்யயம்
ஸசேத்ப்ரஸந்நோபகவான் வாஞ்சிதார்த்தம்ப்ரதாஸ்யதி.

வியாக்யானம்—ஏவம்சேத் - இங்ஙனமாயின், அவ்யயம் - அவ்யயரான, பார்வதீபதிம் - சிவபெருமானை, சரணம்யாஹி - சரணமடைவாயாக, ஸ: பகவாந் - அப்பகவான், ப்ரஸந்ந: சேத் - பிரஸந்நராயின், வாஞ்சிதார்த்தம் - விரும்பியபொருளை, ப்ரதாஸ்யதி - கொடுப்பார்.

பொழிப்புரை—இங்ஙனமாயின் அவ்வியயரான பரசிவத்தைச் சரணமடைவாயாக. அந்த பகவான் பிரஸந்நரானுல் விரும்பிய பொருளைக் கொடுப்பார்.

### ஸ்லோகம்.

𑌦𑍇𑌵𑍈𑌰𑌜𑍇𑌯𑌃 𑌶𑌕𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑍈𑌰𑍍𑌹𑌰𑌿𑌣𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾𑌪𑌿 𑌵𑌾 |
𑌸 𑌤𑍇 𑌵𑌧𑍍𑌯𑌃 𑌕𑌥𑌂 𑌵𑌾𑌸𑍍𑌤𑍁 𑌶𑌙𑍍𑌕𑌰𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌂 𑌵𑌿𑌨𑌾 ‖ (கரு)

தேவைரஜேயச்சக்ராத்யை ர்ஹரிணப்ருஹ்மணபிவா
ஸ்தேவத்ய:கதம்வாஸ்து சங்கராநுக்ரஹம்விநா.

வியாக்யானம் — சக்ராத்யை: - இந்திராதிகளான, தேவை: - தேவர்களாலும், ப்ருஹ்மண - பிருஹ்மனாலும், ஹரிணபிவா - விஷ்ணுவாலும், அஜேய: - ஜெயிக்க மாளாதவனான, ஸ: - அவ்விராவணன், சங்கராநுக்கிரஹம்விநா - சிவபெருமானது திருவருளின்றி, கதம்- எங்ஙனம், தே வத்ய: அஸ்து - உன்னால் கொல்லப்படுவோனுவான்.

பொழிப்புரை—இந்திராதிகளான தேவர்களாலும் பிர்ம்மனாலும் விஷ்ணுவினாலும் செயிக்கக்கூடாதவனான அவ்விராவணன் சங்கரனது அருளின்றி எங்ஙனம் உன்னால் கொல்லப்படுவோன் ஆவான்.

## ஸ்லோகம்.

𑌅𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍀𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌵𑌿𑌰𑌜𑌾𑌗𑌮𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 ।

𑌤𑍇𑌨 𑌮𑌾𑌰𑍍𑌗𑍇𑌣 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌤𑍇𑌜𑍋𑌮𑌯𑍋 𑌭𑌵 ॥(கசு)

அதஸ்த்வாம்தீக்ஷயிஷ்யாமி விரஜாகமமாச்ரிதஃ

தேநமார்க்கேணமர்த்யத்வம் ஹித்வாதேஜோமயோபவ.

வியாக்யானம்—அதஃ - ஆகையால், விரஜாகமம் ஆச்ரிதஃ - விரசாகமத்தையாச்ரயித்தவனுப், த்வாம்தீக்ஷயிஷ்யாமி - உனக்குத்தீக்ஷைசெய்துவைக்கின்றேன், தேந மார்க்கேண - அவ்வழியால், மர்த்தியத்துவம் - மனிதத்தன்மையை, ஹித்வா - விடுத்து, தேஜோமயஃ - தேஜோமயனுக, பவ - ஆய்விடு.

பொழிப்புரை—அவ்விறைவனது அருள்வேண்டுமாதலால் விரசாக்கிரமத்தைக்கொண்டு உனக்குத் தீக்ஷைசெய்து வைக்கின்றேன் அம்முறையால் மனிதத்தன்மையைவிட்டு திவ்வியதேகமுடையோனுவாய்.

## ஸ்லோகம்.

நுட்பம்—சிவபெருமான் திருவருளினையடையவேண்டுமாயின் தீட்சையத்தியாவசிய மாகலின் இராமனைத் தீட்சைசெய்து கொள்ளும்படி அகத்தியர் கூறினர்.

𑌤𑍇𑌨 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌰𑌣𑍇 𑌶𑌤𑍍𑌰𑍂𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌕𑌾𑌮𑌾𑌨𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥

𑌸𑍂𑌤 𑌉𑌵𑌾𑌚 ॥ 𑌅𑌥 𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 𑌰𑌾𑌮𑌸𑍍𑌤𑌂 𑌦𑌣𑍍𑌡𑌵𑌨𑍍𑌮𑍁𑌨𑌿𑌸𑌤𑍍𑌤𑌮𑌂 ॥

𑌉𑌵𑌾𑌚 𑌦𑍁𑌃𑌖𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌟𑍇𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 (கஎ)

தேனஹத்வாரணேசத்ரூன் ஸர்வான்காமாநவாப்ஸ்யஸி

ஸூதஉவாச—அதப்ரணம்யராமஸ்தம் தண்டவந்முனிஸத்தமம்,

உவாசதுஃக்கநிர்முக்தஃ ப்ரஹ்ருஷ்டேநாந்தராத்மநா

வியாக்யானம்—தேந - அவனது அருளால், சத்ரூந் - பகைவர்களை, ரணே - யுத்தத்தில், ஹத்வா - கொன்று, ஸர்வாந் காமாந் -

எல்லாவிருப்பத்தையும், அவாப்ஸ்யஸி - பயன்படுத்திக்கொள்வாயாக, அத - பிறகு, ராம꞉ - இராமன், தம் - அம்முனிவரை, தண்டவத்பிரணம்ய - ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, துக்கநிர்முக்த꞉ - துக்கத்தினின்று விடுபட்டு, ப்ரஹ்ருஷ்டேந அந்தராத்மனா - களித்தமனதுடையோனாய், உவாச - சொன்னான்.

பொழிப்புரை — அவனருளால் பகைவர்களை யுத்தத்தில் கொன்று விருப்பமெல்லாவற்றையும் பெற்றிடுவாயாக பிறகு இராமன் துக்க நீங்கினவனாய் அம்முனிவரரை ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, களித்த மனதையுடையோனாய்ச் சொல்லியதாவது.

இராமர்வினா.

𑌕𑍃𑌤𑌾𑌰𑍍𑌥𑍋𑌽𑌹𑌂 𑌮𑍁𑌨𑍇 𑌜𑌾𑌤𑍋 𑌵𑌾𑌞𑍍𑌛𑌿𑌤𑌾𑌰𑍍𑌥𑍋 𑌮𑌮𑌾𑌗𑌤𑌃 ‖
𑌪𑍀𑌤𑌾𑌮𑍍𑌬𑍁𑌧𑌿𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌯𑌦𑌿 𑌮𑍇 𑌕𑌿𑌂 𑌨𑍁 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌮𑍍 ‖
𑌅𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌰𑌜𑌾𑌂 𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌂 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌮𑍇 𑌮𑍁𑌨𑌿𑌸𑌤𑍍𑌤𑌮 (௧௧)

க்ருதார்த்தோஹம்முநேஜாதோ வாஞ்சிதார்த்தோமமாகத꞉.
பீதாம்புதி꞉ப்ரஸந்நஸ்த்வம் யதிமேகிம்நுதுர்லபம்
அதஸ்த்வம்விரஜாம்தீக்ஷாம் ப்ரூஹிமேமுநிஸத்தம.

வியாக்யானம்——முநே - ஓ முனிவரே, அஹம்-யான், க்ருதார்த்த꞉ஜாத꞉ - க்ருதார்த்தனானேன், மம - எனக்கு, வாஞ்சிதார்த்த꞉ - விரும்பியபொருள், ஆகத꞉ - கிடைத்துவிட்டது, பீதாம்புதி꞉ - கடலுண்டவரான, த்வம் - தாங்கள், ப்ரஸந்நோயதி - பிரஸந்நரானால், மே - எனக்கு, துர்லபம்கிம்நு - கிடைக்காததுயாதுளது, முநிஸத்தம - ஓ முனிவரரே, அத꞉ - ஆதலால், த்வம் - தாங்கள், மே - எனக்கு, விரஜாம்தீக்ஷாம் - விரசாதீக்ஷையை, ப்ரூஹி - கூறுங்கள்.

பொழிப்புரை—ஓ முனிவரே, யான் கிருதார்த்தனானேன். விரும்பியபொருள் கிடைத்தது. கடலுண்டவரான தாங்கள் எனக்குப்பிரசன்னரானால் கிடைக்காதது யாதுளது. ஓ முனிவரரே ஆதலால் விரசாதீக்ஷையைக் கூறுங்கள்.

𑌫𑌣𑌿𑌕𑌙𑍍𑌕𑌣𑌭𑍂𑌷𑌾𑌢𑍍𑌯𑌂 𑌨𑌾𑌗𑌯𑌜𑍍𑌞𑍋𑌪𑌵𑍀𑌤𑌿𑌨𑌂 ।
𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌚𑌰𑍍𑌮𑍋𑌤𑍍𑌤𑌰𑍀𑌯𑌂𑌚 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑍍𑌪𑌿𑌙𑍍𑌗𑌜𑌟𑌾𑌧𑌰𑌂 ॥ (௪௩)
𑌏𑌕𑌾𑌕𑌿𑌨𑌂𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍌𑌳𑌿𑌂 𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌮𑌭𑌯𑌪𑍍𑌰𑌦𑌂 ।
𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍁𑌜𑌂𑌖𑌣𑍍𑌡𑌪𑌰𑌶𑍁𑌂 𑌮𑍃𑌗𑌹𑌸𑍍𑌤𑌂𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑌿𑌂 ॥ (௪௪)

ததர்சசந்த்ரவதநம் நீலகண்டம் த்ரிலோசனம்
வ்யாக்ரசர்மாம்பரதரம் பூதிபூஷிதவிக்ரஹம்
பணிகங்கணபூஷாட்யம் நாகயஞ்ஞோபவீதிநம்
வ்யாக்ரசர்மோத்தரீயம்ச வித்யுத்பிங்கஜடாதரம்
ஏகாகிநம் சந்த்ரமௌளிம் வரேண்யமபயப்ரதம்
சதுர்புஜம் கண்டபரசும் ம்ருகஹஸ்தம்ஜகத்பதிம்

வியாக்யானம்—சந்த்ரவதனம் - சந்திரன்போன்ற முகமுடையோனும், நீலகண்டம் - நீலகண்டனும், த்ரிலோசனம் - முக்கண்ணனும், வ்யாக்ரசர்மாம்பரதரம்- புலித்தோலாடையுடுத்தியவனும், பூதிபூஷிதவிக்ரஹம் - விபூதியால் அலங்கரிக்கப்பட்ட தேஹமுடையவனும், பணிகங்கண பூஷாட்யம் - ஸர்ப்பகங்கணாபரணத்தால் விளங்குகின்றவனும், நாகயஞ்ஞோபவீதிநம் - ஸர்ப்பபூணூலுடையோனும், வ்யாக்ரசர்மோத்தரீயம்ச - வ்யாக்ரசர்மத்தை மேலாடையாய்க்கொண்டவனும், வித்யுத்பிங்கஜடாதரம் - மின்னல்போல்சொலிக்கும் சடையைத்தரிக்கின்றவனும், ஏகாகிநம் - ஒருவனும், சந்த்ரமௌளிம் - சந்திரனை சிரஸில்தரிக்கின்றவனும், வரேண்ணியம் - வரமளிப்பவனும் ச்ரேஷ்டனும், அபயப்ரதம் - அபயமளிப்பவனும், சதுர்ப்புஜம் - நான்குகைகளையுடையவனும், கண்டபரசும் - கண்டற்கோடரியுடையோனும், ம்ருகஹஸ்தம் - மானைக்கையிலுடையவனும், ஜகத்பதிம் - ஜகங்களுக்கீசனுமாகிய இறைவனை, ததர்ச - கண்டான்.

பொழிப்புரை—சந்திரன்போன்றமுகமுடையவரும் நீலகண்டரும் முக்கண்ணரும் புலித்தோலாடையுடுத்தியவரும் விபூதியால் அலங்கரிக்கப்பட்ட தேஹமுடையவரும் ஸர்ப்பகங்கணாபரணத்தால் விளங்குகின்றவரும் ஸர்ப்பப்பூணூலுடையவரும் புலித்தோலை மேலாடையாகக் கொண்டவரும் மின்னலையொத்து ஜ்வலிக்கும் சடையைத்தரிக்கின்றவரும் ஒருவரும் சந்திரனைச்சிரஸில் தரிக்கின்றவரும் வரமளிப்பவரும் அபயமளிப்பவரும் நான்குகைகளையுடையவரும் மானைக்கையிலேந்தியவரும் ஜகங்களுக்கு ஈசனுமாகிய இறைவனைக் கண்டான்.

ஸ்லோகம்.

𑌅𑌥𑌾𑌜𑍍𑌞𑌾𑌯 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯𑍋𑌪𑌵𑌿𑌵𑍇𑌶 𑌸𑌃 ।
𑌅𑌥𑌾𑌹 𑌰𑌾𑌮𑌂 𑌦𑍇𑌵𑍇𑌶𑍋 𑌯𑌦𑍍𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌿𑌹𑍇𑌚𑍍𑌛𑌸𑌿 ॥
𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍃𑌚𑍍𑌛 𑌰𑌾𑌮 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌤𑍍𑌤𑍋 𑌨𑌾𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌗𑍁𑌰𑍁𑌃 । (௪௫½)

அதாஜ்ஞாய புரஸ்தஸ்ய ப்ரணம்யோ பவிவேஶ:
அதாஹராமம் தேவேசோயத்யத் ப்ரஷ்டுமிஹேச்சஸி
தத்ஸர்வம்ப்ருச்ச ராமத்வம் மத்தோநாந்யோஸ்திதேகுரு:

வியாக்யானம்—ஸ: - அந்தராமன், அத - பிறகு, ஆஞ்ஞாய ஈசனென்றுணர்ந்து, ப்ரணம்ய - நமஸ்கரித்து, தஸ்ய - அவ்வீசனுக்கு, புர: - எதிரில், உபவிவேச - உட்கார்ந்துகொண்டான், தேவேச: - இறைவன், அத - பிறகு, ராமம் - ராமனைநோக்கி, ராம - ஓராமனே, யத் யத் - எவ்வெதை, ப்ரஷ்டும் - கேட்டுத்தெரிந்துகொள்வதற்கு, இச்சஸி - விரும்புகின்றனையோ, தத் ஸர்வம் - அதனையெல்லாம், ப்ருச்ய - கேட்டுக்கொள், தே - உனக்கு, மத்த: - என்னிலும், அந்ய: - அன்னியனுகிய, குரு: - குருவானவர், நாஸ்தி - இல்லை, என்று ஆஹ - சொன்னார்.

பொழிப்புரை—அந்த ராமன் பிறகு ஈசனென்றுணர்ந்து நமஸ்கரித்து அவருக்கெதிரில் உட்கார்ந்துகொண்டார். இறைவன் பிறகு ராமனைநோக்கி ஓ ராமனே எவ்வெதனைக்கேட்க விரும்புகின்றனையோ அவ்வதனையெல்லாம் கேட்டுக்கொள்வாயாக. உனக்கு என்னிலும் அந்நியராய் குரு இல்லையன்றே என்றார்.

ஏழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## பிண்டோத்பத்தி கதனமென்னும்
### எட்டாவது அத்தியாயம்.

ஸ்ரீராமர் சொன்னதாவது.

𑌪𑌾𑌞𑍍𑌚𑌭𑍌𑌤𑌿𑌕𑌦𑍇𑌹𑌸𑍍𑌯 𑌚𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌲𑌯𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ।
𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌚 𑌕𑌥𑌂 𑌦𑍇𑌹𑍇 𑌹𑌨𑍍𑌤 𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑌿𑌹𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 ॥ (௧)

பாஞ்சபௌதிக தேஹஸ்ய சோத்பத்திர்விலயஸ்திதி:
ஸ்வரூபம் சகதம்தேஹே பகவந்வக்துமர்ஹஸி

வியாக்யானம்—பாஞ்சபௌதிகதேஹஸ்ய - பஞ்சபூதவிகாரமாகிய தேகத்திற்கு, உத்பத்தி - தோற்றம், ஸ்திதி: - நிலை, விலய: - ஒடுக்கம் இவைகள், கதம் - எப்படி, தேஹே - இத்தேஹத்தில், ஸ்வரூபம்ச - ஸ்வரூபமும், கதம் - எப்படி, பகவந் - ஓ பகவனே, வக்தும் - சொல்வதற்கு, அர்ஹஸி - தக்கவராகின்றீர்.

பொழிப்புரை—பாஞ்சபௌதிகமாகிய ஸ்தூல தேஹத்திற்கு உத்பத்தி ஸ்திதி ஒடுக்கம் தேகத்தில் ஸ்வரூபம் இவை எப்படி? ஓ பகவனே நீர் சொல்லத்தக்கவராயுள்ளவர்.

ஸ்ரீபகவான் கூறியதாவது.

ஶ்லோகம்.

பஞ்சபூதைஸ்ஸமாரப்தோ தேஹோயம்பாஞ்சபௌதிக: ।
தத்ரப்ரதானம்ப்ருதிவீ ஶேஷாணாம்ஸஹகாரிதா ॥ (உ)

பஞ்சபூதைஸ்ஸமாரப்தோதேஹோயம் பாஞ்சபௌதிக:
தத்ரப்ரதானம் ப்ருதிவீசேஷாணாம் ஸஹகாரிதா

வியாக்யானம்—பாஞ்சபௌதிக:-பாஞ்சபௌதிகமாகிய,அயம் தேஹ: - இந்த தேஹமானது, பஞ்சபூதை: - ஐம்பூதங்களால், ஸமாரப்த: - ஏற்பட்டுள்ளது, தத்ர - இச்சரீரத்தில் உள்ளவைகளில், ப்ருதிவீ - ப்ருதிவியானது ப்ரதானம் முக்கியமாயுள்ளது, சேஷாணாம் - ஏனையவைகளுக்கு, ஸஹகாரிதா - கூடவிருக்கும் தன்மையே அப்பிரதானத்தன்மையே என்க.

பொழிப்புரை—பாஞ்சபௌதிகமாகிய இத்தேஹமானது பஞ்சபூதங்களால் உண்டாகியது இச்சரீரத்தில் உள்ள பூதங்களுள் பிருதிவியே முக்கியம் இதரபூதங்களுக்கு அமுக்கியத்துவமேயுள்ளது.

ஶ்லோகம்.

ஜராயுஜோண்டஜஶ்சைவ ஸ்வேதஜஶ்சோத்பிஜ்ஜஸ்ததா ।
ஏவம்சதுர்வித: ப்ரோக்தோ தேஹோயம்பாஞ்சபௌதிக: ॥ (ங)

ஜராயுஜோண்டஜஶ்சைவஸ் வேதஜஶ்சோத்பிதஸ்தத்தா
ஏவம்சதுர்வித:ப்ரோக்த:தேஹோயம்பாஞ்சபௌதிக:

**வியாக்யானம்**—பாஞ்சபௌதிக - பாஞ்சபௌதிகமாகிய, அயம் - இந்த பார்த்திவமாகிய, தேஹ: - தேஹமானது, ஜராயுஜ: - கருப்பையில் நின்றுண்டாவது, அண்டஜ: - முட்டையில் நின்றுண்டாவது, ஸ்வேதஜ: - புழுக்கத்தில் நின்றுண்டாவது, உத்பிஜ: - வித்தில்நின்றுண்டாவதுஎன்று, ஏவம் - இவ்விதம், சதுர்வித: - நான்குவிதமாய், ப்ரோக்த: - சொல்லப்பட்டுள்ளது.

**பொழிப்புரை**—பாஞ்சபௌதிகமாகிய இப்பார்த்திவதேஹமானது கருப்பையில் நின்றுண்டாவது முட்டையில் நின்றுண்டாவது புழுக்கத்தில் நின்றுண்டாவது மேல் பேதித்துக்கொண்டு விதையில்நின்றுண்டாவது என்று இவ்விதம் நான்கு விதமாய்ச் சொல்லப்பட்டுள்ளது.

ஸ்லோகம்.

மாநஸஸ்து பர: ப்ரோக்தோ தேவாநாமேவ ஸ ஸ்ம்ருத: ।
தத்ர வக்ஷ்யே ப்ரதமத: ப்ரதாநத்வாஜ்ஜராயுஜம் ॥ (௪)

மானஸஸ்துபர:ப்ரோக்த: தேவாநாமேவஸஸ்ம்ருத:
தத்ரவக்ஷ்யேப்ரதமத: ப்ரதானத்வாத்ஜராயுஜம்

**வியாக்யானம்**—மானஸஸ்து - மனம் எண்ணுகிறபடியுண்டாவதென்று, பர: - மற்றொன்று, ப்ரோக்த: - சொல்லப்பட்டுள்ளது. ஸ: - அந்ததேஹமானது, தேவாநாம்ஏவ - தேவர்களுக்கே, ஸ்ம்ருத: - உள்ளதாகச் சொல்லப்பட்டது. தத்ர - அவைகளுள், ப்ரதானத்வாத் - முக்கியமாயிருத்தலால், ஜராயுஜம் - கர்ப்பத்திலிருந்துண்டாகும் தேகத்தையே, ப்ரதமத: - முதலில், வக்ஷ்யே - சொல்லுகிறேன்.

**பொழிப்புரை**—மனம் எண்ணுகிறபடி உண்டாவதாய் மற்றோர் சரீரம் உள்ளதென்று சொல்லப்பட்டது. அது தேவர்களுக்கே கருதப்பட்டது அங்கு முக்கியமாயிருத்தலால் ஜராயுஜத்தையே முதலில் சொல்லுகின்றேன்.

ஸ்லோகம்

ஶுக்ரஶோணிதஸம்பூதோ வ்ருத்திரேவ ஜராயுஜ: ।

𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌣𑌾𑌂 𑌗𑌰𑍍𑌭𑌾𑌶𑌯𑍇 𑌶𑍁𑌕𑍍𑌲𑌂 𑌋𑌤𑍁𑌕𑌾𑌲𑍇 𑌵𑌿𑌶𑍇𑌦𑍍𑌯𑌥𑌾 ॥ (௫)

சுக்லஶோணிதஸம்பூதவ்ருத்திரேவஜராயுஜ:
ஸ்த்ரீணாம்கர்பாசயேசுக்லம் ருதுகாலேவிசேத்யதா

வியாக்யானம்—சுக்லசோணிதஸம்பூதவ்ருத்தி: ஏவ - சுக்லசோணிதங்களால் ஏற்பட்ட நிலைமையுடையதே, ஜராயுஜ: - ஜராயுஜமென்பதாம், ருதுகாலே - ருதுகாலத்தில், யதா - எப்போது, ஸ்த்ரீணாம் - ஸ்த்ரீகளது, கர்ப்பாசயே - கர்ப்பகோசத்தில், சுக்லம் - சுக்லமானது, விசேத் - பிரவேசிக்குமோ.

பொழிப்புரை—சுக்லசோணிதங்களால் ஏற்பட்ட நிலைமையுடையதே ஜராயுஜம் என்னப்படும், ருதுகாலத்தில் எப்போது ஸ்திரீகளின் கர்ப்பகோசத்தில் சுக்கிலம் பிரவேசிக்கின்றதோ.

ஶ்லோகம்.

𑌰𑌜𑌸𑌾 𑌯𑍋𑌷𑌿𑌤𑍋 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌤𑌦𑍇𑌵 𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌜𑌰𑌾𑌯𑍁𑌜𑌂 । (௬)
𑌬𑌾𑌹𑍁𑌲𑍍𑌯𑌾𑌦𑍍𑌰𑌜𑌸𑌃 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 𑌸𑍍𑌯𑌾𑌚𑍍𑌛𑍁𑌕𑍍𑌲𑌾𑌧𑌿𑌕𑍍𑌯𑍇 𑌪𑍁𑌮𑌾𑌨𑍍𑌭𑌵𑍇𑌤𑍍 ॥

ரஜஸாயோஷிதோயுக்தம் த்தேவ்ஸ்யாஜ்ஜராயுஜம்
பாஹுள்யாத்ரஜஸஸ்ஸ்த்ரீ ஸ்யாத்ஸுக்லாதிக்யேபுமாந்பவேத்

வியாக்யானம்—யோஷித: - ஸ்திரீயினுடைய, ரஜஸா - சோணிதத்தோடு, யுக்தம் - கூடியதாய்க்கொண்டு, தத்ஏவ - அச்சுக்கிலமே, ஜராயுஜம் - ஜராயுஜம் ஆகின்றது. ரஜஸ: - சோணிதத்தின் - பாஹுள்யாத் - மிகுதியால், ஸ்திரீ - பெண், ஸ்யாத் - உண்டாகும். சுக்லாதிக்யே - சுக்கிலம் மிகுதியாயின், புமான் - ஆண், பவேத் - உண்டாகும்.

பொழிப்புரை—ஸ்த்ரீயின் சோணிதத்தோடு கலந்ததாய்க்கொண்டு அச்சுக்லமே ஜராயுஜமாகின்றது. சோணிதம்விசேஷமாயிருந்தால் பெண்ணும் சுக்லம் விசேஷமாயின் ஆணும் உண்டாகும்.

ஶ்லோகம்.

𑌶𑍁𑌕𑍍𑌲𑌶𑍋𑌣𑌿𑌤𑌯𑍋𑌃 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑍁 𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌃 ।
[illegible] ॥ (௭)

ருதுகாலஸ்து நிர்திஷ்ட ஆஷோடசதினாவதி ।

சுக்லசாணிதயோஸ்ஸாம் யேஜாயதேதுநபும்ஸக:
ருதுஸ்நாதாபவேந்நாரீ சதுர்த்ததிவஸேதத:
ருதுகாலஸ்துநிர்திஷ்டஆஷோடசதினவதி

வியாக்யாணம்—அத - இனி, சுக்லசோணியே:--சுக்லசோணிதங்களுக்கு, ஸாம்யே- ஸமத்துவமாயின், நபும்ஸக: - அலியாய், ஜாயதே - தோன்றுகிறது, நாரீ - ஸ்திரீயானவள், சதுர்த்ததிவஸே - நாலாவதுதினத்தில், ருதுஸ்நாதா - ருதுநீங்கி ழுழ்கிசுத்தையாவாள், தத - அதற்குப்பிறகு, ஆஷோடசதினவதி-பதினறுதினங்கள்வரையில், ருதுகால - ருதுகாலமென்பது, நிர்திஷ்ட: - குறிக்கப்பட்டது.

பொழிப்புரை—சுக்லசோணிதங்கள் ஸமமாயிருக்கின் ஆணும் பெண்ணுமற்றவனுய்த் தோன்றுகின்றுன். ஸ்திரீ நான்காம்தினத்தில் ருது நீங்கிச் சுத்தையாவாள். பிறகு பதினறுநாள்வரையில் ருதுகாலம் என்பது குறிக்கப்பட்டது.

ஸ்லோகம்.

தத்ராயுக்மதினே ஸ்த்ரீ ஸ்யாத் புமான் யுக்மதினே பவேத் ॥ (அ)
ஷோடசே திவஸே கர்ப்போ ஜாயதே யதி ஸுப்ருவ: ।
சக்ரவர்த்தீ ததா ராஜா ஜாயதே ஸ ந ஸம்சய: ॥ (௯)

தத்ராயுக்மதிநேஸ்த்ரீஸ்யாத்புமாந்யுக்மதினேபவேத்
ஷோடசேதிவஸேகர்போஜாயதேயதிஸுப்ருவ:
சக்ரவர்த்திததாராஜா ஜாயதேஸநஸம்சய:

வியாக்யாணம்—தத்ர - ஆண்டு, அயுக்மதினே - ஒற்றைப்படைதினத்தில், ஸ்திரீ - பெண்ணுகை, ஸ்யாத் - தோன்றும், யுக்மதினே - இரட்டைப்படைதினத்தில், புமான் - புருஷனுய், பவேத் - ஆவான், ஸுப்ருவ: - அழகுடையமங்கைக்கு, ஷோடசே - பதினுருவது, திவஸே - நாளில், கர்ப: - கருப்பம், ஜாயதே யதி - உண்டாகுமாஞல், ஸ: - அப்பிரஜையானது, சக்ரவர்த்தீ - சக்கிரவர்த்தியாகவாவது, ராஜா - அரசனுகவாவது, ஜாயதே - பிறக்கின்றுன், ஸம்சய: ந - ஸந்தேகமில்லை.

பொழிப்புரை—ஆண்டு ஒற்றைப்படைதினத்தில் பெண்ணும் இரட்டைப்படைதினத்தில் ஆணும் தோன்றும் அழகுவாய்ந்த மங்கைக்குப் பதினறுவது தினத்தில் கர்ப்பம் ஏற்படுமாயின் அந்தப்பிரஜை சக்கிரவர்த்தியாகவோ அல்லது அரசனாகவோ பிறக்கின்றான்.

ஸ்லோகம்.

ருதுஸ்நாதா யஸ்ய பும்ஸ: ஸாகாங்க்ஷம் முகமீக்ஷதே ।
ததாக்ருதிர் பவேத் கர்ப்பஸ் தத்பச்யேத் ஸ்வாமிநோ முகம் ॥ (௰)

ருதுஸ்நாதாயஸ்யபும்ஸ: ஸாகாங்க்ஷம்முகமீக்ஷதே
ததாக்ருதிர்பவேத்கர்ப்பஸ்தத்பச்யேத்ஸ்வாமிநோமுகம்

வியாக்யானம்—ருதுஸ்நாதா - ருதுநீங்கி ஸ்நானம்செய்ததும், யஸ்ய - எந்த - பும்ஸ: - புருஷனது, முகம் - முகத்தை, ஸாகாங்க்ஷம் - ஆசையோடுகூட, ஈக்ஷதே - காண்கின்றனளோ, கர்ப: - கர்ப்பமானது, ததாக்ருதி - அவனது உருவம்போலவுருக்கொண்டதாய், பவேத் - ஏற்படும், தத் - ஆதலின, ஸ்வாமிந: - தனது கணவனது, முகம் - முகத்தை, பச்யேத் - பார்க்கவேண்டும்.

பொழிப்புரை—ருதுநீங்கி ஸ்நானம் செய்ததும் மங்கை எந்தப்புருஷனது முகத்தை விருப்புற்று நோக்குகின்றாளோ, அந்தப்புருஷனது உருப்போன்ற உருக்கொண்டதாய் கர்ப்பம் ஏற்படும். ஆதலால் தனது கணவனது முகத்தையே பார்க்கவேண்டும்.

ஸ்லோகம்.

யா ஸ்த்ரீ சர்மாவ்ருதிஸ் ஸூக்ஷ்மா ஜராயுஸ் ஸா நிகத்யதே ।
சுக்லசோணிதயோர் யோகஸ் தஸ்மிந் நேவ பவேத் யத: ॥ (கக)

யாஸ்த்ரீசர்மாவ்ருதிஸ்ஸூக்ஷ்மா ஜராயுஸ்ஸாநிகத்யதே
சுக்லசோணிதயோர்யோகஸ் தஸ்மிந்நேவபவேத்யத

வியாக்யானம்—ஸ்த்ரீசர்மாவ்ருதி: - ஸ்த்ரீயின் தோலுருவமாகிய (ஆவரணமானது) பையானது, ஸூக்ஷ்மா - சிறிதாய், யா -

யாதொன்றுளதோ, ஸா - அது, ஜராயு: - ஜராயு என்று, நிகத்யதே - சொல்லப்படுகின்றது, யத: - யாதொருகாரணத்தால், தஸ்மிந்ஏவ - அதிலேயே, சுக்லசோணிதயோ: - சுக்லசோணிதங்களது, யோக: - ஸம்பந்தமானது, பவேத் - ஏற்படுகின்றதோ.

பொழிப்புரை—ஸ்த்ரீயின்தோலுருவமாகிய பையானது சிறிதாய் யாதொன்றுளதோ அது ஜராயு என்று சொல்லப்படுகின்றது. யாதொருகாரணத்தால் அதிலேயே சுக்லசோணிதங்களின் ஸம்பந்தம் ஏற்படுகின்றதோ.

ஶ்லோகம்.

[illegible]
[illegible] (௩௨)

தத்ரகர்ப்போபவேத்யஸ்மாத்தேநப்ரோக்தோஜராயுஜ
அண்டஜா:பக்ஷிஸர்ப்பாத்யா: ஸ்வேதஜாமசகாதய:

வியாக்யானம்—யஸ்மாத் - யாதொருகாரணத்தால், தத்ர - அங்கு, கர்ப்ப: - கர்ப்பம், பவேத் - உண்டாகுமோ, தேந - ஆதலால், ஜராயுஜ: - ஜராயுஜம்என்று, ப்ரோக்த: - சொல்லப்பட்டது, அண்டஜா: - அண்டஜங்கள், பக்ஷிஸர்ப்பாத்யா: - பறவைபாம்புமுதலியன, ஸ்வேதஜா: - ஸ்வேதஜங்கள், மசகாதய: - கொசுகுமுதலியன.

பொழிப்புரை—அங்கு கர்ப்பம் உண்டாகின்றமையால் ஜராயுஜமென்று சொல்லப்பட்டது, அண்டஜங்கள் பறவை பாம்பு முதலியன ஸ்வேதஜங்கள் கொசுகு முதலியன

ஶ்லோகம்

[illegible]
[illegible] (௩௩)
[illegible]

உத்பிஜ்ஜாவ்ருக்ஷகுல்மாத்யா: மாநஸாஸ்சஸஷர்ஷய:
ஜந்மகர்ம வசாதேவ நிஷிக்தம் ஸ்மரமந்திரே
சுக்லம் ரஜஸ்ஸமாயுக்தம் ப்ரதமே மாஸிதத்த்ரவம்

வியாக்யானம்:—உத்பிஜ்ஜா: - உத்பிஜ்ஜங்கள், வ்ருக்ஷ குல்மாத்யா: - மரம் செடி, கொடி முதலியன, மாநஸா: - மனதிற்கு இசைந்தவாறு எடுக்கும் தேகமுடையவர், ஸுரர்ஷய: - தேவருஷிகள், ஸ்மரமந்திரே - யோநிவாயில், நிஷிக்தம் - விடப்பட்ட, சுக்லம் - சுக்லமானது, ஜந்மகர்மவசாத் ஏவ - ஜன்ம கர்மங்களின் வலியாலேயே, ரஜஸா - சோணிதத்தோடு, ஸமாயுக்தம் - சேர்ந்ததாகின்றது, த்ரவம் - அந்தத்ரவமானது, ப்ரதமே - முதலாவது, மாஸி - மாஸத்தில்.

பொழிப்புரை—உத்பிஜ்ஜங்கள் மரம் செடி கொடிமுதலியன மனதிற்றோன்றிய வண்ணம் எடுக்கும் உருவமுடையதேகம் தேவருஷிகள்ஸ்திரீகளின் யோநிவாயில் சென்ற சுக்லமானது ஜன்ம கர்ம பலத்தால் சோணிதத்தோடு கூடிக் கலந்ததாகின்றது அந்தத்ரவமானது முதலாவது மாசத்தில்.

ஶ்லோகம்.

𑌬𑍁𑌦𑍍𑌬𑍁𑌦𑌂 𑌕𑌲𑌲𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑌤𑌃 𑌪𑍇𑌶𑍀 𑌭𑌵𑍇𑌦𑌿𑌦𑌮𑍍 ।
𑌪𑍇𑌶𑍀𑌘𑌨𑌂 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍇 𑌤𑍁 𑌮𑌾𑌸𑌿 𑌪𑌿𑌣𑍍𑌡𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌤𑍇 ॥ (க௪)

புத்புதம் கலலம் தஸ்மாத்தத பேசீ பவேதிதம்
பேசீகனம் த்விதீயேது மாஸிபிண்ட: ப்ரஜாயதே.

வியாக்யானம்:—புத்புதம் - நீர்க்குமிழி வடிவமும், தஸ்மாத் - அதனிலிருந்து, கலலம் - சற்று இறுகியதாயும், தத: - அதற்குப்பிறகு, பேசீ - முட்டை பையாகவும், பவேத் - ஆகும், த்விதீயேது மாஸி - இரண்டாம் மாதத்திலோவெனின், பேசீகனம் - பைகட்டிப் பட்டதாய்க்கொண்டு, இதம் - இது, பிண்ட: - பிண்டம், ப்ரஜாயதே - ஆகின்றது.

பொழிப்புரை—நீர்க்குமிழி போலாய் பின்னர் சற்று இறுகியதாய் பிறகு கருப்பைபோன்ற வட்டமதாய் ஆகும். இரண்டாவது மாதத்தில் அந்தப்பை வடிவம் சற்றுக்கட்டிப்பட்டதாய்க் கொண்டு அந்த இறுகிய த்ரவமானது பிண்டமாகின்றது.

ஶ்லோகம்.

𑌕𑌰𑌾𑌂𑌘𑍍𑌰𑌿 𑌶𑍀𑌰𑍍𑌷𑌕𑌾𑌦𑍀𑌨𑌿 𑌤𑍃𑌤𑍀𑌯𑍇 𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌹𑌿 ॥ (க௫)
𑌅𑌭𑌿𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌜𑍀𑌵𑌸𑍍𑌯 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍇 𑌮𑌾𑌸𑌿 𑌜𑌾𑌯𑌤𑍇 ।

கராங்க்ரி சீர்ஷகாதீனித்ருதீயே ஸம்பவந்திஹி
அபிவ்யக்திஶ்ச ஜீவஸ்யசதுர்த்தே மாஸிஜாயதே

**வியாக்யானம்**—கராங்க்ரிசீர்ஷகாதீநி - கைகால்முதலியன, த்ருதீயே - மூன்ருவது மாதத்தில், ஸம்பவந்திஹி - உண்டாகின்றன - சதுர்த்தே - நான்காவது, மாஸி - மாதத்தில், ஜீவஸ்ய - ஜீவனுக்கு, அபிவ்யக்தி:ச - தோற்றமும், ஜாயதே - ஏற்படுகின்றது.

**பொழிப்புரை:**—கைகால்தலைமுதலியன மூன்றும்மாதத்தில் உண்டாகின்றன. நான்காம் மாதத்தில் ஜீவனுக்கு (அபிவ்யக்தி) தோற்றமேற்படுகின்றது.

ஸ்லோகம்.

𑌤𑌤𑌶𑍍𑌚𑌲𑌤𑌿 𑌗𑌰𑍍𑌭𑍋𑌽𑌪𑌿 𑌜𑌨𑌨𑍍𑌯𑌾𑌜𑌠𑌰𑍇𑌸𑍍𑌵𑌤𑌃 ॥ (கசு)
𑌪𑍁𑌤𑍍𑌰𑌶𑍍𑌚𑍇𑌦𑍍𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑍇𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑍇 𑌕𑌨𑍍𑌯𑌾𑌵𑌾𑌮𑍇𑌚𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 ।
𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌸𑍍𑌤𑍂𑌦𑌰𑌸𑍍𑌯 𑌭𑌾𑌗𑍇𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿𑌮𑌧𑍍𑌯𑌮𑍇 ॥ (கஎ)

ததஸ்சலதி கர்ப்போபி ஜநந்யாஜடரேஸ்வத:
புத்ரஶ்சேத்தக்ஷிணேபார்ச்வேக ந்யாவாமேசதிஷ்டதி
நபும்ஸகஸ்தூதரஸ்ய பாகே திஷ்டதிமத்யமே.

**வியாக்யானம்:**—ததஃ - அதற்குப்பிறகு, ஜநந்யா - அன்னையினது, ஜடரே - வயிற்றினில், கர்ப்ப: கர்ப்பமானது, ஸ்வத: - தானே, சலதி - சலிக்கின்றது, புத்ர:சேத் - புத்திரனாயின், தக்ஷிணே - வலது, பார்ச்வே - பாரிசத்திலும், கந்யா - பெண்ணனது, வாமேச - இடதுபக்கத்திலும், திஷ்டதி - இருக்கின்றது, நபும்ஸகஃது - அலியாயின், உதரஸ்ய - வயிற்றின், மத்யமே பாகே - நடுப்பக்கத்தில், திஷ்டதி - இருக்கின்றது.

**பொழிப்புரை:**—அதற்குப்பிறகு அன்னையின் வயிற்றினில் கர்ப்பம் தானே சலிக்கின்றது. புத்திரனாயின் வலது பக்கத்திலும் புத்திரியாயின் இடதுபக்கத்திலும் இருக்கின்றது. நபும்ஸகனாயின் வயிற்றின் நடுப்பக்கத்தில் இருக்கின்றது.

ஸ்லோகம்.

𑌸𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌵𑌾𑌮𑌸𑍍𑌥𑌸𑍍𑌤𑌨𑍍𑌮𑌦𑍇𑌹𑌾𑌤𑌾𑌦𑌿𑌨𑍃𑌣𑌾𑌂 ।

𑌙𑍍𑌗𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌙𑍍𑌗𑌭𑌾𑌗𑌾𑌶𑍍𑌚 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌃 𑌸𑍍𑌯𑍁𑌰𑍍𑌯𑍁𑌗𑌪𑌤𑍍𑌤𑌦𑌾 ॥ (௧௮)
𑌵𑌿𑌹𑌾𑌯𑌶𑍍𑌮𑌶𑍍𑌰𑍁𑌦𑌨𑍍𑌤𑌾𑌦𑍀𑌨𑍍 𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌸𑌂𑌭𑌵𑌾𑌨𑍍 ।
𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍇 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌤𑍇𑌷𑌾𑌂 𑌭𑌾𑌵𑌾𑌨𑌾𑌮𑌭𑌿𑌜𑌾𑌯𑌤𑍇 । (௧௯)

அதோ தக்ஷிண பார்ச்வேதுசேதே மாதாபுமாங்யதி
அங்கப்ரத்யங்பாகாஶ்ச ஸூக்ஷ்மா: ஸ்யுர்யுகபத்ததா
விஹாயச்மச்ரு தந்தாதீந்ஜந்மாநந்தரஸம்பவாந்
சதுர்த்தேவ்யக்த தேஷாம் பாவாநாமபிஜாயதே.

வியாக்யானம்—அத: - ஆதலால், புமாங்யதி - புத்திரனுயிருந்தால், மாதா - அன்னையாகியகர்ப்பிணி, தக்ஷிணபார்ச்வேது - வலதுபக்கத்தைக் கீழேவைத்து, சேதே-படுத்துறங்குகின்றனள் ததா - அப்போது, ஜந்மாநந்த ரஸம்பவாந் - பிறந்தபிறகுண்டாவனவாகிய,ச்மச்ருதந்தாதீந்-மீசைபல்முதலியவைகளை,விஹாய|- விடுத்து (தவிர) அங்கப்ரத்யங்க பாகா:, ச - அங்கப்ரத்யங்கங்களும், யுகபத் - ஒரேகாலத்தில் ஸூக்ஷ்மா:, ஸ்யு: - ஸூக்ஷ்மங்களாயுண்டாகும் தேஷாம் - பாவாநாம், அபி - அத்தன்மைகளுக்கும், சதுர்த்தே - நாலாவது மாதத்தில், வ்யக்ததா - விளக்கமுற்றிருத்தல், ஜாயதே - ஏற்படுகின்றது.

பொழிப்புரை:—ஆதலால் புத்திரனுயிருந்தால் கர்ப்பிணி வலப்பக்கம்கிழாய்ப்படுக்கின்றனள். அப்போதுபிறந்தபிறகுண்டாகக்கூடிய மீசை பல்முதலியவை நீங்கலாகிய மற்ற அங்கப்பிரத்யங்களால் ஏககாலத்தில் ஸூக்ஷ்மங்களாயுண்டாகும் அத்தன்மைகள் நாலாபமாதத்தில் வியக்தமாய்த் தோன்றுகின்றது.

ஸ்லோகம்.

𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌾𑌦𑌯𑍋 𑌭𑌾𑌵𑌾 𑌭𑍂𑌤𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌯𑍋𑌷𑌿𑌤𑌾𑌂
𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑍇 𑌚 𑌤𑍇 𑌮𑌿𑌶𑍍𑌰𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌰𑌘𑍁𑌨𑌨𑍍𑌦𑌨 ॥ (௨௦)

பும்ஸாம்ஸ்தைர்ய ததோபாவா பூதத்வாத்யாஸ்துயோஷிதாம்
நபும் ஸகேசதே மிச்ரா பவந்திரகுநந்தன

வியாக்யானம்:—ரகுநந்தன - ஸ்ரீராம, பும்ஸாம் - புருஷர்களுக்கு ஸ்தைர்யாதய: - சலனமற்றிருத்தல் முதலிய பாவா:-

தன்மைகளும், யோஷிதாம் - பெண்களுக்கு, பூதத்வாத்யா: - சலனமுதலியவைகளும், நபும்ஸகே - ஆண் பெண்ணல்லாதவனிடம், தேச - அத்தன்மைகள், மிச்ரா:-கலந்தவைகளாகவும், பவந்தி - இருக்கின்றன.

பொழிப்புரை:—ஒராமா புருஷர்களுக்கு நிச்சலமாயிருத்தல் முதலிய தன்மைகளும் ஸ்திரீகளுக்கு சலனமுறுதல் முதலிய கர்மங்களும் அலியினிடம் அவ்விருதன்மைகளும்கலந்தனவாயும் இருக்கின்றன.

ஶ்லோகம்.

மாத்ருஜஞ்சாஸ்ய ஹ்ருதயம் விஷயாநபிகாங்க்ஷதி ।
தஸ்மாந்மாத்ருமநோபீஷ்டம் குர்யாத்கர்ப்பவிவ்ருத்தயே ॥ (உக)

மாதருஜஞ்சாஸ்யஹ்ருதயம் விஷயாநபிகாங்க்ஷதி
தஸ்மா மாத்ருமநோபிஷ்டம் குர்யாத் கர்பவிவ்ருத்தயே

வியாக்யானம்:—அஸ்ய -கர்ப்பப்பிரஜையினது, ஹ்ருதயம் - இருதயகமலமானது, மாத்ருஜம் - அன்னையின் ஹ்ருதயத்தாலுண்டாவதாய்க்கொண்டு, விஷயாந் - விஷயங்களை, அபிகாங்க்ஷதி - விரும்புகின்றது. அத: - ஆதலால், கர்ப்பவிவ்ருத்தயே - கர்ப்பவிர்த்தியின்பொருட்டு, மாத்ரு மநோபீஷ்டம் - அன்னையின்மனத்திருப்தியை, குர்யாத் - செய்யவேண்டும்.

பொழிப்புரை:—கர்ப்பத்திலுள்ள பிரஜையினது ஹ்ருதயமானது அன்னையின் ஹ்ருதயத்தாலுண்டாவதாய்க் கொண்டு விஷயங்களை விரும்புகின்றது. ஆதலால் கர்ப்பவிருத்தியின்பொருட்டு கர்ப்பிணியின் மனத்திருப்தியைச் செய்யவேண்டும்.

ஶ்லோகம்.

தாஞ்ச த்விஹ்ருதயாம் நாரீமாஹுர்தௌஹ்ருதிநீம் தத: ।
அதாநாத்தோஹதாநாம் ஸ்யுர்கர்ப்பஸ்ய வ்யங்கதாம: ॥ (உஉ)

தாஞ்சத்விஹ்ருதயாம் நாரீமாஹுர்தௌஹ்ருதிநீம்தத:
அதாநாத்தோஹதாநாம்ஸ்யுர்கர்ப்பஸ்யவ்யங்கதாம:

வியாக்யானம்—தத: - ஆதலால் கர்ப்பிணியாகிய, த்விஹ்ருதயாம் - இருஹ்ருதயமுள்ள, தாம் - அந்த, நாரீம் - பெண்ணை, தௌஹ்ருதிநீம் - தௌஹ்ருதிநீஎன்று, ஆஹு: - சொல்லு

கின்றனர், தோஹ்ருதாநாம் - விரும்பிய அன்னபானாதிகளை, அதானாத் - கொடுக்காவிடில், கர்ப்பஸ்ய - கர்ப்பத்திற்கு, வ்யங்கதாதய - அங்கஹீனத்தன்மை முதலியன, ஸ்யு - ஏற்படும்.

பொழிப்புரை—ஆதலால் கர்ப்பிணியாகிய இருஹ்ருதயமுள்ள அம்மங்கையை தௌஹ்ருதினி என்று சொல்லுகின்றனர் கர்ப்பிணிவிரும்பிய அன்னபானாதிகளைத்தராவிடில்கர்ப்பத்திற்கு அங்கஹீனத்துவமுதலியன் ஏற்படும்.

ஶ்லோகம்.

[illegible]
[illegible] (உரு)

மாதுர்யத்விஷயேலோபஸ் ததார்த்தோஜாயதேஸுத:
ப்ரபுத்தம்பஞ்சமேசித்தம் மாம்ஸசோணிதபுஷ்டதா

வியாக்யானம்—மாது: - அன்னைக்கு, யத்விஷயே - எந்த விஷயத்தில், லோப: - ஆசையோ, ஸுத: - புதல்வன், ததார்த்த: - அதில் பிரியமுடையவன், ஜாயதே - ஆகின்றான். பஞ்சமே- ஐந்தாம்மாதத்தில், சித்தம் - மனமானது, ப்ரபுத்தம் - நன்றாயறியும் யோக்கிதையுடையதாகும், மாம்ஸசோணிதபுஷ்டதா - மாம்ஸரத்தம் இவைபுஷ்டியடையும்.

பொழிப்புரை—அன்னைக்கு எவ்விஷயத்தில் விருப்பமுள்ளதோ அவ்விஷயம் புதல்வனாலும் விரும்பப்படுவதாம் ஐந்தாம் மாதத்தில் மனம் நன்றாயறியக் கூடியயோக்கிதை யுடையயுடைதாம் மாம்ஸரத்தம் இவைகளும் புஷ்டியடையும்.

ஶ்லோகம்.

[illegible] (உச)
[illegible]

ஷஷ்டேஸ்திஸ்நாயுகரகேச லோமவிவிக்ததா
பலவர்ணௌசோபசிதௌ ஸப்தமேத்வங்கபூர்ணதா

வியாக்யானம்—ஷஷ்டே - ஆறும்மாதத்தில், அஸ்திஸ்நாயுநகரகேசலோமவிவிக்ததா - எலும்புஸ்நாயுப்பசைநகம் தலைமயிர்

மற்ற இடமுள்ள ரோமம் இவை தோன்றுகின்றன. பலவர்ணௌச - பல வர்ணங்களும், உபசிதேள விருத்தியடையும், ஸப்தமேது - ஏழாமாதத்தில், அங்கபூர்ணதா - அங்கங்களெல்லாம் பூர்த்தியடையும்.

பொழிப்புரை—ஆறும்மாதத்தில் எலும்புஸ்நாயு நககேசரோமங்கள் தோன்றும் பலவர்ணங்களும் விருத்தியடையும் ஏழாம்மாதத்தில் அங்கங்கள் பரிபூர்த்தியாகும்.

ஶ்லோகம்.

வாதாந்தரிதஹஸ்தாப்யாம் ஶ்ரோத்ரரந்த்ரம்பிதாய ஸ: ।
உத்விக்நோ கர்ப்பஸம்வாஸாதஸ்தி கர்ப்பபயாந்வித: ॥ (உ௫)

பாதாந்தரிதஹஸ்தாப்யாம் ச்ரோத்ரரம்த்ரம்பிதாயஸஃ
உத்விக்நோகர்ப்பஸம்வாஸாதஸ்திகர்ப்பயாந்விதஃ

வியாக்யானம்—பாதாந்தரித ஹஸ்தாப்யாம் - கால்களுக்கிடையில் சென்றகைகளால், ஸஃ - அந்தகர்ப்பத்திலுள்ள சிசு, ச்ரோத்ரரந்த்ரம் - காதோட்டைகளை, பிதாய - மூடிக்கொண்டு, கர்ப்பஸம்வாஸாத் - கர்ப்பவாஸத்தினால், உத்விக்நஃ - மிக்ககிலேசமுற்றதாய்க் கொண்டு, கர்ப்பபயாந்விதஃ - கர்ப்பவாஸபயத்தினால் பிடிக்கப்பட்டதாய்க் கொண்டு, அஸ்தி - இருக்கின்றது.

பொழிப்புரை—அந்தக் கர்ப்பசிசுவானது கால்களுக்கிடையில்சென்ற கைகளால் காதோட்டைகளை மூடிக்கொண்டு கர்ப்பவாஸத்தினால் மிக்ககிலேசமுற்றதாய்க் கொண்டு கர்ப்பவாஸ பயத்தினால் பிடிக்கப்பட்டதாய்க் கொண்டிருக்கின்றது.

ஶ்லோகம்.

ஆவிர்ப்பூதப்ரபோதோ(அ)ஸௌ கர்ப்பது:காதிஸம்யுத: ।
ஹா கஷ்டமிதி நிர்விண்ண: ஸ்வாத்மாநம் ஶோசதீத்யத: ॥ (உ௬)

ஆவிர்ப்பூதப்ரபோதோஸௌ கர்பதுக்காதிஸம்யுதஃ
ஹாகஷ்டமிதிநிர்விண்ணஃ ஸவாத்மாநம்சோசுசித்யதஃ

வியாக்யானம்—அஸௌ - இந்தச்சிசுவானது, ஆவிர்ப்பூதஸ்வரூபஃ - தோன்றியநிஜஸ்வரூபத்தை யுடையதாய்க்கொண்டு, கர்ப்பதுக்காதிஸம்யுதஃ - கர்ப்பதுக்கமுதலியவைகளை

யுடையதாய், அத - பிறகு, நிர்விண்ண: - வைராக்கியமுடையதாய், ஹாகஷ்டமிதி - அந்தோ கஷ்டமென்று, ஸ்வாத்மானம் - தன்னைக்குறித்து, சோசதி - மிகவும் சோகமடைகின்றது.

பொழிப்புரை—இந்தச் சிசுவானது தோன்றிய நிஜஸ்வரூபத்தையுடையதாய் கர்ப்பதுக்கானுபவத்தோடு கூடியதாய்க் கொண்டு வைராக்கியமுடையதாய் அந்தோகஷ்டமென்று தன்னைக் குறித்து மிக்கசோகமடைகின்றது.

ஸ்லோகம்.

𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑌾 𑌮𑌹𑌾𑌸𑌹𑍍𑌯𑌾𑌃 𑌪𑍁𑌰𑌾 𑌮𑌰𑍍𑌮𑌚𑍍𑌛𑌿𑌦𑍋𑌽𑌸𑌕𑍃𑌤𑍍 ।
𑌕𑌰𑌮𑍍𑌭𑌵𑌾𑌲𑍁𑌕𑌾𑌸𑍍𑌤𑌪𑍍𑌤𑌾𑌶𑍍𑌚𑌾𑌦𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌸𑍁𑌖𑌾𑌶𑌯𑌾𑌃 ॥ (௨௭)

அநுபூதாமஹாஸஹ்ய புரோமர்ச்சிதோஸக்ருத்
கரம்பவாலுகாஸ்தப்தாச்சாதஹ்யந்தாஸுகாசயா:

வியாக்யானம்—மர்மச்சித: - மர்மங்களைச் சேதிப்பனவாகிய துன்பங்களையுடைய மஹாஸஹ்யபுரா - மிகவும் ஸகிக்கக்கூடாத நரகதேஹங்கள், அஸக்ருத் - பலகோடிமுறை, அநுபூதா: - அநுபவிக்கப்பட்டன. கரம்பவாலுகாதப்தாச - (வறுத்தமா) வறுக்கப்பட்ட மாவைப்போன்ற மணல்களில் வறுக்கப்பட்டவர்களாய்க் கொண்டு, அஸுகாசயா: - ஸுகஸங்கல்பமற்றவர்களாய், அதஹ்யந்த - தஹிக்கப்பட்டனம்.

பொழிப்புரை—மர்மங்களைச் சேதிப்பனவாகிய துன்பங்களையுடைய மிகவும் ஸகிக்கக்கூடாதனவாகிய எண்ணிறந்ததேஹங்களைப் பெற்று எவ்வளவோ துன்புற்றனம். வறுத்தமாபோலுள்ள வறுக்கப்பட்ட மணல்களில் வறுக்கப்பட்டு மஹா துன்பத்தோடு தஹிக்கப்பெற்றனம்.

ஸ்லோகம்.

𑌜𑌠𑌰𑌾𑌨𑌲𑌸𑌨𑍍𑌤𑌪𑍍𑌤𑌪𑌿𑌤𑍍𑌤𑌾𑌖𑍍𑌯𑌰𑌸𑌵𑌿𑌪𑍍𑌰𑍁𑌷𑌃 ।
𑌗𑌰𑍍𑌭𑌾𑌶𑌯𑍇 𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑌂 𑌤𑍁 𑌦𑌹𑌨𑍍𑌤𑍍𑌯𑌤𑌿𑌭𑍃𑌶𑌂 𑌹𑌿 𑌮𑌾𑌂 ॥ (௨௮)

ஜடராநலஸந்தப்த பித்தாக்யரஸவிப்ருஷ:
கர்ப்பாசயேநிமக்நந்து தஹந்த்யதிப்ருசம்ஹிமாம்

வியாக்யானம்—கர்ப்பாசயே - கர்ப்பகோசத்தில், நிமக்நம் - அகப்பட்டுக்கொண்டவனாகிய, மாம் - என்னை, ஜடராநலஸந்த

ப்தபித்தாக்பரஸவிப்ருஷ: - ஜடராக்கினியால் கொதிக்கப்பெற்ற பித்தநீர்த்துளிகள், அதிப்ருசம்ஹி - மிக்கக்கடுமையாய், தஹந்தி - கொளுத்துகின்றன.

பொழிப்புரை—கர்ப்பகோசத்திலகப்பட்டுக் கொண்டவனாகிய என்னை ஜடராக்கினியால் கொதிக்கப்பெற்ற பித்தநீர்த்துளிகள் மிகவும் கடுமையாய்த் தஹிக்கின்றன.

ஸ்லோகம்.

[illegible]
[illegible] (உ௬)
உதர்யக்ருமிவக்த்ராணி கூடசால்மலிகண்டகை:
துல்யாநிசதுதந்த்யார்த்தம் பார்ச்வாஸ்திக்ரகசார்திதம்

வியாக்யானம்—பார்ச்வாஸ்திக்ரகசார்த்திதம் - விலாப்பக்கத்திலுள்ள ரம்பம்போன்ற எலும்புகளால் தொந்தரையடைந்தவனாகிய என்னை, கூடசால்மலிகண்டகை - முள்ளிலவையின் முள்ளுக்கு, துல்யாநி - நிகராயுள்ள, உதர்யக்ருமி வக்த்ராணி - உதரத்திலுள்ள புழுக்களின்வாய்களும், துதந்தி - ஹிம்ஸிக்கின்றன.

பொழிப்புரை—விலாப்பக்கத்திலுள்ளரம்பம்போன்றஎலும்புகளால் தொந்தரையடைந்தவனாகிய என்னை முள்ளிலவையின் முள்ளுகளுக்கு நிகராயுள்ள வயிற்றுப்புழுக்களின் முகங்களும் ஹிம்ஸிக்கின்றன.

ஸ்லோகம்.

[illegible]
[illegible] (௩௰)
கர்ப்பேதுர்க்கந்தபூயிஷ்டே ஜடராக்நிப்ரதீபிதே
து:க்கம்மயாப்தம் யத்தஸ்மாத்கநீய:கும்பபாகஜம்

வியாக்யானம்—ஜடராக்நிப்ரதீபிதே - ஜடராக்நியால் கொளுத்தப்பெற்றதும், துர்க்கந்தபூயிஷ்டே - கெட்டநாற்றநிறைந்ததுமாகிய, கர்ப்பே - கர்ப்பத்தில், மயா-என்னால், யத் - எந்த, துக்கம் - துன்பமானது, ஆப்தம் - அடையப்பட்டுளதோ, தஸ்

மாத் - அதிலும், கும்பபாகஜம் - கும்பிபாகமெனும் நரகத்தி லுண்டாகும் துன்பமானது, கநீய: - அற்பமேயாம்.

பொழிப்புரை—ஜடராக்கினியால் கொளுத்தப்பெற்றதும், கெட்டநாற்ற நிறைந்ததுமாகிய கர்ப்பத்தில் என்னால் எந்தத் துன்பம் அனுபவிக்கப்பட்டுளதோ அத்துன்பத்திலும் கும்பிபாக மெனும் நரகத்திலனுபவிக்கும் துன்பம் அற்பமேயாம்.

ஸ்லோகம்.

പൂയാസൃക്ശ്ലേഷ്മപായിത്വം വാന്താശിത്വംച യദ്ഭവേത് ।
അശുചൌക്രിമിഭാവശ്ച തത്പ്രാപ്തം ഗർഭശായിനാ ॥ (௬க)

பூயாஸ்ருக்ச்லேஷ்மபாயித்வம் வாந்தாசித்வம்சயத்பவேத்
அசுசௌக்ரிமிபாவச்சதத்ப்ராப்தம்கர்ப்பசாயிநா

வியாக்யானம்—பூய ஸ்ருக்ச்லேஷ்மபாயித்வம் - சீழ்ரத்தம் கபம் இவைகளைக் குடித்தல், வாந்தாசித்வம்ச-வாந்தத்தைப்புசித் தல், அசுசௌ - மலத்தில், க்ரிமிபாவ:ச-புழுபோலாதல் ஆகிய, யத் - யாதொன்று, பவேத் - ஏற்படுமோ, தத் - அது, கர்ப்ப சாயிநா - கர்ப்பத்திலுறங்கியவனுகிய என்னால், ப்ராப்தம்-அனுப விக்கப்பட்டுளது.

பொழிப்புரை—சீழ் ரத்தம் கபம் இவைகளைக் குடித்தல் வாந்தத்தைப் புசித்தல் மலத்தில் புழுபோலாதல் ஆகிய இவைக ளும் கர்ப்பவாஸம் செய்யும் என்னால் அனுபவிக்கப்பட்டுளது.

ஸ்லோகம்.

ഗർഭശയ്യാം സമാരുഹ്യ ദുഃഖം യാദൃങ്മയാപിതത് ।
നാതിശേതേ മഹാദുഃഖം നിശ്ശേഷനരകേഷു തത് ॥ (௬உ)

கர்ப்பசய்யாம்ஸமாருஹ்ய துக்கம் யாத்ருங்மயாபிதத்
நாதிசேதேமஹாதுஃக்கம் நிச்சேஷநரகேஷுதத்

வியாக்யானம்—கர்ப்பசய்யாம் — கர்ப்பமாகிய படுக்கையை, மாருஹ்ய - அடைந்து, மயா - என்னால், யாத்ருக் - எத்தஸ கைய, துக்கம் - துன்பம், ஆபி - அடையப்பட்டதோ, தத் - அந்ததுக்கத்தை நிச்சேஷநரகேஷு - ஸகலநரகங்களிலும் ஏற்

படுவதாகிய, மஹாதுக்கம் - பெருந்துக்கமானது, நாதிசேதே - அதிசயிக்கின்றதில்லை.

பொழிப்புரை—கர்ப்பகோசத்தையடைந்து என்னால் எத்தகைய துக்கம் அனுபவிக்கப்பட்டதோ அதனை ஸகல நரகங்களிலுமுள்ள பெருந்துக்கமும் மீறுகின்றதில்லை

ஸ்லோகம்.

ஏவம்ஸ்மரந்புராப்தாநாநா ஜாதீஸ்சயாதநா: ।
மோக்ஷோபாயமபித்யாயந்வர்த்ததேப்யாஸதத்பர: ॥ (௯௯)

ஏவம்ஸ்மரந்புராப்தாநாநா ஜாதீஸ்சயாதநா:
மோக்ஷோபாயமபித்யாயந்வர்த்ததேப்யாஸதத்பர:

வியாக்யானம்—ஏவம் - இவ்வாறு, புரா - பூர்வம், ப்ராப்தா: - அடையப்பட்டனவாகிய, நாநாஜாதீஸ்ச - பற்பலதேஹங்களையும், யாதநா:ச - துன்பங்களையும், ஸ்மரந் - நினைந்துகொண்டு, மோக்ஷோபாயம் - மோக்ஷத்திற்கு உபாயத்தை, அபித்யாயந் - சிந்தித்துக்கொண்டு, அப்யாஸதத்பர: - அப்பியாஸத்தையே முக்கியமாய்க்கொண்டவனாய், வர்த்ததே - இருக்கிறான்.

பொழிப்புரை—இவ்வாறு பூர்வம் அடையப்பட்ட ஜன்மங்களையும் துன்பங்களையும் நினைத்துகொண்டு மோக்ஷோபாயத்தைச் சிந்தித்துக்கொண்டு அப்பியாஸதத்பரனாய் இருக்கிறான்.

ஸ்லோகம்.

அஷ்டமேத்வக்ஸ்ருதீஸ்யாதாம் ஓஜஸ்தேஜஸ்சஹ்ருத்பவம் ।
சுப்ரமாபீதரக்தம்சநிமித்தம் ஜீவிதேமதம் ॥ (௯௪)

அஷ்டமேத்வக்ஸ்ருதீஸ்யாதாம் ஓஜஸ்தேஜஸ்சஹ்ருத்பவம்
சுப்ரமாபீதரக்தம்சநிமித்தம் ஜீவிதேமதம்

வியாக்யானம்—அஷ்டமே - எட்டாமாதத்தில், த்வக்ஸ்ருதீ - தோலும்சலனமும், ஸ்யாதாம் - உண்டாகும், ஹ்ருத்பவம் - ஹ்ருதயகமலத்திலிருந்து திக்கின்றதும், ஜீவிதே - ஜீவனஹேதுவாய், மதம் - சொல்லப்படும், சுப்ரம் - வெண்ணிறமுடையதும், ஆபீதரக்தம்ச-கொஞ்ஜம் மஞ்சள்நிறம்கலந்த செந்நிறமுடைய

தாகிய ஓஜ எனும் தாதுபரிணாமமும், தேஜ ச - தேஜ எனும் தாதுபரிணாமமும் உண்டாகின்றது.

பொழிப்புரை—எட்டாமாதத்தில் தோலும் சலனமும் உண்டாகின்றது. ஹ்ருதய கமலத்திலுண்டாகின்றதும் ஜீவதாரண ஹேதுவும் வெண்ணிறமும் கொஞ்சம் மஞ்சள்கலந்த சென்னிறம் பெற்றதுமாகிய ஓஜ தேஜ: எனும் தாதுபரிணாமங்களும் ஏற்படுகின்றன.

ஸ்லோகம்.

மாதரம்சபுநாகர்ப்பம் சஞ்சலம்தத்ப்ரதாவதி
தஸ்தாஜாதோஷ்டமேமாஸிநஜீவத்யோஜஸோஜஜித: (ரு.ரு)

மாதரம்சபுநாகர்ப்பம் சஞ்சலம்தத்ப்ரதாவதி
தஸ்தாஜாதோஷ்டமேமாஸிநஜீவத்யோஜஸோஜஜித:

வியாக்யானம்—கர்ப்பம் - கர்ப்பமானது, சஞ்சலம் - சலிக்கின்றதாயினும், புந - பிறகும், மாதரம் - அன்னையின்வயிற்றிலிருத்தலையே, ப்ரதாவதி - விசேஷமாய்க்கொண்டு சலிக்கின்றது, தத: - ஆதலால், அஷ்டமே - எட்டாம், மாஸி - மாதத்தில், ஜாத - உண்டானசிசு, ஓஜஸா - ஓஜஸ்எனும் தாதுவினால், உஜ்ஜித: - இல்லாததாய்க் கொண்டு, நஜீவதி - ஜீவிக்கின்றதில்லை.

பொழிப்புரை—கர்ப்பமானது சலிக்கின்றதாயினும் மீண்டும் அன்னியின் வயிற்றிலேயே இருக்கவேண்டிய தவசியமாதலால் அவ்வாறு இருந்துகொண்டு விசேஷமாய்ச் சலிக்கின்றது. ஆதலால் எட்டா மாதத்தில் பிறந்தசிசு ஓஜஸ் என்பதாக பூர்வம் சொல்லப்பட்ட தாதுபரிணாமமில்லாததாய்க்கொண்டு ஜீவிக்கின்றதில்லை.

ஸ்லோகம்.

கிஞ்சித்காலமவஸ்தாநம் ஸம்ஸ்காராத்பீடிதாங்கவத்
ஸமய: ப்ரஸவஸ்யாத்மாஸேஷு நவமாதிஷு (ரு.சு)

கிஞ்சித்காலமவஸ்தாநம் ஸம்ஸ்காராத்பீடிதாங்கவத்
ஸமய: ப்ரஸவஸ்யாத்மாஸேஷு நவமாதிஷு

வியாக்யானம்—பீடிதாங்கவத் - பீடையடைந்த தேஹமுடையவன்போல், ஸம்ஸ்காராத் - ஸம்ஸ்காரத்தால் அப்பியாஸவி

சேஷத்தால், கிஞ்சித்காலம் - ஸ்வல்ப்பகாலம், அவஸ்தானம் - இருத்தல் ஏற்படுகின்றது, ப்ரஸவஸ்ய - பிறத்தலுக்கு, ஸமயம்-சமயம், நவமாதிஷு - ஒன்பதாவது முதலிய, மாஸேஷு - மாதங்களில், ஸ்யாத் - ஏற்படும்.

பொழிப்புரை— பீடையடைந்த தேஹமுடையவன்போல, அதன் அப்பியாஸவிசேஷத்தால் கொஞ்சகாலம் இருத்தல் ஏற்படுகின்றது. பிறகு ஒன்பதாவது முதலியமாதங்களில் பிரஸவ ஸமயம் ஏற்படும்.

ஸ்லோகம்.

मातुस्तु रसवहां नाडीमाश्रित्यान्ववतारिता ।
नाभिस्थनाडी गर्भस्य मात्राहाररसावहा ॥ (௧௭)

மாதுரஸ்ரவஹாம்நாடீம் ஆச்ரித்யாந்வவதாரிதா
நாபிஸ்தநாடீகர்ப்பஸ்ய மாத்ராஹாரரஸாவஹா

வியாக்யானம்—மாது - அன்னையின், அஸ்ரவஹாம் - ரக்தத்தைவஹிக்கின்ற தாகிய, நாடீம் - நாடியை, ஆச்ரித்ய - ஆச்ரயித்து, (பற்றிக்கொண்டு) அன்வவதாரிதா-ஏற்பட்டுள்ள, நாபிஸ்தநாடீ - தொப்புளிலுள்ள நாடியானது, கர்ப்பஸ்ய - கர்ப்பசிசுவுக்கு, மாத்ராஹாரரஸாவஹா - அன்னையின் அன்னரஸத்தை சேர்ப்பிப்பதாம்.

பொழிப்புரை—அன்னையின் ரக்தத்தை வஹிக்கின்றதாகிய நாடியைப்பற்றிக்கொண்டு, ஏற்பட்டுள்ள தொப்புளிலுள்ள நாடியானது கர்ப்பத்திற்கு அன்னையின் அன்னரஸத்தைச் சேர்ப்பிக்கின்றதாயுள்ளது.

ஸ்லோகம்.

तेन जीवति गर्भोऽपि मात्राहारेण पोषितः ।
सुष्यन्त्रविनिर्दिष्टः पतितः कक्षीवत्तना ॥ (௧௮)
शेषास्त्रिंशद्वलं प्रजनाय प्रसवं व्रजतः ॥
निष्क्रान्तुं प्रसवोत्तानवातैः प्रसवयोनिवातैः ।
यन्त्रादेवं विनिर्मुक्तः पतत्युत्तानशाय्यतः ।

தேநஜீவதிகர்ப்போபிமாத்ராஹாரேணபோஷித:
அஸ்தியந்த்ரவிநிஷ்பிஷ்ட: பதித:குக்ஷிவர்த்மநா
மேதோஸ்ருக்திக்தஸர்வாங்கோ ஜராயுபுடஸம்வ்ருத:
நிஷ்க்ராமந்ப்ருசதுக்கார்த: ருதந்நுச்சைரதோமுக:
யந்த்ராதேவம்விநிர்முக்த: பதத்யுத்தானசாயுத

வியாக்யானம்—கர்ப்ப: அபி - கர்ப்பசிசுவும், தேந - அந்தக் தொப்புள்நாடியினால், மாத்ராஹாரேண - அன்னையின் ஆகாரத் தால், போஷித: - போஷிக்கப்பட்டதாய்க்கொண்டு, ஜீவதி - ஜீவிக்கின்றது, அஸ்தியந்த்ரவிநிஷ்பிஷ்ட: - எலும்பினால் சூழப் பட்டுள்ள கர்ப்பகோசத்தில் நெருக்குள்ளவனும், மேதோஸ்ருக் திக்தஸர்வாங்க: - மேதஸ்(வஸைஎனும் இருதயமாம்ஸம்) ருதி ரம் இவைகளால் பூசப்பெற்ற ஸகல அங்கங்களையும் உடையவ னும், ஜராபுடஸம்வ்ருத: - கர்ப்பவடிவமாகிய ஓர் புடத்தால் சூழப்பெற்றவனுமாய், குக்ஷிவர்த்மநா - யோனிவாயாக, பதித: - வந்தவனாய்க்கொண்டு, அதோமுக: - கீழ்முகமுடையவனாய், ப்ரு சதுக்கார்த்த: - மிக்கதுக்கத்தால் பீடிக்கப்பட்டவனாய், உச்சை: ருதந் - உரக்கக்கத்திக்கொண்டு, நிஷ்க்ராமந் - வெளிப்படுகின்ற வனாகின்றான், ஏவம் - இவ்விதம், யந்த்ராத் - கர்ப்பகோசத்தி லிருந்து, விநிர்முக்த: - வெளிப்படுகின்றவனாய்க் கொண்டு, உத் தானசாயி - மடிமீது படுக்கக்கூடியவனாய், பததி-விழுகின்றான்.

பொழிப்புரை—கர்ப்பசிசுவானது அந்தக்தொப்புள் நாடி யால் அன்னையின் ஆகாரத்தினால் போஷிக்கப்பட்டதாய்க் கொண்டு ஜீவிக்கின்றது. எலும்பினால் சூழப்பட்டுள்ள கர்ப்பகோசத் தில் நெருக்குள்ளவனும் மேதஸ்ருதிரம் இவைகளால் பூசப்பெ ற்றவனுமாய் யோனிவழிவந்து கீழ்முகமுடையவனாய் மிகவும் துக்கத்தால் நொந்தவனுமாய் உரக்கக்கத்திக்கொண்டு வெளிப் படுகின்றான். இவ்விதம் கர்ப்பகோசத்திலிருந்து வெளிப்பட்டவ னாய்க் கொண்டு மடிமீது வைக்கக்கூடியவனாய் விழுகின்றான்.

ஸ்லோகம்.

சுகிம் வி_ஆஸஷாஒொெகெ: ஊலஷெஶிவஷாஷூ_தஃ ।
ஸூஊஜ-ிாறாதிஷமஷ்ஹொ)ா ஈக்ஷ)ெதஷ௦ஙவாணிஹிஃ ॥

𑌪𑌿𑌤𑍃𑌵𑌦𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌮𑌾𑌤𑍃𑌵𑌡𑍍𑌡𑌾𑌕𑌿𑌨𑍀𑌮𑌪𑌿॥ (சக)

அஞ்சித்கஸ்ததாலோகை: மாம்ஸபேசிவதாஸ்தித:
ச்வமார்ஜாராதிதம்ஷ்ட்ரிப்யோ ரக்ஷ்யதே தண்டபாணிபி:
பித்ருவத்ராக்ஷயம் பேம்திமாத்ருவட்டாகினீமபி

வியாக்யானம்—ததா - அப்போது, அகிஞ்சித்க: - யாதும் செய்ய இயலாதவனும், மாம்ஸபேசிவத் - மாம்ஸபிண்டம் போல், ஆஸ்தித: - இருக்கின்றவனைப், தண்டபாணிபி: - தண்டம் கையிலுடையவர்களாகிய, லோகை: - ஜனங்களால், ச்வமார்ஜ ஜாராதிதம்ஷ்ட்ரிப்ய: - நாய்பூனை முதலியவைகளினின்றும், ரக்ஷ்யதே - பாதுகாக்கப்படுகின்றான், ராக்ஷஸம் - அரக்கனை, பித்ருவத் - தகப்பனைப்போலும், டாகினீம் - டாகினீமுதலிய தேவதையை, மாத்ருவத் - தாய்போலும், வேத்தி - எண்ணுகின்றான்.

பொழிப்புரை—அப்போது யாதும் செய்ய இயலாதவனைப் மாம்ஸப் பிண்டம்போன்றவனைத் தண்டத்தைக் கையிலுடையவர்களாகிய ஜனங்களால் நாய் பூனை முதலியவைகளால் கேடுவராதிருப்பதற்காகக்காக்கப்படுகின்றான். ராக்ஷஸனை தகப்பன்போலும் டாகினீதேவதையை தாய்போல் எண்ணுகின்றான்.

ஸ்லோகம்.

𑌪𑍂𑌯𑌂 𑌪𑌯𑍋𑌵𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍍𑌦𑍀𑌰𑍍𑌘𑌕𑌷𑍍𑌟𑌂 𑌤𑍁 𑌶𑍈𑌶𑌵𑌂 ।
𑌶𑍍𑌲𑍇𑌷𑍍𑌮𑌣𑌾 𑌪𑌿𑌹𑌿𑌤𑌾 𑌨𑌾𑌡𑍀 𑌸𑍁𑌷𑍁𑌮𑍍𑌨𑌾 𑌯𑌾𑌵𑌦𑍇𑌵 𑌹𑌿 ॥ (சஉ)
𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌵𑌰𑍍𑌣𑌂 𑌚 𑌵𑌚𑌨𑌂 𑌤𑌾𑌵𑌦𑍍𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 𑌨 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 ।

பூயம்பயோவதஞ்ஞாநத் தீர்க்ககஷ்டம்துசைசவம்
ச்லேஷ்மணாபிஹிதாநாடீ ஸுஷும்நாயாவதேவஹி
வ்யக்தவர்ணம்சவசனம்தாவத் வக்தும்சசக்யதே

வியாக்யானம்—பூயம் - சீழை, பயோவத் - பாலைப்போல, அஞ்ஞானத் - அறியாமையால் எண்ணப்பட்டது, சைசவம் - சிசுப்பருவமானது, தீர்க்ககஷ்டம் - பெருங்கஷ்டத்திற்கு ஹேது, யாவத் - எவ்வளவுகாலம், ஸுஷும்நா - ஸுஷும்னை எனும், நாடீ - நாடியானது, ச்லேஷ்மணா - கபத்தால், பிஹிதா-

சூழப்பெற்றதா யிருக்கின்றதோ, தாவத் - அவ்வளவுகாலம் வரையில், வ்யக்தவர்ணம்ச - அக்ஷரசுத்தமாய், வசனம் - வார்த்தையை, வக்தும் - சொல்லுவதற்கு, நசக்யதே - இயலுவதில்லை.

பொழிப்புரை—சிலைப்பாலைப்போல அறியாமையால் எண்ணப்பட்டது சிசுப்பருவமானது பெருங்கஷ்டமேயன்றோ எவ்வளவுகாலம் ஸுஷும்னையெனும் நாடியானது கபத்தினால் சூழப்பட்டு உள்ளதோ அத்தனைகாலம் வரையில் அக்ஷரஸ்பஷ்டமாய் வார்த்தை சொல்ல இயலாதன்றோ.

ஸ்லோகம்.

ஊதஷவசகெஃவிரொஜி-தும்லெநவஶகுதெ ॥ (௩௫)
த்ருவ்தொயெளவநம் ப்ராப்ய ம்நுதஜ்வரவிஹ்வலঃ ।
காயத்யகஸ்மாதுச்சைஸ்து தயாகஸ்மாத்வவலதி ॥ (௩௬)

அதஏவசகர்ப்பேபிரோதிதும்நைவசக்யதே
த்ருப்தோதயெளவநம் ப்ராப்யமந்மதஜ்வரவிஹ்வல:
காயத்யகஸ்மாதுச்சைஸ்து ததாகஸ்மாச்சவல்கதி

வியாக்யாணம்—அதஏவச - இக்காரணத்தாலேயே, கர்ப்பேஅபி - கர்ப்பத்திலும், ரோதிதும் - அழுவதற்கு, நசக்யதே ஏவ - இயலுவதேயில்லை, அத - பிறகு, யௌவனம் - யௌவனப்பருவத்தை, ப்ராப்ய - அடைந்து, த்ருப்த: - மதித்தவனாய், மந்மதஜ்வரவிஹ்வல: - ஸ்திரீபோகத்திலேயே ஆவலுள்ளவனாய், அகஸ்மாத் - காரணமின்றி சற்றுநேரம், காயதி - பாடுகின்றான், ததா - அப்படியே, அகஸ்மாச்ச - காரணமின்றிச்சற்றுநேரம், வல்கதி - ஓடுகின்றான்.

பொழிப்புரை—இக்காரணத்தாலேயே கர்ப்பத்திலும் அழுவதற்கியலுவதேயில்லை. பின்னர் யௌவனப்பருவம் வந்ததும் யாதும் தெரியாதவனாய் மதித்தும் ஸ்திரீபோகமொன்றிலேயே ஆவலுற்றுச்சற்றுநேரம் பாடுவதும் சற்றுநேரம் ஓடுவதும்இவை முதலிய செய்கைகளைச் செய்கின்றான்.

ஸ்லோகம்.

𑌆𑌰𑍋𑌹𑌤𑌿 𑌤𑌰𑍂𑌨𑍍𑌵𑍇𑌗𑌾𑌤𑍍 𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌨𑍁𑌦𑍍𑌵𑍇𑌜𑌯𑌤𑍍𑌯𑌪𑌿 ।
𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌮𑌦𑌾𑌨𑍍𑌧𑌸𑍍𑌸𑌨𑍍 𑌕𑌾𑌂𑌶𑍍𑌚𑌿𑌦𑌪𑌿 𑌨 𑌵𑍀𑌕𑍍𑌷𑌤𑍇 ॥ (௪௫)

ஆரோஹதிதரூந்வேகாத் சாந்தாநுத்வேஜயத்யபி
காமக்ரோதமதாந்தஸ்ஸந்காம்சசிலபிவீக்ஷதே

வியாக்யானம்—வேகாத் - வேகமாய், தரூந் - மரங்களில், ஆரோஹதி - ஏறுகின்றான், சாந்தாந் - அடக்கமுடைய பெரியோர்களை, உத்வேஜயதி - துன்பப்படுத்துகின்றான், காமக்ரோதமதாந்த:ஸந் - காமக்குரோதங்களால் மதித்து யாதும் தெரியாதவனாய், காந்சித்அபி - எவர்களையும், நவீக்ஷதே - லக்ஷியம் செய்கின்றதில்லை.

பொழிப்புரை—வேகமாய் மரத்திலேறுகிறான் பெரியோர்களைத் துன்புறுத்துகின்றான் காமக்குரோதமதத்தால் யாதும் தெரியாதவனாய் எவர்களையும் லக்ஷியம் செய்கின்றதில்லை.

ஸ்லோகம்

𑌅𑌸𑍍𑌥𑌿𑌮𑌾𑌂𑌸𑌸𑌿𑌰𑌾𑌲𑌾𑌯𑌾 𑌵𑌾𑌮𑌾𑌯𑌾 𑌮𑌨𑍍𑌮𑌥𑌾𑌲𑌯𑍇 ।
𑌉𑌤𑍍𑌤𑌾𑌨𑌪𑍂𑌤𑌿𑌮𑌣𑍍𑌡𑍂𑌕𑌪𑌾𑌟𑌿𑌤𑍋𑌦𑌰𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑍇 ॥ (௪௬)
𑌆𑌸𑌕𑍍𑌤𑌃 𑌸𑍍𑌮𑌰𑌬𑌾𑌣𑌾𑌰𑍍𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾 𑌦𑌹𑍍𑌯𑌤𑍇 𑌭𑍃𑌶𑌮𑍍 ॥

அஸ்திமாம்ஸஸிராலாயாவாமாயாமந்மதாலயே
உத்தாநபூதிமண்டூகபாடிதோதரஸந்நிபே
ஆஸக்த:ஸ்மரபாணார்த்த: ஆத்மநாதஹ்யதேப்ருசம்

வியாக்யானம்—அஸ்திமாம்ஸஸிராலாயா: - எலும்புமாம்ஸ நரம்பு இவைகளின் சேர்க்கை வடிவமாகிய, வாமாயா: - ஸ்திரீயின்து, உத்தாநபூதிமண்டூகபாடிதோதரஸந்நிபே - விரிந்து துக்கந்தமுள்ள தவளையின் பிளப்புற்றவயிற்றுக்கு சமானமாகிய, மந்மதாலயே-நிதம்பத்தில், ஆஸக்த: - ஆவலுள்ளவனாய்,ஸ்மரபாணார்த்த: - ஸ்த்ரீபோகவிச்சையால் நொந்து, ஆத்மநா - மனதினால், ப்ருசம் - மிகவும், தஹ்யதே - தஹிக்கப்படுகின்றான்.

பொழிப்புரை—எலும்பு மாம்ஸம் நரம்பு இவைகளின் சேர்க்கைவடிவமாகிய ஸ்திரீயின் விகாரமாய் காணப்படுவதும் கெட்ட

நாற்றமுள்ளதுமாகிய தவளையின் பிளப்பு அடிவயிற்றுக்கு(ஆஸனத்துவாரத்திற்கு) நிகராகிய நிதம்பத்தில் ஆவலுடையவனாய் ஸ்திரீபோக இச்சையால் நொந்துமனதினால் மிக்க தஹிக்கப்படுகின்றான்.

ஸ்லோகம்.

அஸ்திமாம்ஸஶிராத்வக்ப்ய: கிமந்யத்வர்ததே வபு: (சஎ½)
வாமாநாம்மாயயாமூடோ நகிஞ்சித்வீக்ஷதே ஜகத் ॥

அஸ்திமாம்ஸஶிராத்வக்ப்ய கிமந்யத்வர்ததேவபு:
வாநாம்மாயயாமூடோநகிஞ்சித் வீக்ஷதேஜகத்

வியாக்யானம்—வாமாநாம் - ஸ்திரீகளின், வபு: - தேஹமானது, அஸ்திமாம்ஸஶிராத்வக்ப்ய: - எலும்புமாம்ஸம் நரம்பு தோல் இவைகளைக் காட்டிலும், அந்யத் - வேறாக, கிம் - யாது, வர்த்ததே இருக்கின்றது, மாயயா - மாமையால், அஜ்ஞானத்தால், மூட: - மோஹித்தவனாய்க்கொண்டு, ஜகத் - ஜகத்தை, கிஞ்சித் - சிறிதும், நவீக்ஷதே - பரியாலோசனைசெய்து பார்க்கின்றதில்லை.

பொழிப்புரை—ஸ்திரீகளின் தேஹமானது எலும்பு மாம்ஸம் நரம்புதோல் இவைகளைக் காட்டிலும் வேறாய் யாதுளது அஞ்ஞானத்தால் மோஹித்தவனாய்க் கொண்டு ஜகத்தைச் சிறிதும் விவேகித்துப் பார்க்கின்றதில்லை.

ஸ்லோகம்.

நிர்கதே ப்ராணபவனே தேஹோ ஹந்த ம்ருகீத்ருச: ।
யதா ஹிஜாயதே நைவ வீக்ஷ்யதே பஞ்சஷைர்தினை: ॥(சஅ½)

நிர்க்கதேப்ராணபவநே தேஹோஹந்தம்ருகீத்ருச:
யதா ஹிஜாயதேநைவ வீக்ஷ்யதேபஞ்சஷைர்தினை:

வியாக்யானம்—ப்ராணபவேந - ப்ராணவாயுவானது, நிர்க்கதே - வெளிப்போய்விடின், ம்ருகீத்ருச: - ஸ்திரீயின், தேஹ: - தேஹமானது, பஞ்சஷை: - ஐந்தாறு, தினை: - தினங்களில்

யதாஹி - எப்படி, ஜாயதே - ஆகின்றதோ, ஹந்த - அந்தோ ந வீக்ஷ்யதேஏவ - அது பார்க்கப்படுகின்றதில்லை.

பொழிப்புரை—ப்ராணவாயுவானது வெளிப்போய்விடின் ஸ்திரீயின்தேகமானது ஐந்தாறுதினங்களில் எவ்வாருருமோ அந்தோ அதனை ஆலோசித்துப்பார்க்கின்றதில்லை.

ஸ்லோகம்.

மஹாபரிபவஸ்தானஂ ஜராஂ ப்ராப்யாதிது:கித: । (சுக)
ஶ்லேஷ்மணா பிஹிதோரஸ்கோ ஜக்தமன்னஂ நஜீர்யதி ।
ஸந்நதந்தோ மந்ததிருஷ்டி: கடுதிக்தகஷாயபுக் ॥ (நுல)

மஹாபரிபவஸ்தாநம் ஜராம்ப்ராப்யாதிது:கித:
ச்லேஷ்மணாபிஹிதோரஸ்கோ ஜக்தமந்தம்நஜீர்யதி
ஸந்நதந்தோமந்தத்ருஷ்டி: கடுதிக்தகஷாயபுக்

வியாக்யானம்—மஹாபரிபவஸ்தாநம் - பெரும் அவமதிப்பிற்கிடமாகிய, ஜராம் - கிழத்தன்மையை, ப்ராப்ய - அடைந்து, அதிது:கித: - மிக்க துன்புறுகின்றவனுகின்ருன், ச்லேஷ்மணா - கபத்தால், பிஹிதோரஸ்க: - மறைக்கப்பட்ட மார்பினையுடையவனுகின்ருன், ஜக்தம் - புசிக்கப்பட்ட, அந்நம்- உணவு, நஜீர்யதி - ஜரிக்கின்றதில்லை, ஸந்நதந்த: - உதிர்ந்து போனபற்களையுடையவனும், மந்தத்ருஷ்டி: - குன்றியபார்வையுடையவனும், கடுதிக்தகஷாயபுக் - கசப்புதுவர்ப்பு கலப்புச்சுவை இவைகளைப் புசிக்கின்றவனும் ஆகின்ருன்.

பொழிப்புரை—பெரும் அவமதிப்பிற்கிடமாகிய கிழத்தன்மையை அடைந்து மிக்கத்துன்புறுகின்ருன். கபத்தினுல் கட்டப்பட்ட மார்புடையவனுகின்ருன் உண்டஉணவுசெரிப்பதில்லை. பற்களுதிர்ந்து பார்வையும்குன்றிப்போனநிலைமையுடையவனுய்க் கசப்புதுவர்ப்பு முதலியவைகளைப் புசிப்பவனுகின்ருன்.

ஸ்லோகம்.

வாதபக்னகடிக்ரீவா கரோருசரணோபல: ।
க்ஷாயமாணஸ்வரோவிஷ்டி: பரிபூதஸ்ஸமந்தத: ॥ (நுக)

*வாதபுக்நகடிக்ரீவாகரோருசரணோபலஃ*

*கதாயுதஸமாவிஷ்டஃ பரிபூதஸ்ஸ்வபந்துபி*

**வியாக்யானம்**—*வாதபுக்நகடிக்ரீவாகரோருசரணஃ - வாயுவால் தங்கப்பெற்றுக்கோணிய இடை கழுத்து துடை கால் இவைகளையுடையவனும், அபலஃ - பலமற்றவனும், கதாயுதஸமாவிஷ்டஃ - அளவிலடங்காத பிணிகளையுமுடையவனும், ஸ்வபந்துபிஃ - தனது பந்துக்களால், பரிபூத - அவமதிக்கப்பட்டவனும் ஆகின்றான்.*

**பொழிப்புரை**—*வாயுவின் பிடையால் கோணிப்போன இடைகழுத்து கை துடைகால் இவைகளையுடையவனும் பலமற்றவனும் எண்ணிறந்த ரோகங்களையுடையவனும் தனது பந்துக்களால் அவமதிக்கப்பட்டவனுமாகின்றான்.*

**ஸ்லோகம்.**

𑌨𑌿𑌶𑍍𑌶𑍌𑌚𑍋 𑌮𑌲𑌦𑌿𑌗𑍍𑌧𑌾𑌙𑍍𑌗 𑌆𑌲𑌿𑌙𑍍𑌗𑌿𑌤𑌵𑌰𑍋𑌷𑌿𑌤𑌃 । (ருஉ)

𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍 𑌸𑍁𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌾𑌨𑍍 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇𑌽𑌚𑌲𑌃 ॥

*நிஸ்ஸௌசோமலதிக்தாங்கஃ ஆலிங்கிதவரோஷிதஃ*

*த்யாயந்ஸுதுர்லபாந்போகாந் கேவலம்வர்த்ததே அசல;*

**வியாக்யானம்**—*நிஸ்ஸௌசஃ - சுத்தியில்லாதவனும், மலதிக்தாங்கஃ - மலத்தால் பூசப்பெற்ற அங்கமுடையோனும், ஆலிங்கிதவரோஷித: - ஆலிங்கனம் செய்யப்பெற்ற பெருந்தாபமுடையோனும் கேவலம், அஸுதுர்லபாந் - எளிதில்கிடைக்காதனவாகிய, போகாந் - போகங்களையே, த்யாயந் - சிந்தித்துக்கொண்டு, அசல: - அசைவற்றவனாய், வர்த்ததே - இருக்கின்றான்.*

**பொழிப்புரை**—*சுத்தியில்லாதவனும் மலம்பூசப்பெற்றதேகமுடையவனும் தேஹம் கொடுமையாய்ப் எரிக்கப்பெற்றவனும் எளிதில் கிடைக்காதனவாகிய போகங்களையே சிந்தித்துக்கொண்டு இருக்குமிடம் விட்டசையாமலிருக்கின்றான்.*

ஸ்லோகம்.

ஸவெ-ஃஂஜி்ரயகிரயாலொவாக ஹாஸ்யதெவாலகொவி ।
தொம்ரதிஜது-கஸ்ய ஜ்ருஷ்டாந்தொநொவலஹ்யதெ ॥ (ருங)

ஸர்வேந்த்ரியக்ரியா லோபாத் ஹாஸ்யதே பாலகைரபி
ததோம்ருதிஜதுக்கஸ்ய த்ருஷ்டாந்தோநோபலப்யதே

வியாக்யானம்.—ஸர்வேந்த்ரியக்ரியாலோபாத் - எந்த இந்திரியமும் வேலைசெய்வதற்கில்லாமற் போனமையால், பாலகை: அபி - சிறுபாலர்களாலும் ஹாஸ்யதே - பரிஹஸிக்கப்படுகின்றான், தத: - பிறகு, ம்ருதிஜதுக்கஸ்ய - மரணகாலத்துக்கத்திற்கு த்ருஷ்டாந்த: - திருஷ்டாந்தமானது நஉபலப்யதே-காணப்படுகின்றதில்லை.

பொழிப்புரை.—எவ்விந்திரியமும் வேலைசெய்வதற்கில்லாமற் போனமையால் சிறுபாலர்களும் பரிகஸிக்கின்றார்கள். அதன் பிறகுமரணகாலத்துக்கத்திற்கு நிகரில்லை.

ஸ்லோகம்.

யஸ்மாத்பிப்யதிபூதானி ப்ராப்தாந்யபிபராம்ருஜம் ।
நீயதெம்ருத்யுநாஜந்து: பரிஷ்வக்தோபிபந்துபி: ॥
ஸாகராந்தர்ஜலகதோ கருடேநேவ பந்நக: ॥ (ருச)

யஸ்மாத்பிப்யதிபூதானி ப்ராப்தாந்யபிபராம்ருஜம்
நீயதே ம்ருத்யுநாஜந்து: பரிஷ்வக்தோபிபந்துபி:
ஸாகராந்தர்ஜலகதோ கருடேநேவபந்நக:

வியாக்யானம்—பராம் ருஜம் - பெரும்பிணியை, ப்ராப்தாநி அபி - அடைந்தனவுமாகிய, பூதாநி - பிராணிகள், யஸ்மாத் - எந்த எமனிடம், பிப்யதி - பயப்படுகின்றனரோ, பந்துபி: - பந்துகளால், பரிஷ்வக்த: அபி - தழுவப்பட்டுள்ளவனாயினும், ஜந்து: - மனிதன் ஸாகராந்தர்ஜலகத: - ஸமுத்திரத்தி னடுஜலத்தில் உள்ள, பந்நக: - ஸர்ப்பமானது, கருடேந இவ - கருடனாலே போல், ம்ருத்யுநா - யமனால், நீயதே - கொண்டுபோகப்படுகின்றான்.

பொழிப்புரை—பெரும்பிணிகளையுடைய பிராணிகளும் எவனிடம் பயப்படுகின்றனவோ பந்துக்களால் தழுவப்பட்டிருக்கினும் சமுத்திரநடுவிலுள்ள ஸர்ப்பம் கருடனாலேபோல எமனால் கொண்டுபோகப்படுகின்றனர்.

ஸ்லோகம்.

ஹாகாம் தெஹ நம்வ—த்ராஃ க்ரந்தமாநம்ஸு—தாருணம் ।
மண்டூகஇவ ஸ ர்ப்பேண ம்ருத்யுநா நீயதே நரஃ ॥ (ருரு)

ஹாகாந்தே ஹாதநம் புத்ராஃ க்ரந்தமாநம்ஸுதாருணம்
மண்டூக இவஸர்ப்பேண ம்ருத்யுநாநீயதேநரஃ

வியாக்யானம்—ஹா - ஹா, காந்தே - ஓ பத்நீ, ஹா - ஹா தநம் - பணம் - புத்ராஃ - புதல்வர்களே என்று, ஸுதாருணம் - மிக்கக்கோரமாய் க்ரந்தமானம் - அழுகின்றவனாகிய, நரஃ - மனிதன், மண்டூகஃ - தவளையானது, ஸர்ப்பேண இவ - பாம்பினாலே போல, ம்ருத்யுநா - எமனால், நீயதே - கொண்டுபோகப்படுகின்றான்.

பொழிப்புரை—ஹா பத்நீ ஹா தனமே புத்திரர்களே என்றுமிக்கப்பயங்கரமாய் அழுகின்றவனாயினும் தவளையானது ஸர்ப்பத்தினாலே போல எமனால் கைப்பற்றப்படுகின்றான்.

ஸ்லோகம்.

மர்மஸூந்மத்யமாநேஷு முச்யமாநேஷு ஸந்திஷு ।
யத்து:க்கம் ம்ரியமாணஸ்ய ஸ்மர்யதாம் தந்முமுக்ஷுபிஃ ॥ (ருசு)

மர்மஸூந்மத்யமாநேஷுமுச்யமாநேஷு ஸந்திஷு
யத்து:க்கம் ம்ரியமாணஸ்யஸ்மர்யதாம்தந்முமுக்ஷுபிஃ

வியாக்யானம்—மர்மஸு - மர்மஸ்தானங்கள், உந்மத்யமாநேஷு - ப்ராணன் வெளிப்படுவதில் தொந்தரையடையும்போதும், ஸந்திஷு - ஸந்திபந்தங்கள், முச்யமாநேஷு - பிராணனால்விடப்படும்போதும், ம்ரியமாணஸ்ய - மரணாவஸ்தையிலுள்ளவனுக்கு- யத் - யாதொரு, து:க்கம் - துக்கமுள்ளதோ, தத் - அத்துக்கமானது, முமுக்ஷுபிஃ - மோக்ஷத்தில் விருப்புற்றவர்களால், ஸ்மர்யதாம் - சிந்திக்கவேண்டியது.

பொழிப்புரை—மர்மஸ்தானங்கள் ஹிம்ஸைப்படும்போதும் ஸந்திபந்தங்கள் துடிக்கும்போதும் மரணாவஸ்தையிலுள்ளவனுக்கு எந்த துக்கம் நேருமோ அந்த துக்கம் மோக்ஷத்தில் விருப்புற்றவர்களால்சிந்தித்துப் பார்க்கவேண்டியது.

ஸ்லோகம்.

ஜ்ருஷ்டாவாக்ஷிப்யமாணாயாம் ஸம்ஜ்ஞயா ஹ்ரியமாணயா ।
ம்ருத்யுபாசேந பத்தஸ்ய த்ராதா நைவோபலப்யதே ॥ (ருஎ)

த்ருஷ்டாவாக்ஷிப்யமாணாயாம் ஸமஜ்ஞயாஹ்ரியமாணயா
ம்ருத்யுபா சேநபத்தஸ்யத்ராதா நைவோபலப்யதே

வியாக்யானம்—த்ருஷ்டௌ - கண்ணனது, ஆக்ஷிப்யமாணாயாம் - விழிக்கமுடியாது சொருகும்போதும், ஸம்ஜ்ஞயா - ஞாபகமும் ஹ்ரியமாணயா - குன்றிப்போகவே, ம்ருத்யுபாசேந - எமபாசத்தால், பத்தஸ்ய - கட்டப்பட்டவனுக்கு த்ராதா - ரக்ஷகன் ந உபலப்யதே, ஏவ - காணப்படுகின்றதேயில்லை.

பொழிப்புரை—கண் விழிக்கமுடியாது சொருகப்படும்போதும் நினைவும் தவிரவே ம்ருத்யு பாசத்தால்கட்டப்பட்டவனுக்கு ரக்ஷகன் காணப்படுகின்றதில்லை யன்றே.

ஸ்லோகம்.

ஸம்ருத்யமாநஸ்தமஸா மஹச்சித்தமிவாவிசந் ।
உபாஹூதஸ்ததா ஜ்ஞாதீந் ஈக்ஷதே தீநசக்ஷுஷா ॥ (ருஅ)

ஸம்ருத்யமாநஸ்தமஸாமஹத் சித்தமிவாவிசந்
உபாஹூதஸ்ததாஜ்ஞாதீந் ஈக்ஷதே தீநசக்ஷுஷா

வியாக்யானம்—தமஸா - அஞ்ஞானத்தால் ஸம்ருத்யமாநஃ- தகையப்பட்டவனும் மஹத்சித்தம் - நன்றாயுள்ள சித்தத்தை ஆவிசந், இவ - உடையவன்போல, ததா - அப்போது உபாஹூதஃ - கூப்பிடப்பட்டவனாய் (க்கொண்டு) தீநசக்ஷுஷா - தீனமாகிய நேத்திரத்தால், ஜ்ஞாதீந் - ஸ்நேஹாதரவர்க்கங்களை ஈக்ஷதே- பார்க்கின்றான்.

பொழிப்புரை—அஞ்ஞானத்தால் தகையப்பட்டவனாய் சரியாய் உள்ளசித்தமுடையவன்போலக் கூப்பிடப்பட்டு ஞாதிகளை தீனத்தன்மையுடன் கூடிய விழியால் பார்க்கின்றான்.

ஶ்லோகம்.

അയഃപാശേന കാലേന സ്നേഹപാശേന ബന്ധുഭിഃ ।
ആത്മാനം കൃഷ്യമാണം തമീക്ഷതേ പരിതസ്തഥാ ॥ (சுகூ)

அய:பாசேநகாலேந ஸ்நேஹபாசேநபந்துபி:
ஆத்மாநம்க்ருஷ்யமாணம் தமீக்ஷதேபரிதஸ்ததா

வியாக்யானம்—காலேந - எமனால் அய:பாசேந - இருப்புச்சங்கிலியாலும், பந்துபி:-பந்துக்களால்,ஸ்நேஹபாசேந-ஸ்நேகம் எனும் கயிற்றினாலும், ஆத்மாநம்-தன்னை, பரித: - இங்குமங்கும் க்ருஷ்யமாணம் - இழுக்கப்படுகின்றவனாக, ஈக்ஷதே - காண்கின்றான்.

பொழிப்புரை—காலனால் இருப்புச்சங்கிலியாலும் பந்துக்களால் ஸ்நேஹபாசத்தாலும் தான் இருபக்கங்களிலும் இழுக்கப்படுகின்றதாகக்காண்கின்றான்.

ஶ்லோகம்.

ഹിക്കയാ ബാധ്യമാനസ്യ ശ്വാസേന പരിശുഷ്യതഃ ।
മൃത്യുനാകൃഷ്യമാണസ്യ ന ഖല്വസ്തി പരായണം ॥ (சுo)

ஹிக்கயாபாத்யமாநஸ்யச்வாஸேநபரிசுஷ்யத:
ம்ருத்யுநாக்ருஷ்யமாணஸ்யநகல்வஸ்திபராயணம்

வியாக்யாணம்—ஹிக்கயா- ஹிக்கையெனும் (இருமல்) வியாதியினால் தொந்தரையடைகின்றவனும் ச்வாஸேந - ச்வாஸத்தால் பரிசுஷ்யத: - தேஹம்வறண்டுபோனவனும் ம்ருத்யுநா - எமனால், ஆக்ருஷ்யமாணஸ்ய - இழுக்கப்படுகின்றவனுமான மனிதனுக்கு, பராயணம் - ரக்ஷகன், ந அஸ்திகலு - இல்லையன்றோ.

பொழிப்புரை—ஹிக்கையென்னும் இருமலால் தொந்தரையுற்று ச்வாஸத்தால் வறண்டும் காலபாசத்தால் இழுக்கப்படுகின்றவனுமாகியமனிதனுக்கு ரக்ஷகன் இல்லையன்றோ.

ஶ்லோகம்.

സംസാരയന്ത്രമാരൂഢോ യമദൂതൈരധിഷ്ഠിതഃ ।
ക്വ യാസ്യാമീതി ദുഃഖാർതഃ കാലപാശേന യോജിതഃ ॥ (சுக)

ஸம்ஸாரயந்த்ரமாரூடோயமதூதைரதிஷ்டித:
க்வயாஸ்யாமீதி துக்கார்த்த: காலபாசேநயோஜித:

வியாக்யாணம்:—ஸம்ஸாரயந்த்ரம் - ஸம்ஸாரமாகிய யந்திரத்தில் ஆரூட:-ஏறியவனும், யமதூதை:-யமதூதர்களால், அதிஷ்டித:- அடக்கப்பட்டவனும்காலபாசேந-யமபாசத்தால்யோஜித:- கட்டப்பட்டவனுமாய், க்வ - எங்கு, யாஸ்யாமி - செல்லுவேன், இதி - என்று து:க்கார்த்த: - சோகத்தினால் வருத்துவோனுகின்றான்.

பொழிப்புரை:—ஸம்ஸாரமாகிய யந்த்ரத்திமேலேறியவனும் யமதூதர்க்கு வசங்கதனும் யமபாசத்தினால் கட்டப்பட்டவனுமாய்க்கொண்டு எங்கு செல்லுவேன் என்று வருத்தமுறுகின்றான்.

ஸ்லோகம்.

கிம்கரோமி க்வ கச்சாமி கிம் க்ருஹ்ணாமி த்யஜாமி கிம் ।
இதி கர்த்தவ்யதாமூட: க்ருச்ராத் தேஹாத் த்யஜத்யஸூந் ॥ (௩௨)

கிம்கரோமிக்வகச்சாமிகிம்க்ருஹ்ணாமித்ய ஜாமிகிம்
இதிகர்த்தவ்யதாமூட: க்ருச்ராத்தே ஹாத்த்யஜத்யஸூந்

வியாக்யாணம்—கிம் - என்ன, கரோமி - செய்வேன், க்வ - எங்கு, கச்சாமி - செல்லுவேன், கிம்-எதனை, க்ருஹ்ணாமி-கிரஹித்துக்கொள்வேன், கிம் - எதனை, த்யஜாமி - விடுவேன், இதி - என்று, கர்த்தவ்யதாமூட: - செய்வதின்னதென்றுதெரியாதவனும், க்ருச்ராத் - மஹாகஷ்டப்பட்டுக்கொண்டு தேஹாத் - தேஹத்திலிருந்து அஸூந் - ப்ராணனை த்யஜதி - விடுகின்றான்.

பொழிப்புரை:—என்னசெய்வேன் எங்குசெல்லுவேன் எதைப்பற்றுவேன் எதை விடுவேன் என்று இவ்விதம் செய்வதுயாதொன்று அறியாமல் மிகவும் தொந்தரையடைந்து தேஹத்திலிருந்து பிராணனோடு வெளிப்படுகின்றான்.

ஸ்லோகம்.

யாதநாதேஹஸம்பந்தோ யமதூதைரதிஷ்டித: ।
இதோகத்வாநுபவதி யாயாஸ்தாயமயாதநா: ॥ (௩௩)

யாதநாதேஹ ஸம்பந்தோ யமதூதைரதிஷ்டித:
இதோகத்வாநுபவதி யாயாஸ்தாயமயாதநா:

வியாக்யானம்—யாதநாதேஹ ஸம்பத்த: - யாதனாதேஹத்தோடு கூடியவனாய் யமதூதை: - யமதூதர்களால் அதிஷ்டித: - கைப்பற்றப்பட்டவனாய், இத: - இவ்விருந்து கத்வா - சென்று யா:யா: - எந்த எந்த, யமயாதநா: - யமயாதனைகள் உள்ளனவோ, தா: - அவைகளை அனுபவதி - அனுபவிக்கின்றான்.

பொழிப்புரை—யாதனாதேஹத்தைப்பற்றிக்கொண்டுயமதூதருக்குட்பட்டு இங்கிருந்துசென்று யமயாதனைகளெல்லாவற்றையும் அனுபவிக்கின்றான்.

ஸ்லோகம்

தாஸு யல்லபதே துக்கம் தத்வக்தும் ஸஹதே குத:

தாஸு யல்லபதே துக்கம் தத்வக்தும் ஸஹதே குத:

வியாக்யானம்:—தாஸு - அந்நரகயாதனைகளுள், யத் - யாதொரு து:க்கம் - துன்பத்தை லபதே - அனுபவிக்கின்றானோ தத் - அதனை வக்தும் - சொல்ல, குத: - எங்ஙனம், ஸஹதே - ஸஹிப்பான்.

பொழிப்புரை:— அந்நரகயாதனைகளுள் அனுபவிக்கும்துக்கத்தைச் சொல்ல எங்ஙனம் இயலும்.

ஸ்லோகம்.

கர்ப்பூரசந்தனாத்யைஸ்து லிப்யதே ஸததம் ஹியத் ।
பூஷணைர்பூஷ்யதே சித்ரை: ஸுவஸ்த்ரை: பரிவார்யதே ।
அஸ்ப்ருச்யம் ஜாயதே ப்ரேக்ஷ்யம் ஜீவத்யக்தம் ஸதாவபு: ॥

கர்ப்பூரசந்தனாத்யைஸ்து லிப்யதேஸததம்ஹியத் (௩௫)
பூஷணைர்பூஷ்யதேசித்ரை: ஸுவஸ்த்ரை: பரிவார்யதே
அஸ்ப்ருச்யம் ஜாயதேப்ரேக்ஷ்யம் ஜீவத்யக்தம்ஸதாவபு:

வியாக்யானம்—யத் - யாதொரு தேஹமானது, கர்ப்பூரசந்தனாத்யைஸ்து - கர்ப்பூரசந்தனாதிகளாலேயே, ஸததம் - எப்போதும், லிப்யதே - பூசப்பெறுகின்றதோ, சித்ரை: - அற்புதங்களாகிய, பூஷணை: - ஆபரணங்களால், பூஷ்யதே - அணியப்படுகின்றதோ, ஸுவஸ்த்ரை: - நல்ல ஆடைகளால், பரிவார்யதே - அலங்கரிக்கப்படுகின்றதோ, வபு: - அத்தேஹமே, ஜீவத்யக்தம் - ஜீவனால்விடப்பட்டதாயின் அஸ்ப்ருச்யம் - தொடுவதற்குத்தகாததும் அப்ரேக்ஷ்யம் - பார்க்கத்தகாததும் ஜாயதே - ஆகின்றது.

பொழிப்புரை.—யாதொருதேஹமானது கர்ப்பூரசந்தனாதிகளால் எப்போதும் பூசப்பெறுகின்றதோ அழகிய ஆபரணங்களாலும் சிறந்தவஸ்த்ரங்களினாலும் அலங்கரிக்கப்படுகின்றதோ அத்தேஹமே ஜீவனால் பிரியப்பட்டதாயின் தொடத்தகாததும் பார்க்கத்தகாததுமாகின்றது.

ஸ்லோகம்

𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨𑌿𑌲𑌯𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑌣𑌂 𑌨𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌪𑌿 ।

நிஷ்க்ராமயந்திநிலயாத் க்ஷணம் நஸ்தாபயந்த்யபி

வியாக்யானம்:—நிலயாத் - இல்லத்தினின்றும் நிஷ்க்ராமயந்தி - வெளிக்கொண்டுபோகின்றார்கள் க்ஷணம்அபி - க்ஷணப்போதும் நஸ்தாபயந்தீ - வைத்திருக்கின்றதில்லை.

பொழிப்புரை:—இல்லத்தினின்றும் வெளிக்கொண்டுபோகின்றார்கள் க்ஷணப்போதும் வைத்திருக்கின்றதில்லை.

ஸ்லோகம்.

𑌦𑌹𑍍𑌯𑌤𑍇 𑌚 𑌤𑌤𑌃 𑌕𑌾𑌷𑍍𑌠𑍈𑌃 𑌤𑌦𑍍𑌭𑌸𑍍𑌮 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍 ।
𑌭𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇 𑌵𑌾 𑌸𑍃𑌗𑌾𑌲𑍈𑌰𑍍𑌵𑌾 𑌗𑍃𑌧𑍍𑌰𑌕𑍁𑌕𑍍𑌕𑍁𑌰𑌵𑌾𑌯𑌸𑍈𑌃 ॥
𑌪𑍁𑌨𑌰𑍍𑌨 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌸𑍋𑌽𑌥 𑌜𑌨𑍍𑌮𑌕𑍋𑌟𑌿𑌶𑌤𑍈𑌰𑌪𑌿 ॥ (௧௮)

தஹ்யதேசததஃ காஷ்டைஃ தத்பஸ்மக்ரியதேக்ஷணாத்
பக்ஷ்யதேவாஸ்ருகாலேநக்ரத் ரகுக்குரவாயஸைஃ
புநர்நத்ருச்யதேஸோத ஜந்மகோடிசதைரபி

வியாக்யானம்—ததஃ - அதன் பிறகு, காஷ்டைஃ - கட்டைகளோடு தஹ்யதே - கொளுத்தப்படுகின்றது தத் - அதுவும் க்ஷணாத் - ஓர்கணத்தில், பஸ்மச - சாம்பலாயும் க்ரியதே - செய்யப்படுகின்றது. அல்லது ஸ்ருகாலேநவா - நரியாலாவது க்ரத்ர குக்குரவாயஸைஃ - கழுகு நாய் காக்கை இவைகளாலாவது, பக்ஷ்யதே - புசிக்கப்படுகின்றது, புநஃ - மறுபடியும், ஸஃ - அதே தேஹமானது ஜந்மகோடிசதைஃ அபி - நூறுகோடி ஜன்மம் எடுத்தாலும் நத்ருச்யதே - காணப்படுகின்றதில்லை.

பொழிப்புரை.—அதன் பிறகு கட்டைகளோடு கொளுத்தப்படுகின்றது. அதுவும் க்ஷணத்தில்சாம்பலாக்கப்படுகின்றது. அல்

லது நரி கழுகு நாய் காக்கை முதலியவைகளால் தின்னப்படுகின்றது. நூறு கோடி ஜந்மமெடுக்கினும் அதே தேஹம் மீண்டும் காணப்படுகின்றதில்லை.

ஸ்லோகம்.

[illegible]

மாதாபிதாகுருஜநஸ்வஸ்வஜநோமமேதி மாயோபமேஜகதிகஸ்ய பவேத் ப்ரதிஜ்ஞா
ஏகோயதொ வ்ரஜதி கர்ம புரஸ்ஸரோயம் விச்ராமவ்ருக்ஷஸத்ருசஃகலு ஜீவலோகஃ

வியாக்யானம்—மாயொபமே - இந்திரஜாலப்பொருள்களுக்குநிகராகிய, ஜகதி – (உலகில்), மம - எனது, மாதா - அன்னை, பிதா - என்து தந்தை, குருஜனஃ - எனதுபெரியோர், ஸ்வஜநஃ - எனதுபந்துஜனம், இதி - என்று, கஸ்ய - எவனுக்கு, ப்ரதிஜ்ஞா - நிச்சயம், பவேத் - ஏற்படும், யதஃ - யாதொருகாரணத்தால், அயம் - இந்த (ஜீவன்) கர்மபுரஸ்ஸரஃ - (தனது) புண்ணியபாவங்களாகிய கர்மங்களை முன்னிட்டவனாக, ஏகஃ - ஒருவனாகவே வ்ரஜதி - போகின்றானோ, ஜீவலோகஃ - இம்மனிதலோகமானது, விச்ராம விருக்ஷஸத்ருசஃ கலு - களைப்பாறுமிடமாகிய மரத்திற்கு நிகரேயன்றோ.

பொழிப்புரை.— இந்திரஜாலப்பொருள்களுக்கு நிகராயுள்ள இவ்வுலகவாழ்க்கையில் எனது தாய்தந்தை எனது குரு ஜனம் எனது பந்து என்றுநிச்சயிப்பது எப்படிக்கூடும் ஏனெனின் கர்மத்தோடுகூட தான் ஒருவனே போகும்படி ஆகின்றமையால் இம்மனிதலோகமானது களைப்பாறுதற்குச்சற்றுத்தங்குமிடமாகிய மரத்திற்குஸமானமே யன்றோ.

ஸ்லோகம்.

[illegible]

த்ருஷ்ணொ்ருந்ரு° தம்வரு௲ஷம் விஹம்ஙாயஅத்துஅஜ்ஞாதயொஜ்ஞா
தயஶ்ச ॥ (எ0)

ஸாயம்ஸாயம்வாஸவ்ருக்ஷம்ஸமேதா: ப்ராத: ப்ராதஸ்தேநதேந
ப்ரயாந்தி

த்யக்த்வாந்யோந்யம் தஞ்சவ்ருக்ஷம் விஹங்காயத்வத்தத்வஜ்ஜ
ஞாதயோ ஜ்ஞாதயஶ்ச

வியாக்யானம்—ஸாயம் ஸாயம் - மாலைதோறும் மாலைதோறும், வாஸவ்ருக்ஷம் - வஸிக்கும் மரத்தை, ஸமேதா: - சென்று அடைந்துசேர்ந்திருந்தனவாகிய, விஹங்கா: - பக்ஷிகள், யத்வத்-எப்படி ப்ராத: ப்ராத: - காலைதோறும் காலைதோறும், தஞ்ச வ்ருக்ஷம் - அம்மரத்தை த்யக்த்வா - விட்டுவிட்டு அந்யோந்யம்-ஒன்றிற்கொன்று பிரிந்து, தேநதேந - அவ்வவ்வழியோடு ப்ரயாந்தி - போய்விடுகின்றனவோ, தத்வத் - அதுபோலவே ஜ்ஞாதய-ஞாதிகளும், அஜ்ஞாதய: - ஞாதிகளல்லாதவர்களும் என்க.

பொழிப்புரை.—எப்படி மாலைதோறும் மாலைதோறும் வசிக்கும்மரத்தை யடைந்து ஒன்றுகூடிய பறவைகள் பிறகு காலைதோறும் காலைதோறும் அம்மரத்தைவிட்டு ஒன்றுக்கொன்று பிரிந்து அது வந்தவழியோடு சென்றுவிடுகின்றதோ அது போலவே ஜ்ஞாதிகளும் அஜ்ஞாதிகளும் என்றறியத்தக்கது.

ஶ்லோகம்.

ம்ருதிபீஜம்஭வெஜ்ஜந்ம ஜந்மபீஜம்஭வெந்ம்ருதி: ।
கடயந்த்ரவதஶ்ராந்தோ ஭மப்ரமீத்யநிஶம்நர: ॥ (எக)

ம்ருதிபீஜம் பவேஜ்ஜந்மஜந்மபீஜம் பவேந்ம்ருதி:
கடயந்த்ரவதச்ராந்தோ பமப்ரமீத்யநிசம்நர:

வியாக்யானம்—ஜந்ம - பிறவி, ம்ருதிபீஜம் - மரணஹேது பவேத் - ஆகும், ம்ருதி: - மரணமானது, ஜந்மபீஜம் - பிறப்புக்கு ஏது, பவேத் ஆகும், நர: - ஜீவன் கடயந்த்ரவத் — ஏற்றமரம் போல, அச்ராந்த - ஓய்வின்றி அநிசம் - இடைவிடாமல் பமப்ரமீதி - சுற்றிக்கொண்டேயிருக்கிறான்.

பொழிப்புரை.—ஜந்மம் மரணஹேதுவும் மரணம் ஜந்மஹேதுவும் ஆகின்றது ஜீவன் ஏற்றமரம் போல் ஓய்வின்றி எப்போதும் சுற்றிக்கொண்டேயிருக்கிறான்.

ஸ்லோகம்.

𑌗𑌰𑍍𑌭𑍇 𑌪𑍁𑌂𑌸𑌃 𑌶𑍁𑌕𑍍𑌰𑌪𑌾𑌤𑌾𑌤𑍍𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌂 𑌮𑌰𑌣𑌾𑌵𑌧𑌿 ।
𑌤𑌦𑍇𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌵𑍍𑌯𑌾𑌧𑍇𑌃 𑌮𑌤𑍍𑌤𑍋 𑌨𑌾𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌭𑍇𑌷𑌜𑌮𑍍 ॥ (௭௨)

கர்ப்பேபும்ஸ: சுக்ரபாதாத் யதுக்தம் மரணாவதி
ததேதஸ்ய மஹாவ்யாதே. மத்தோநாந்யோஸ்திபேஷஜம்

வியாக்யானம்—பும்ஸ: - ஜீவனுக்கு, கர்ப்பே - கர்ப்பத்தில், சுக்ரபாதாத் - சுக்லம் விழுந்தது முதல், மரணாவதி - மரணம் வரையில், யத் - யாதொன்று உக்தம் - சொல்லப்பட்டதோ, தத ஏதஸ்ய - அந்த இந்த மஹாவ்யாதே - பெரும் பிணிக்கு, பேஷஜம் - மருந்து, மத்த: - என்னிலும், அந்ய: - அந்நியன் நாஸ்தி - இல்லை.

பொழிப்புரை.—ஜீவனுக்குக் கர்ப்பத்தில் சுக்கிலம்சேர்ந்தது முதல் மரணம் வரையில் யாதொன்று சொல்லப்பட்டதோ அவ்விந்தபெரும்பிணிக்கு மருந்து என்னிலும் அந்நியன் இல்லை.

## எட்டாவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## தேஹஸ்வரூப நிரூபணமெனும்.

## ஒன்பதாவது அத்தியாயம்.

ஸ்லோகம்.

𑌦𑍇𑌹𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌶𑍃𑌣𑍁𑌷𑍍𑌵𑌾𑌵𑌹𑌿𑌤𑍋 𑌨𑍃𑌪 ।
𑌮𑌤𑍍𑌤𑍋 𑌹𑌿 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌮𑌯𑍈𑌵𑍈𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌧𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 । (௧)

தேஹஸ்வரூபம் வக்ஷ்யாமிச்ருணுஷ்வாவஹிதோந்ருப
மத்தோ ஹிஜாயதே விச்வம் மய்யேவைதத்ப்ரதார்யதே

வியாக்யானம்.— ந்ருப - ஓ அரசனே தேஹஸ்வரூபம் - தேஹஸ்வரூபத்தை, வக்ஷ்யாமி - சொல்லுகிறேன், அவஹித: - ஸாவதானமனதோடிருந்து, ச்ருணுஷ்வ- கேட்பாயாக, விச்வம்- எல்லாம் பிரபஞ்சம் மத்த: ஹி - என்னிடமிருந்தே ஜாயதே -

உண்டாகின்றது. மயி ஏவ - என்னிடமே, ஏதத் - இது ப்ரதார்யதே - நிலைபெறுகின்றது.

பொழிப்புரை.— ஓ அரசனே தேஹஸ்வரூபத்தைச் சொல்லுகின்றேன் ஸாவதானமனதோடு கேட்பாயாக என்னிடமிருந்தே ஸகல சராசரமும் தோன்றுகின்றது என்னிடமே இதுநிலைபெறுகின்றது.

ஸ்லோகம்.

𑌮𑌯𑍍𑌯𑍇𑌵𑍇𑌦𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑍇 𑌲𑍀𑌯𑌤𑍇 𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑍍𑌯𑌵𑌤𑍍 ।
𑌅𑌹𑌂𑌤𑍁𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌃 𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥ (௨)

மய்யே வேதமதிஷ்டானே லீயதெ சுக்திரூப்யவத்
அஹம்துநிர்மலஃ பூர்ணஃ ஸச்சிதாநந்தவிக்ரஹஃ

வியாக்யானம்—இதம் - பிரபஞ்சமானது, சுக்திரூப்யவத் - இப்பியில்வெள்ளிபோல, அதிஷ்டானே - அதிஷ்டானமாகிய, மயிஏவ - என்னிடமே, லீயதே - ஒடுங்குகின்றது, அஹம்து - யானோவெனின், நிர்ம்மலஃ - நிர்ம்மலனும் பூர்ணஃ - பரிபூர்ணனும் ஸச்சிதாநந்தவிக்ரஹஃ - ஸச்சிதாநந்தஸ்வரூபனுமா யிருக்கின்றவன்.

பொழிப்புரை— இப்பிரபஞ்சமானது. இப்பியில் வெள்ளிபோல அதிஷ்டானமாகிய என்னிடமே ஒடுங்குகின்றது யானோவெனின் நிர்ம்மலனும் பூர்ணனும் ஸச்சிதாநந்தஸ்வரூபனுமானவன்.

ஸ்லோகம்.

𑌅𑌸𑌂𑌗𑍋𑌨𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 𑌶𑍁𑌦𑍍𑌧𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑌨𑌾𑌤𑌨𑌂 ।
𑌅𑌨𑌾𑌦𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑌨𑍍 𑌜𑌗𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑌤𑌾𑌂𑌵𑍍𑌰𑌜𑍇 ॥ (௩)

அஸங்கோநிரஹங்காரஃ சுத்தம் ப்ரஹ்மஸநாதநம்
அநாத்யவித்யாயுக்தஸ்ஸந்ஜகத்காரணதாம்வ்ரஜே

வியாக்யானம்.—அஸங்கஃ - ஸம்பந்தமில்லாதவன் நிரஹங்காரஃ - அஹங்காரமில்லாதவன், ஸநாதநம் - எப்போதுமுள்ளதாகிய சுத்தம் - மாயையின் கலப்பற்ற ப்ரும்மம் - ப்ரும்ம

அநாத்வித்யாயுக்த:ஸந் - அநாதியாகிய அவித்தையோடுகூடியவனைக்கொண்டு, ஜகத்காரணதாம் - ஜகங்களுக்குக்காரணமாயிருத்தலை, வ்ரஜே - அடைகின்றேன்.

பொழிப்புரை.— ஸம்பந்தமில்லாதவனும் அஹங்காரமில்லாதவனும் எப்போதும் உள்ளப்ருஹ்மமாயுமுள்ளநான் அநாதியாயுள்ள அவித்தையோடுகூடியவனைக்கொண்டு ஜகத்காரணனாகின்றேன்.

ஶ்லோகம்.

𑌅𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌚𑍍𑌯𑌾 𑌮𑌹𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌤𑍍𑌰𑌿𑌗𑍁𑌣𑌾 𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌿𑌨𑍀 ।
𑌰𑌜𑌸𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌤𑌮𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌤𑌦𑍍𑌗𑍁𑌣𑌾𑌃 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃 ॥ (௪)

அநிர்வாச்யாமஹாவித்யாத்ரிகுணபரிணாமிநீ
ரஜஸ்ஸத்வம்தமஶ்சேதிதத்குண: பரிகீர்த்திதா:

வியாக்யானம்—அநிர்வாச்யா - துணிந்தோதமுடியாததாகிய மஹாவித்யா - மஹத்தாகிய அவித்தையானது, த்ரிகுணா - முக்குணமுடையதும் பரிணாமிநீ - பரிணமிக்கின்றதுமாயுள்ளது தத்குணா: - அதன்குணங்கள், ரஜஸ் - ரஜஸ் ஸத்வம் - ஸத்துவம், தமச் ச இதி - தமஸ் என்று, பரிகீர்த்திதா: - சொல்லப்பட்டன.

பொழிப்புரை—துணிந்தோதமுடியாத அந்த அவித்தையானது முக்குணமுடையதும் பரிணமிக்கின்றதுமானது. அதன் குணங்கள் ரஜஸ் ஸத்துவம் தமஸ் என்று சொல்லப்பட்டன.

ஶ்லோகம்

𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌶𑍁𑌕𑍍𑌲𑌂 𑌸𑌮𑌾𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌸𑍁𑌖𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌸𑍍𑌪𑌦𑌂 𑌨𑍃𑌣𑌾𑌂 ।
𑌦𑍁𑌃𑌖𑌾𑌸𑍍𑌪𑌦𑌂 𑌰𑌕𑍍𑌤𑌵𑌰𑍍𑌣𑌂 𑌚𑌂𑌚𑌲𑌂 𑌚 𑌰𑌜𑍋𑌮𑌤𑌂 ॥ (௫)

ஸத்வம் சுக்லம் ஸமாதிஷ்டம் ஸுகஜ்ஞாநாஸ்பதம்ந்ருணாம்
து:க்காஸ்பதம் ரக்தவர்ணம்சஞ்சலஞ்சரஜோமதம்

வியாக்யானம்.—ஸத்வம் - ஸத்துவமானது, சுக்லம் - வெண்ணிறமானது என்று ஸமாதிஷ்டம் - சொல்லப்பட்டது ந்ருணாம் - மனிதர்களுக்கு ஸுகஞானங்களுக்கிடமாயுள்ளது ரஜ: - ரஜோகுணமானது து:க்காஸ்பதம் - துக்கத்திற்கிடமாயும் ரக்தவர்

ணம் - செந்நிறமுடையதும், சஞ்சலம் - சலித்துக்கொண்டே இருப்பதும் என்று மதம் - சொல்லப்பட்டது.

பொழிப்புரை—ஸத்துவமானது வெண்ணிறமுள்ளது என்றும் மனிதர்களுக்கு ஸுகஞானங்களுக்கிடமாயுள்ளதென்றும் சொல்லப்பட்டது. ரஜோகுணமானது துக்கத்திற்கிடமும் செந்நிறமுடையதும் சஞ்சலமாயுள்ளதுமானது என்று சொல்லப்பட்டது.

ஸ்லோகம்

𑌤𑌮𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌂 𑌜𑌡𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑌂 𑌸𑍁𑌖𑌾𑌦𑌿𑌷𑍁 ।
𑌅𑌤𑍋 𑌮𑌮 𑌸𑌮𑌾𑌯𑍋𑌗𑌾𑌤𑍍 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌤𑍍𑌰𑌿𑌗𑍁𑌣𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 ॥
𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑍇 𑌚 𑌮𑌯𑍍𑌯𑍇𑌵 𑌭𑌜𑌤𑍇 𑌵𑌿𑌶𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌾𑌂 ।
𑌶𑍁𑌕𑍍𑌤𑍌 𑌰𑌜𑌤𑌵𑌦𑍍𑌰𑌜𑍍𑌜𑍌 𑌭𑍁𑌜𑌂𑌗𑍋 𑌯𑌦𑍍𑌵𑌦𑍇𑌵 𑌤𑍁 । (எ)

தம:க்ருஷ்ணம் ஜடம்ப்ரோக்தம் உதாஸீநம்ஸுகாதிஷு
அதோமமஸமாயோகாத் சக்தி:ஸாத்ரிகுணாத்மிகா
அதிஷ்டானேசமய்யேவ பஜதேவிச்வரூபதாம்
சுக்தௌ ரஜதவத்ரஜ்ஜௌ புஜங்கோயத்வதேவது

வியாக்யானம்—தம: - தமோகுணமானது க்ருஷ்ணம் - கருநிறமானது, ஜடம் - அசேதனமானது, ப்ரோக்தம் - என்றுசொல்லப்பட்டது (சிறிதும்பிரகாசமில்லாதது) ஸுகாதிஷு - ஸுகம்முதலியவைகளில் உதாஸீநம் - உதாஸீனமாயுள்ளது அத: - ஆதலால் மம - எனது ஸமாயோகாத் - சேர்க்கையால் த்ரிகுணாத்மிகா - முக்குணஸ்வரூபமாகிய ஸா - அந்த சக்தி: - மாயாசக்தியானது அதிஷ்டானே - அதிஷ்டானமாகிய. மயி ஏவ-என்னிடத்திலேயே சுக்தௌ - இப்பியில், ரஜதவத் வெள்ளிபோலும் ரஜ்ஜௌ - கயிற்றின், புஜங்க - ஸர்ப்பமானது, யத்வத் ஏவது- போலவேயும் விஸ்வபாவதாம் - பிரபஞ்சபாவத்தன்மையை பஜதே - அடைகின்றது.

பொழிப்புரை—தமோகுணமானது கருநிறமுடையது. ஜடம் ஸுகாதிகளில் உதாஸீனமாயுள்ளது என்றும்சொல்லப்பட்டது. ஆதலால் எனது சேர்க்கையால், முக்குணஸ்வரூபமாகிய அந்த சக்தியானது அதிஷ்டானமாகிய என்னிடமே இப்பியில் வெள்

ளிபோலும் கயிற்றினில் அரவம்போலும் பிரபஞ்சமாகும்தன்மை யைப்பெறுகின்றது.

ஸ்லோகம்.

ஆகாசாதீநி ஜாயந்தேமத்தோபூதாநிமாயயா ।
தைராரப்தமிதம் ஸர்வம்தேஹோயம்பாஞ்சபௌதிக: ॥ (அ)

ஆகாசாதீநி ஜாயந்தேமத்தோபூதாநிமாயயா।
தைராரப்தமிதம் ஸர்வம்தேஹோயம் பாஞ்சபௌதிக:

வியாக்யானம்—மத்த: என்னிடமிருந்து மாயயா - மாயை யால், ஆகாசாதீநி - ஆகாயம்முதலியனவாகிய பூதாநி - பூதங்கள் ஜாயந்தே - உண்டாகின்றன. தை: - அப்பூதங்களால் இதம் ஸர்வம் - இவ்வெல்லாம், ஆரப்தம் - உண்டாயின, அயம் - இந்த தேஹ: - தேஹமானது, பாஞ்சபௌதிக: - பஞ்சபூதங்களால் உண்டாயினது.

பொழிப்புரை—என்னிடமிருந்து மாயையால் ஆகாயம்முத லிய பூதங்கள் உண்டாகின்றன அப்பூதங்களாலேயே பிரபஞ்சம் உண்டாயிற்று. இத்தேஹம் ஐம்பூதங்களாலேயே உண்டானது.

ஸ்லோகம்

பித்ருப்யாமசிதாதந்நாத் ஷட்கோசம் ஜாயதேவபு: ।
ஸ்நாயவோஸ்தீநி மஜ்ஜாச ஜாயந்தே பித்ருதஸ்ததா ॥ (கூ)

பித்ருப்யாமசிதாதந்நாத் ஷட்கோசம் ஜாயதேவபு:
ஸ்நாயவோஸ்தீநி மஜ்ஜாச ஜாயந்தே பித்ருதஸ்ததா

வியாக்யானம்—பித்ருப்யாம் - தாய்தந்தையர்களால் அசிதாத் - புசிக்கப்பட்ட அந்நாத் - ஆகாரத்தால் ஷட்கோசம் - ஆறுகோசமாயுள்ளதாகிய வபு: - தேஹமானது ஜாயதே - உண் டாகின்றது ஸ்நாயவ: - சிறுநரம்புகள் அஸ்தீநி - எலும்புகள் மஜ்ஜாச - மஜ்ஜை என்னும் எலும்புநரம்புகளினுள்ளகசிவு இவை கள் பித்ருத: - தந்தையினிடமிருந்து. ஜாயந்தே - உண்டாகின் றன.

பொழிப்புரை—தாய் தந்தையர்களால் புசிக்கப்பட்ட அன்னத்தால் ஆறுகோசமாகிய தேஹம் உண்டாகின்றது. சிறு நரம்பு எலும்பு மஜ்ஜை இவைகள் தந்தையினிடமிருந்தாகும் அம்சங்கள்.

ஸ்லோகம்

𑌤𑍍𑌵𑌙𑍍𑌮𑌾𑌂𑌸𑌶𑍋𑌣𑌿𑌤𑌮𑌿𑌤𑌿 𑌮𑌾𑌤𑍃𑌤𑌶𑍍𑌚 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿𑌹𑌿 ।
𑌭𑌾𑌵𑌾𑌸𑍍𑌸𑍍𑌯𑍁𑌃 𑌷𑌡𑍍𑌵𑌿𑌧𑌾𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑌾𑌤𑍃𑌜𑌾𑌃 𑌪𑌿𑌤𑍃𑌜𑌾𑌸𑍍𑌤𑌥𑌾 ॥ (௧௦)

*த்வங்மாம்ஸசோணிதமிதிமாத்ருதஸ்ச பவந்திஹி*
*பாவாஸ்ஸ்யு: ஷட்விதாஸ்தஸ்யமாத்ருஜா: பித்ருஜாஸ்ததா*

வியாக்யானம்— *த்வங்மாம்ஸசோணிதம் இதி - த்வக்கு மாம்ஸம் ரக்தம் எனும் இவைகள் மாத்ருத:ச - அன்னையினிடமிருந்து, பவந்திஹி - உண்டாகின்றனவன்றோ, தஸ்ய - சரீரத்திற்கு மாத்ருஜா: - அன்னையினிடமிருந்து உண்டாவனவும் ததா பித்ருஜா: தந்தையினிடமிருந்துண்டாவனவுமாகிய பாவா: - பாவங்கள் ஷட்விதா:, ஸ்யு: - ஆறுவிதங்களாகும்.*

பொழிப்புரை—*த்வக்கு மாம்ஸம் ரக்தம் இவைகள் அன்னையினிடமிருந்துண்டாவனவன்றோ தேஹத்திற்குத் தாய்தந்தையரிடம் உண்டாகும் தாதுக்கள் அறுவகையாகும்.*

ஸ்லோகம்

𑌰𑌸𑌜𑌾 𑌆𑌤𑍍𑌮𑌜𑌾𑌸𑍍𑌸𑌪𑍍𑌤 𑌸𑌂𑌭𑍂𑌤𑌾𑌸𑍍𑌸𑌾𑌤𑍍𑌮𑌜𑌾𑌸𑍍𑌤𑌥𑌾 ।

*ரஸஜா ஆத்மஜாஸ்ஸப்தஸம்பூதாஸ்ஸாத்மஜாஸ்ததா*

வியாக்யானம்:—*ரஸஜா: - (பின்சொல்லப்படுகின்றனவாகிய) ரஸஜங்களாகிய ஸப்த - ஏழும், ஆத்மஜா:- (ஆத்மஜங்களென) பின்சொல்லப்படுகின்றனவாகிய ஏழும் ததா - அங்ஙனமே ஸ்வாத்மஜா: - ஸ்வாத்மஜங்களென்னப்படுவனவும் ஸம்பூதா: - கூடியனவாகின்றன.*

பொழிப்புரை:—*ரஸஜங்களெனப் பின்சொல்லப்படுகின்றனவாகிய ஏழும் ஆத்மஜங்களென்னப்படுவனவாகிய ஏழும் அங்ஙனமே ஸ்வாத்மஜங்களென்னப்படுவனவும் கூடியனவாகின்றன.*

ஶ்லோகம்.

[illegible]
[illegible] (கக)

ம்ருதவ: சோணிதம் மேதோமஜ்ஜாப்லீஹாயக்ருத்குதம்
ஹ்ருந்நாபீத்யேவமாத்யா: ஸ்யு: பாவாமாத்ருபவாமதா:

வியாக்யானம்—சோணிதம் - ரக்தம், மேத: - ஹ்ருதயத்தி லுள்ளமாம்ஸவிசேஷம் மஜ்ஜா - எலும்புநரம்புகளில்நிகழும்கசிவு ப்லீஹா-குல்மம்-என்னப்படும் வயிற்றின் இடப்பக்கத்தில் உள்ள மாம்ஸம் யக்ருத்-காலகண்டமென்னப்படுவது வயிற்றின்வலப்பக் கத்திலுள்ளமாம்ஸம், குதம்-அபானம், ஹ்ருத்- மார்பினின்தாம ரைபோன்றுள்ளஹ்ருதயம் நாபீ - தொப்புள், இதிஏவ மாத்யா:- எனும் இவைமுதலிய, ம்ருதவ: - மிருதுவாயுள்ள, பாவா: - பாவ ங்கள், மாத்ரு பவா: - அன்னையினிடமிருந்துண்டாவன என்று மதா: - சொல்லப்படுவன.

பொழிப்புரை—ரத்தம், மேதஸ், மஜ்ஜை, ப்லீஹா, யக்ருத், குதம், ஹ்ருத், நாபீ, இவைமுதலிய மிருதுவாகியபாவங்கள் அன்னையிட மிருந்துண்டாவன என்பதாம்.

ஶ்லோகம்

[illegible]
[illegible] (கஉ)

ச்மச்ருரோமகசஸ்நாயுஸிராதமநயோநகா:
தசநா: சுக்ரமித்யாதிஸ்திரா: பித்ருஸமுத்பவா:

வியாக்யானம்—ச்மச்ரு (முகத்திலுள்ளரோமம்) மீசை ரோம - ரோமம் (மற்றஇடங்களிலுள்ளரோமம்) கச: - தலையிலு ள்ளனவாகிய கேசங்கள், ஸ்நாயு - வஸை எனும் தாதுவிசேஷம் ஸிராதமநய: - ஸூக்ஷ்ம ஸ்தூலநாடிகள் நகா: - நகங்கள், தச னா: - பற்கள் சுக்ரம் - ரேதஸ் இத்யாதிஸ்திரா: - இது முதலிய ஸ்திரமாகிய அம்சங்கள் பித்ருஸமுத்பவா: - தந்தையினிடமுண் டாவன.

பொழிப்புரை—மீசை ரோமம் கேசம் வஸை ஸூக்ஷ்மஸ்தூல நாடிகள் நகம் பல் சுக்லம் இதுமுதலியனவாகிய அம்சங்கள் தந்தையினிடமுண்டாவன.

ஸ்லோகம்.

ஶரீரோபசிதிர்வர்ணோ வ்ருத்திஸ்த்ருப்திர்பலம்ஸ்திதி: ॥
அலோலுபத்வம் உத்ஸாஹ இத்யாதீந்ரஸஜாந்விது: (கரு)

சரீரோபசிதிர்வர்ணோ வ்ருத்திஸ்த்ருப்திர்பலம்ஸ்திதி:
அலோலுபத்வம் உத்ஸாஹ: இத்யாதீந்ரஸஜாந்விது:

வியாக்யானம்:—சரீரோபசிதி:- சரீரஉற்பத்திகாலத்தில் உள்ளபருமன், வர்ண: - நிறம், வ்ருத்தி: - க்ரமமாய்வளருதல், த்ருப்தி: - பூரிப்பு, பலம் - வலிமை, ஸ்திதி: - அவயவங்களின் உறுத்தன்மை அலோலுபத்வம் - க்ருபணத்தன்மையின்மை, உத்ஸாஹ: - உற்சாகம், இத்யாதீந் - இது முதலியவைகளை, ரஸஜாந் - தாதுவிசேஷத்தாலுண்டாயின என்று, விது: - அறிகின்றனர்.

பொழிப்புரை— உற்பத்திகாலத்திலுள்ள பெருமன் நிறம் வளருதல் பூரிப்பு வலிமை அவயங்களின் உறுதித்தன்மை, க்ருபணத்தன்மையின்மை, உற்சாகம் இவை முதலிய தாது விசேஷத்தால் உண்டாவன என்பதாம்.

ஸ்லோகம்

இச்சாத்வேஷஸ்ஸுகம்துக்கம் தர்மாதர்மௌ சபாவநா ॥
ப்ரயத்நோ ஜ்ஞாநமாயுஶ்சேந்த்ரியாணீத்யேவமாத்மஜா:। (கச)

இச்சாத்வேஷஸ்ஸுகம்துக்கம் தர்மாதர்மௌ சபாவநா
ப்ரயத்நோ ஜ்ஞாநமாயு: சேந்த்ரியாணித்யேவமாத்மஜா:

வியாக்யானம்:—இச்சா - விருப்பம், த்வேஷ: - வெறுப்பு, ஸுகம் - ஸுகம், துக்கம் - துக்கம் தர்மாதர்மௌ - புண்ணியபாவங்கள் பாவநா - ஸ்மரணஹேதுவாகிய ஸம்ஸ்காரம் ப்ரயத்ந:- முயற்சி ஜ்ஞாநம் - அறிவு, ஆயு: - ஆயுள், இந்திரியாணி - இந்திரியவ்யாபாரம் இத்யேவம்-இவைமுதலியன, ஆத்மஜா: - ஜீவனால் உண்டாவன.

பொழிப்புரை:— இச்சை, த்வேஷம், ஸுகம், துக்கம், புண்ணியபாவங்கள் பாவனை முயற்சி ஞானம் ஆயுள் இந்திரியவியாபாரம் இவமுதலியன ஜீவனால் ஏற்படுவன.

ஶ்லோகம்

ஜ்ஞாநேந்த்ரியாணி ஶ்ரவணம் ஸ்பர்ஶநம் தர்ஶநம் ததா ॥
ரஸநம் க்ராணமித்யாஹு: பஞ்ச தேஷாம் ச கோசரா: ।
ஶப்த: ஸ்பர்ஶஸ்ததா ரூபம் ரஸோ கந்த இதி க்ரமாத் ॥ (கரு)

ஞாநேந்திரியாணிஶ்ரவணம் ஸ்பர்சனம் தர்சனம் ததா
ரஸநம் க்ராணமித்யாஹு: பஞ்சதேஷாம் சகோசரா:
சப்த: ஸ்பர்சஸ்ததாரூபம்ரஸோகந்த இதிக்ரமாத்

வியாக்யானம்:—ஞானேந்த்ரியாணி - ஞாநேந்த்ரியங்கள், ச்ரவணம் - காது, ஸ்பர்சநம் - தொக்கு, தர்சநம் - கண், ரஸநம் - நாவு, க்ராணம் - மூக்கு, இதி - என்று, பஞ்ச - ஐந்துஎன்றும், ஆஹு: - சொல்லுகின்றனர். தேஷாம் - அவைகளின் கோசரா:ச - விஷயங்களும், க்ரமாத் - முறையே, சப்த:-சப்தம் ஸ்பர்ச: - ஸ்பர்சம், ரூபம் - உருவம், ரஸ: - ரஸம், (சுவை) கந்த: - வாஸனை, இதி - என்று சொல்லப்படுகின்றன.

பொழிப்புரை—ஞானேந்திரியங்கள் காது தோக்குகண் நாவு மூக்கு என்று ஐந்துள்ளன. அவைகளின் விஷயங்களுமுறையே சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் என்று சொல்லப்படுகின்றன

ஶ்லோகம்

வாக்கராங்க்ரிகுதோபஸ்தாந்யாஹு: கர்மேந்த்ரியாணி ஹி ।
வசநாதாநகமநவிஸர்கரதய: க்ரமாத் ॥
கர்மேந்த்ரியாணாம் ஜாநீயாந்மநோதேவோபயாத்மகம் ।
க்ரியாஶேஷாந்தேநாஸௌ ஸர்வஹ்ருதயாகாரவ்ருத: பரம் ।
ஸூத: கரணமித்யாஹு: ஸூத்ரம் வேதவிசக்ஷண:॥ (கஅ)

வாக்கராங்க்ரிகுதோபஸ்தாந்யாஹு: கர்மேந்த்ரியாணிஹி
வசநாதாநகமநவிஸர்கரதய: க்ரமாத்

கர்மேந்த்ரியாணும் ஜாநீயாந்மநஸ்சைவோபயாத்மகம்
க்ரியாஸ்தேஷாம் மநோபுத்தி ரஹங்காரஸ் ததः பரம்
அந்தः கரணமித்யாஹுः சித்தம் சேதிசதுஷ்டயம்

வியாக்யானம்:—வாக்கராங்க்ரிகுதோபஸ்தாநி - வார்த்தை (வாக்)பாணி பாதம் அபானவாய் குஹ்யம் இவைகள் கர்மேந்த்ரியாணி - கர்மேந்திரியங்களென்று விதுः - என்றறிந்தனர் தேஷாம், கர்மேந்த்ரியாணும் - கர்மேந்திரியங்களின் க்ரியாः - கிரியைகள், க்ரமாத் - முறையே, வசனதானகமநவிஸர்க்கரதயः-வசநம், வாங்குதல், போதல், விடுதல், ஆனந்தித்தல் இவைகள் என்று ஜாநீயாத் - அறிக மநः -மனமானது உபயாத்மகம்-இருவகையிந்திரியங்களோடு விஷயங்களில் பிரவர்த்திக்கின்றது, மநः - மனம், புத்திः - புத்தி அஹங்காரம் - அஹங்காரம், சித்தம் - சித்தம், இதி - என்று சதுஷ்டயம் - நான்கும் அந்தः - கரணம், இதி - அந்தக்கரணமென்று, ஆஹுः - சொல்லுகின்றனர்.

பொழிப்புரை—வாக்கு பாணி பாதம் குஹ்யம் குதம் இவை கர்மேந்திரியங்களென்னப்படுவதாம். அந்தக்கர்மேந்திரியங்களின் கிரியைகள் முறையே, வகனம் பெற்றுக்கொள்ளுதல் போதல் விடுதல் ஸுகித்தல் எனும் இவைகளாம். மனமானது ஞானகர்மேந்திரியங்களோடு கலந்து பிரவர்த்திக்கின்றதாம். மனோ புத்தி சித்தாஹங்காரம் எனும் இந்நான்கும் அந்தக்கரணம் என்னப்படும்.

ஶ்லோகம்

ஸுவஂஃஃவஂவவிஷயௗவிஜ்ஞேயௗஉநஸஃக்ரியாः ।
ஸ்ம்ருதிஸீதிவிகல்பாத்யா பு‍த்திஸ்யாந்நிஶ்சயாத்மிகா ॥
அஹஂமமேத்யஹஂகாரஶ்சித்தஂசேதயதேயதः ।
ஸத்வாக்யமந்தःகரணஂ குணபேதாத்த்ரிதாமதஂ ॥　(உ0)

ஸுகம்துக்கம் சவிஷயௌ வஜ்ஞேயௌமநஸःக்ரியாः
ஸ்ம்ருதி பீதி விகல்பாத்யா புத்திஸ்யாந்நிஶ்சயாத்மிகா
அஹம்மமேத்யஹங்காரः சித்தம் சேதயதேயதः
ஸத்வாக்யமந்தःகரணம் குணபேதாத்த்ரிதாமதம்

வியாக்யானம்—மநஸ: - மனஸிற்கு, ஸுகம் - ஸுகமும், துக்கம்ச - துக்கமும், விஷயௌ - விஷயங்களென்று, விஜ்ஞேயௌ - அறியத்தக்கவைகளாம், க்ரியா: - கிரியைகள் ஸ்ம்ருதிபீதிவிகல்பாத்யா: - நினைவு பயம் விகல்பம் முதலியனவாம், புத்தி: - புத்தியானது நிஸ்சயாத்மிகா - நிச்சயவடிவமாம், அஹம்மம, - யான் எனது, இதி - எனது, அஹங்கார: - அஹங்காரமாம், யத [illegible] யாதொருகாரணத்தில் சேதயதே - சிந்திக்கச்செய்கின்றதோ [illegible] ஆதலால் சித்தம் - சித்தமென்பதாம், ஸத்வாக்யம் - ஸத்துவமென்னப்படும், அந்த:கரணம் - அந்த:கரணமானது குணபேதத: - குணபேதத்தால் த்ரிதா - மூவ்வகையாய் மதம் - கொள்ளப்பட்டது.

பொழிப்புரை—மனஸிற்கு ஸுகதுக்கங்கள் விஷயங்களாம். கிரியைகள் நினைவுபயம் விகல்பம் முதலியனவாம். புத்தியானது நிச்சயவடிவமாம். யான் எனது என்பது அஹங்காரமாம். சிந்திக்கின்றமையால் சித்தம் என்பதாம். ஸத்துவமென்னப்படும் அந்தக்கரணம் குணபேதத்தால் மூவகையாயுள்ளது.

ஸ்லோகம்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible] (௨௨)

ஸத்வம ரஜஸ்தம இதிகுணஸ்ஸத்வாத்துஸாத்விகா:
ஆஸ்திக்யசுத்திதர்மைக்ருசிப்ரப்ருதயோமதா:
ரஜஸோராஜஸாபாவா: காமக்ரோதமதாதய:
நித்ராலஸ்ய ப்ரமாதாதிவஞ்சநாத்யாஸ்து தாமஸா:

வியாக்யானம்:—ஸத்வம், ரஜஸ், தம:, இதி, - ஸத்வம் ரஜஸ் தமஸ் என்று, குண: - குணங்களாம் ஸத்வாத்து - ஸத்துவத்தினால் (நிகழ்வனவாகிய) ஆஸ்திக்ய சுத்தி தர்மைகருசிப்ரப்ருதய:- ஆஸ்திகத்துவம் சௌசம் தர்மத்திலேயே பிரியம் முதலியன ஸாத்விகா: - ஸாத்விகங்களாம் ரஜஸ: - ரஜஸினால் காமக்ரோத

மதாதய: - காமக்ரோதமதங்கள் முதலியனவாகிய ராஜஸா: - ராஜஸங்களாகிய பாவா: - தன்மைகளாம் நித்ராவஸ்யப்ரமாதாதிவஞ்சனுத்யா: - நித்திரை சோம்பல் அஜாக்கிரதை வஞ்சனை முதலியன. தாமஸா:- தாமஸ (தமோகுணத்தாலாகிய) தன்மைகளாம்.

பொழிப்புரை:—ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்று குணங்களாம், ஸத்துவகுணத்தால் ஏற்படுவன ஆஸ்திக்கியம் சௌசம் தர்மசிந்தனை முதலியனவாகிய ஸாத்துவிகந்தன்மைகளாம். ரஜஸினல் காமக்ரோதமதம் முதலியனவாகிய ராஜஸத்தன்மைகள் ஏற்படுவனவாம். தமோகுணத்தால் நித்திரை சோம்பல் அஜாக்கிறதை வஞ்சனை முதலியனவாகிய தாமஸத்தன்மைகள் ஏற்படுவனவாம்.

ஸ்லோகம்.

𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌤𑌾𑌰𑍋𑌗𑍍𑌯𑌾𑌨𑌾𑌲𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑌾𑌃 ।
𑌦𑍇𑌹𑍋 𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌕𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌧𑌤𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌗𑍁𑌣𑌾𑌨𑌿𑌮𑌾𑌨𑍍 ॥ (௨௫)

ப்ரஸந்நேந்த்ரியதாரோக்யாநாலஸ்யாத்யாஸ்து ஸத்வஜா:
தேஹோமாத்ராத்மகஸ்தஸ்மாதாதத்தே தத்குணுநிமாந்

வியாக்யானம்—ப்ரஸந்நேந்த்ரியதா - இந்திரியங்கள் தெளிவுற்றிருத்தல் ரோகமின்மை சோம்பலின்மைமுதலியன ஸத்வஜா: - ஸத்துவகுணத்தினல் உண்டாவன தேஹ: - தேஹமானது மாத்ராத்மக: - பஞ்சபூதங்களின் அம்சஙகளாலுண்டானது தஸ்மாத் - ஆதலால், தத்குணுந் — அவைகளின் குணங்களாகிய இமாந் - இவைகளை ஆதத்தே - பெறுகின்றது.

பொழிப்புரை:— இந்திரியசுத்திரோகமின்மை சோம்பலின்மை முதலியன ஸத்துவத்தின் காரியங்கள். தேஹமானது பஞ்சபூதங்களின் அம்சங்களாலுண்டானதாதலின் அக்குணகாரியங்களாகிய இவைகளைப் பெறுகின்றது.

ஸ்லோகம்.

𑌶𑌬𑍍𑌦𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌸𑍁𑌷𑌿𑌰𑌤𑌾 𑌵𑍈𑌵𑌿𑌕𑍍𑌤𑍍𑌯𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌬𑍋𑌧𑌤𑌾 ।
𑌬𑌲𑌂𑌚𑌮𑌨𑌾𑌕𑌾𑌯𑍋𑌃 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌃 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 ॥

𑌉𑌤𑍍𑌕𑍍𑌷𑍇𑌪𑌣𑌮𑌪𑌕𑍍𑌷𑍇𑌪𑌾𑌕𑍁𑌞𑍍𑌚𑌨𑍇 𑌗𑌮𑌨𑌂 𑌤𑌥𑌾 ।
𑌪𑍍𑌰𑌸𑌾𑌰𑌣𑌮𑌿𑌤𑍀𑌮𑌾𑌨𑌿 𑌪𑌞𑍍𑌚𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌰𑍂𑌕𑍍𑌷𑌤𑌾 ॥
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑍌 𑌤𑌥𑌾 𑌵𑍍𑌯𑌾𑌨𑌸𑌮𑌾𑌨𑍋𑌦𑌾𑌨𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑌾𑌨𑍍 ।
𑌨𑌾𑌗𑌂 𑌕𑍂𑌰𑍍𑌮𑌂 𑌚 𑌕𑍃𑌕𑌰𑌂 𑌦𑍇𑌵𑌦𑌤𑍍𑌤𑌂 𑌧𑌨𑌂𑌜𑌯𑌂 ॥ (௨௬)
𑌦𑌶𑍈𑌤𑌾 𑌵𑌾𑌯𑍁𑌵𑌿𑌕𑍃𑌤𑍀𑌸𑍍𑌤𑌥𑌾 𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌲𑌾𑌘𑌵𑌂 ॥

ஶப்தஶ்ஶ்ரோத்ரம் முகரதாவைசித்ர்யம்ஸௌக்ஷ்மதா த்ருதி꞉
பலம்சககநாத்வாயோ꞉ ஸ்பர்ஶஸ்ச ஸ்பர்ஶநேந்த்ரியம்
உத்க்ஷேபணமபக்ஷேபாகுஞ்சநேகமநம் ததா
ப்ரஸாரணமிதீமாநி பஞ்சகர்மாணி ரூக்ஷதா
ப்ராணாபாநௌ ததாவ்யாநஸமாநோதாநஸம்ஜ்ஞகாந்
நாகம் கூர்மம்ச க்ருகரம் தேவதத்தம் தநம் ஜயம்
தஶைதாவாயு விக்ருதிஸ்ததா க்ருஹ்ணாதிலாகவம்

வியாக்யானம்:—சப்த꞉ – சப்தம், ச்ரோத்ரம் – ச்ரோத்ரேந்திரியம் முகரதா வைசித்ரியம் - பேசுந்தன்மையின்விசேஷம் ஸௌக்ஷ்மதா - ஸௌக்ஷ்மத்துவம், த்ருதி꞉ - தைர்யம் பலம் ச - பலமெனும் குணங்கள் ககநாத் - ஆகாயத்திலிருந்து பெறப்பட்டன. வாயோ꞉ - வாயுவினின்றும் ஸ்பர்ச꞉ - பரிசம், ஸ்பர்சநேந்த்ரியம் - தொக்கிந்திரியம் உத்க்ஷேபணம் - உயரக்கிளம்புதல் அபக்ஷேபாகுஞ்சநே - கீழிறங்குதல் குறுக்குப்பாய்தல், கமநம் - செல்லுதல் ப்ரஸாரணம் - பரவுதல், இதி - என்று இமாநி - இந்த பஞ்சகர்மாணி - ஐந்துகர்மங்களையும், ரூக்ஷதா - கடினத்தன்மை, ப்ராணுபாநௌ - ப்ராணுபானன் இவைகளையும் வ்யாநஸமாநொதாநஸம்ஞ்ஞகாந் - வியானஸமான உதான என்பவைகளையும் நாகம் - நாகனையும் கூர்மம் - கூர்மனையும் க்ருகரம் - க்ருகானையும் தேவதத்தம் - தேவதத்தனையும் தனஞ்ஜயம் - தனஞ்யஜனையும் ஆகிய ஏதா꞉ - இந்த தச - பத்து வாயுவிக்ருதீ꞉ - வாயுவிகாரங்களையும் லாகவம் - லகுத்தன்மையையும் க்ருஹ்ணுதி - பெறுகின்றது.

பொழிப்புரை:—சப்தம் காது பேசுந்தன்மையின்விசேஷம் ஸௌக்ஷ்மத்துவம் தைர்யம் பலம் எனும் குணங்களை ஆகாயத்திலிருந்து கிரஹிக்கின்றது. வாயுவினின்று பரிசம் தொக்கு இவைகளையும் உத்க்ஷேபணம் அவக்ஷேபணம்ப்ரஸாரணம் கமநம் ஆகு

ஞ்சநம் எனும் ஐந்துகர்மங்களையும் ப்ராண அபானவ்யான உதாநஸமானநாக கூர்மக்ருகர தேவதத்ததனஞ்ஜய எனும் இந்தப்பத்து வாயுவிகாரங்களையும் லகுத்தன்மையையும் கிரஹிக்கின்றது.

ஶ்லோகம்.

𑌤𑍇𑌷𑌾𑌂𑌮𑍁𑌖𑍍𑌯𑌤𑌰𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌨𑌾𑌭𑍇𑌃 𑌕𑌣𑍍𑌠𑌾𑌦𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ;
𑌚𑌰𑌤𑍍𑌯𑌸𑍌 𑌨𑌾𑌸𑌿𑌕𑌯𑍋𑌰𑍍𑌨𑌾𑌭𑍌 𑌹𑍃𑌦𑌯𑌪𑌂𑌕𑌜𑍇 ॥
𑌶𑌬𑍍𑌦𑍋𑌚𑍍𑌚𑌾𑌰𑌣𑌨𑌿𑌶𑍍𑌵𑌾𑌸𑍋𑌚𑍍𑌛𑍍𑌵𑌾𑌸𑌾𑌦𑍇𑌰𑌪𑌿𑌕𑌾𑌰𑌣𑌂॥ (உஅ)

தேஷாம்முக்யதரः ப்ராணः நாபேः கண்டாதவஸ்திதः
சரத்யஸௌ நாஸிகயோர் நாபௌ ஹ்ருதயபங்கஜே
சப்தோச்சாரணநிச் வாஸோச்வாஸாதேரபிகாரணம்

வியாக்யானம்:—தேஷாம் - அவைகளுள் முக்யதரः-முக்கியமாயுள்ள ப்ராணः - பிராணனானது நாபே: - நாபிக்குமேல் கண்டாத் - கண்டத்துக்குக்கீழ் அவஸ்திः-இருக்கின்றது அஸௌ-இந்த (ப்பிராணனானது) நாஸிகயோः - மூக்குகளின்|(வழியாய்) நாபௌ - நாபியிலும் ஹ்ருதயபங்கஜே - ஹ்ருதயகமலத்திலும சரதி - ஸஞ்சரிக்கின்றது சப்தோச்சாரண நிச்வாசோச்வாஸாதேः அபி - சப்தங்களை உச்சரித்தல் உச்சுவாஸம் நிச்வாஸமுதலியதற்கும் காரணம் - ஹேதுவாயுள்ளது.

பொழிப்புரை—அவைகளுள் முக்கியமாயுள்ளபிராணனானது நாபிக்குமேல் கண்டத்திற்குக்கீழ் உள்ளது. மூக்குகளின்வழியாய் நாபியிலும்ஹ்ருதயகமலத்திலும்ஸஞ்சரிக்கின்றது. சப்தோச்சாரணம் மூச்சிழுத்தல் மூச்சுவிடுதல் முதலியவற்றிற்கும் காரணமாயுள்ளது.

ஶ்லோகம்.

𑌅𑌪𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌗𑍁𑌦𑍇𑌮𑍇𑌢𑍍𑌰𑍇𑌕𑌟𑌿𑌜𑌂𑌘𑍋𑌦𑌰𑍇𑌷𑍍𑌵𑌪𑌿 ।
𑌨𑌾𑌭𑌿𑌕𑌣𑍍𑌠𑌵𑌂𑌕𑍍𑌷𑌣𑌯𑍋𑌰𑍂𑌰𑍁𑌜𑌾𑌨𑍁𑌷𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 ॥
𑌤𑌸𑍍𑌯 𑌮𑍂𑌤𑍍𑌰𑌪𑍁𑌰𑍀𑌷𑌾𑌦𑌿𑌵𑌿𑌸𑌰𑍍𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ॥ (உகூ)

அபானஸ்து குதேமேட்ரே கடிஜங்கோதரேஷ்வபி

நாபிகண்டே வங்க்ஷணயோரூருஜாநுஷு திஷ்டதி
தஸ்யமூத்ரபூரிஷாதிவிஸர்கః கர்மகீர்த்தித:

வியாக்யானம்—அபான: து - அபானனானது குதே - ஆஸனத்திலும் மேட்ரே - குஹ்யத்திலும், கடிஜங்கோதரேஷு அபி- இடைமுழங்கால் வயிறு இவைகளிலும் நாபிகண்டே-நாவியிலும் கண்டத்திலும் வங்க்ஷணயோ: - துடைகளின் ஸந்தியிலும் ஊருஜாநுஷு - துடைமுழங்கால்களின் மததியங்களாகிய இடங்களிலும் திஷ்டதி - இருக்கின்றது தஸ்ய - அந்த அவானனுடைய கர்ம - காரியமானது மூத்ரபுரிஷாதிவிஸர்க்க: - முத்திரமலமுதலியமோசனம் கீர்த்தித: - என்றுசொல்லப்பட்டது.

பொழிப்புரை—அபானனானது ஆஸனத்திலும் குஹ்யத்திலும் இடைமுழங்கால் வயிறு இவைகளிலும் நாபியிலும் கண்டத்திலும் துடைகளின் ஸந்திகளிலும் துடைமுழங்கால்களுக்கு நடுவிலுள்ள இடங்களிலும் இருக்கின்றது. அதன்காரியமானது மூத்திரமலாதிமோசனம் என்க.

ஶ்லோகம்

𑌵𑍍𑌯𑌾𑌨𑍋𑌕𑍍𑌷𑌿𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌗𑍁𑌲𑍍𑌫𑍇𑌷𑍁 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌘𑍍𑌰𑌾𑌣𑍇𑌷𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌧𑍃𑌤𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮 𑌚 ॥ (௩௦)

வ்யானோக்ஷிஶ்ரோத்ரகுல்ப்பேஷு ஜிஹ்வாக்ர்ராணேஷு திஷ்டதி
ப்ராணயாமத்ருதித்யாகக்ரஹணத்யஸ்யகர்மச

வியாக்யானம்—வ்யாந: - வியானனானது அக்ஷிச்ரோத்ரகுல்ப்பேஷு - கண் காது பாதக்கறடுகளிலும் ஜிஹ்வாக்ராணேஷ — நாவு மூக்குகளிலும் திஷ்டதி - இருக்கின்றது அஸ்ய - இதனுடைய கர்ம - கர்மமானது ப்ராணயாமத்ருதித்யாகக்ரஹணதி - பிராணயாமத்தின் கும்பகரேசகபூரகம் முதலியவாம்.

பொழிப்புரை—வியானனானது கண் காது பாதக்கறடு நாக்கு மூக்கு இவ்விடங்களில் இருக்கின்றது. இதன் கர்மமானது பிராணயாமத்தின் பூரகரேசககும்பகம்முதலியனவாம்.

ஸ்லோகம்.

[illegible]
[illegible]
[illegible] (௯௨)

ஸமாநோவ்யாப்யநிகிலம் சரீரம் வஹ்நிநாஸஹ
த்விஸப்ததிஸஹஸ்ரேஷு நாடீரந்த்ரேஷுஸஞ்சரந்
புக்தபீதரஸாந் ஸம்காநயந்தேஹ புஷ்டிக்ருத்

வியாக்யானம்—ஸமாந: - ஸமானனானது வஹ்நிநா ஸஹ - அக்கினியோடுகூட, நிகிலம், சரீரம் - ஸகல சரீரத்தையும் வ்யாப்ய - வியாபித்துக்கொண்டு த்விஸப்ததிஸஹஸ்ரேஷு - எழுபத்தீராயிரங்களாகிய நாடீரந்த்ரேஷு - நாடீத்வாரங்களிலும் ஸஞ்சரந் - ஸஞ்சரிக்கின்றதாய் புக்தபீதரஸாந் - புசிக்கப்பட்டதும் அருந்தப்பட்டதுமாகிய ரஸங்களை ஸம்யக்-ஆநயந் நன்குகொண்டு சேர்க்கின்றதாய் தேஹபுஷ்டியைச் செய்கின்றது.

பொழிப்புரை.—ஸமானனானது அக்கினியோடுகூட ஸகல சரீரத்தையும் வியாபித்துக்கொண்டு எழுபத்தீராயிரம் நாடித்துவாரங்களிலும் ஸஞ்சரிக்கின்றதாய், புசிக்கப்பட்டதும் அருந்தப்பட்டதுமாகிய ரஸங்களை நன்குகொண்டு சேர்க்கின்றதாய்த்தேஹபுஷ்டியைச் செய்கின்றது.

ஸ்லோகம்.

[illegible]
[illegible] (௯௩)

உதாநஃ பாதயோராஸ்தே ஹஸ்தயோரங்கஸந்திஷு
கர்மாஸ்யதே ஹோந்நயநோத்க்ரமணாதிப்ரகீர்த்திதம்

வியாக்யானம்—உதாநஃ - உதானனானது பாதயோஃ - கால்களிலும் ஹஸ்தயோஃ - கைகளிலும் அங்கஸந்திஷு - அங்கஸந்திகளிலும் ஆஸ்தே – இருக்கின்றது அஸ்ய - இதன் கர்ம - கருமமானது தேஹோந்நயநோத்க்ரமணாதி - தேஹத்தை எழுந்திருக்கச்செய்தல் மேல்கிளம்பச்செய்தல் முதலியது என்று ப்ரகீர்த்திதம் - சொல்லப்பட்டது.

பொழிப்புரை—உதானன் கால்களிலும் கைகளிலும் அங்கஸந்திகளிலும் இருக்கின்றது. இதன் (கர்மா) தொழிலானது எழுந்திருக்கச் செய்தல் மேல்கிளம்பச் செய்தல் முதலியது என்க,

ஶ்லோகம்.

𑌤𑍍𑌵𑌗𑌾𑌦𑌿𑌧𑌾𑌤𑍂𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌪𑌞𑍍𑌚 𑌨𑌾𑌗𑌾𑌦𑌯𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ।
𑌉𑌦𑍍𑌗𑌾𑌰𑌾𑌦𑌿 𑌨𑌿𑌮𑍇𑌷𑌾𑌦𑌿 𑌕𑍍𑌷𑍁𑌤𑍍𑌪𑌿𑌪𑌾𑌸𑌾𑌦𑌿𑌕𑌂 𑌕𑍍𑌰𑌮𑌾𑌤𑍍 ॥ (௧௪)
𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑍀𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌶𑍋𑌕𑌾𑌦𑌿 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌂 ।

த்வகாதிதாதூநாச்ரித்ய பஞ்சநாகாதய: ஸ்திதா:
உத்காராதி நிமேஷாதி க்ஷுத்பிபாஸாதிகம் க்ரமாத்
தந்த்ரீப்ரக்ருதிசோகாதிதேஷாம் கர்மப்ரகீர்த்திதம்

வியாக்யானம்.—நாகாதய: - நாகன்முதலிய பஞ்ச - ஐந்தும் (கூர்ம, க்ருகர, தேவதத்த, தனஞ்ஜயர்கள்) த்வகாதிதாதூந் - தோக்குமுதலியதாதுக்களை ஆச்ரித்ய - ஆச்ரயித்துக்கொண்டு ஸ்திதா: - இருக்கின்றன தேஷாம் - அவைகளின் கர்ம - தொழிலானது க்ரமாத் - முறையே, உத்காராதி - கக்குதல்முதலியது, நிமேஷாதி - இமைகொட்டுதல்முதலியது க்ஷுத்பிபாஸாதிகம் - பசிதாகம் முதலியது தந்த்ரீப்ரக்ருதி - சோம்பல்முறித்தல்முதலியது சோகாதி - சோகமடைதல் முதலியது என்று ப்ரகீர்த்திதம் - சொல்லப்பட்டது.

பொழிப்புரை.—நாகன் முதலிய ஐந்துவாயுக்களும் த்வக் முதலியதாதுக்களைப்பற்றிக் கொண்டிருக்கின்றன. அவைகளின் தொழில் முறையே, கக்குதல் முதலியது இமைகொட்டுதல் முதலியதுபசிதாகம்முதலியது, சோம்பல்கொட்டாவிமுதலியது சோகம்முதலியது என்பதாம்.

ஶ்லோகம்

𑌅𑌗𑍍𑌨𑌿𑌸𑍍𑌤𑍁 𑌰𑍋𑌚𑌕𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌂 𑌪𑌾𑌕𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑌾𑌂 ।
𑌅𑌮𑌰𑍍𑌷𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌣𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 𑌓𑌜𑌸𑍍𑌤𑍇𑌜𑌸𑍍𑌤𑍁 𑌶𑌰𑍂𑌤𑌾𑌂 ॥
𑌮𑍇𑌧𑌾𑌵𑌿𑌤𑌾𑌂 𑌤𑌥𑌾𑌦𑌤𑍍𑌤𑍇 𑌜𑌲𑌾𑌤𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌕𑍍𑌷 𑌰𑌸𑌨𑌂 𑌰𑌸𑌂 । (௧௫)
𑌶𑍈𑌤𑍍𑌯𑌂 𑌸𑍍𑌨𑍇𑌹𑌂 𑌦𑍍𑌰𑌵𑌂 𑌸𑍍𑌵𑍇𑌦𑌂 𑌮𑍂𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌮𑍃𑌦𑍁𑌤𑌾𑌮𑌪𑌿

அக்நேஸ்து ரோசகம் ரூபம் தீப்தம் பாகம் ப்ரகாசதாம்
அமர்ஷ தீக்ஷ்ணஸௌக்ஷ்மாணும் ஓஜஸ்தேஜஸ்து சூரதாம்
மேதாவிதாம் ததாதத்தே ஜலாத்துரஸநம் ரஸம்
சைத்யம் ஸ்நேஹம் த்ரவம் ஸ்வேதம்காத்ராதிம்ருதுதாமபி

வியாக்யானம்—அக்நே: - அக்கினியினிடமிருந்து ரோசகம்- நேத்திரேந்திரித்தையும் ரூபம் - உருவத்தையும் தீப்தம் - வெண்ணிறம்சென்னிறம்முதலிய நிறங்களையும் பாகம் - (உண்ட உணவை)ப்பாகம்செய்தல்முதலியதையும் ப்ரகாசதாம் - விளக்கத்தையும், அமர்ஷதீஷ்ணஸௌக்ஷ்மாணும் - பொறுமையின்மை கடூரத்தன்மை இளைப்புற்றிருத்தல் இவைகளையும் ஓஜ: - சரீரஸ்திதிஹேதுவாகிய குணவிசேஷத்தையும் தேஜ: - ஸந்தாபத்தையும், சூரதாம் - பராக்கிரமத்தையும் மேதாவிதாம் - புத்திசாலித்தன்மையையும், ஆதத்தே - கிரஹிக்கின்றது. ஜலாத், து - ஜலத்தினின்றும் ரஸநம் - நாவையும், ரஸம் - ரஸத்தையும், சைத்யம்- சீதத்தையும் ஸ்நேஹம் - அடர்ந்திருத்தலையும், த்ரவம் - த்ரவத்தையும் ஸ்வேதம் - வியர்வையையும், காத்ராதிம்ருதுதாம் - அங்கங்கள் மிருதுவாயிருத்தலையும் கிரஹிக்கின்றது.

பொழிப்புரை:—அக்கினியிடமிருந்து நேத்திரேந்திரியம் உருவம் வெண்மைமுதலிய நிறம் உண்ட உணவை ஜடராக்நியால் பாகம்செய்தல் முதலியது விளக்கம் பொறுமையின்மை கொடுந்தன்மை இளைப்புற்றிருத்தல் இவைகளையும் ஓஜஸ் தேஜஸ் சூரத்தன்மை மேதாவித்தன்மை இவைகளையும் கிரஹிக்கின்றது ஜலத்தினின்றும் நாவையும் ரஸத்தையும் சீதளத்தன்மையையும் அடர்ந்திருத்தலையும் த்ரவத்தையும்வியர்வையையும், அங்கங்கள் ம்ருதுவாயிருத்தலையும் கிரஹிக்கின்றது

ஸ்லோகம்.

[illegible]
[illegible] ॥ ௩௦ ।
[illegible] । (௫அ)

பூமேர்க்ராணேந்த்ரியம் கந்தம்ஸ்தைர்யம்தைர்யஞ்சஸௌரபம்
த்வகஸ்ருங்மாம்ஸமேதோஸ்திமஜ்ஜாசுக்ராணிதாதவ:
அந்நம்பும்ஸாசிதம் த்ரேதாஜாயதெ ஜடராக்நிநா

வியாக்யானம்:—பூமே: - பூமியிலிருந்து க்ராணேந்த்ரியம் - நாசியிந்த்ரியத்தையும் கந்தம் - நாற்றத்தையும் ஸ்தைர்யம் - கனத்தையும் தைர்யம் - தைரியத்தையும் கௌரவம் - பருமனையும் அடைகின்றது. த்வகஸ்ருங்மாம்ஸமேதோஸ்தி மஜ்ஜாசுக்ராணி - தொக்கு ரத்தம் மாம்ஸம் மேதஸ் (வபை) எலும்பு மஜ்ஜை சுக்கிலம் இவைகள் தாதவ: - தாதுக்களென்னப்படும், பும்ஸா - மனிதனால் அசிதம் - உண்ணப்பட்ட அந்நம் - உணவானது ஜடராக்நிநா - ஜடராக்கினியால் த்ரேதா - மூவகை ஜாயதே - ஆகின்றது.

பொழிப்புரை.—ப்ருதிவியிலிருந்து க்ராணேந்த்ரியம் நாற்றம் கனம் தைரியம் பருமன் இவைகளைப்பெறுகின்றது. தொக்கு உதிரம் மாம்ஸம் மேதஸ் எலும்பு மஜ்ஜை சுக்கிலம் இவைகள் ஸப்த தாதுக்களாம். மனிதனால்புசிக்கப்பட்ட உணவுஜடராக்கினியால் மூவகையாகின்றது.

ஸ்லோகம்

𑌮𑌲𑌂𑌸𑍍𑌥𑌵𑌿𑌷𑍍𑌠𑍋𑌭𑌾𑌗𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌧𑍍𑌯𑌮𑍋𑌮𑌾𑌂𑌸𑌤𑌾𑌂𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 ।
𑌮𑌨𑌃 𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑍋𑌭𑌾𑌗𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑍍𑌨𑌮𑌯𑌂 𑌮𑌨𑌃 ॥ (௩௧)

மலம் ஸ்தவிஷ்டோபாக: ஸ்யாந்மத்யமோமாம்ஸதாம்வ்ரஜேத்
மந:கநிஷ்டோபாகஸ்ஸ்யாத்தஸ்மாதந்நமயம்மந:

வியாக்யானம்—மலம் - மலமானது ஸ்தவிஷ்ட: - ஸ்தூலமாகிய பாக: - அம்சம் ஸ்யாத: - ஆகும் மத்யம: பாக: - மத்திமபாகமானது மாம்ஸதாம் - மாம்ஸத்தன்மையை வ்ரஜேத் - அடையும் மந: - மனமானது கநிஷ்ட: - ஸூக்ஷ்மத்தன்மையுடைய பாக:ஸ்யாத் அம்சமாம் தஸ்மாத் - ஆதலால் மந: - மனமானது அந்நமயம் - அந்நமயம் என்னப்படுவதாம்.

பொழிப்புரை—மலமானது ஸ்தூலமாகியபாகம். மத்திமபாகம் மாம்ஸமாகின்றது. ஸூக்ஷ்மபாகமானது மனமாகின்றதாதலின் மனம் அந்நமயமென்றுசொல்லப்படுகின்றது.

ஶ்லோகம்

𑌅𑌪𑌾𑌂 𑌸𑍍𑌥𑌵𑌿𑌷𑍍𑌠𑍋 𑌮𑍂𑌤𑍍𑌰𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌮𑌧𑍍𑌯𑌮𑍋 𑌰𑍁𑌧𑌿𑌰𑌂 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 ।
𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑌭𑌾𑌗𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑍋 𑌜𑌲𑌾𑌤𑍍𑌮𑌕𑌃 ॥ (௪௰)

அபாம் ஸ்தவிஷ்டோ மூத்ரம்ஸ்யாத் மத்யமோருதிரம்வ்ரஜேத்
கநிஷ்டபாக: ப்ராண: ஸ்யாத்தஸ்மாத் ப்ராணோஜலாத்மக:

வியாக்யானம்—அபாம் - ஜலத்தினது ஸ்தவிஷ்ட: - ஸ்தூல பாகம் மூத்ரம், ஸ்யாத் - மூத்திரமாகின்றது மத்யம: - நடுத்தரமாகிய பாகமானது ருதிரம் - ரதத்தை வ்ரஜேத் - அடைகின்றது கநிஷ்டபாக: - நுட்பமாகிய பாகமானது ப்ராண:, ஸ்யாத்- ப்ராணனாகின்றது தஸ்மாத் - ஆதலால் ப்ராண: - ப்ராணனானது ஜலாத்மக: - ஜலஸ்வரூபமானது. என்பதாம்.

பொழிப்புரை.—ஜலத்தினது ஸ்தூலபாகம் மூத்திரமாகின்றது மத்தியபாகமானது ரத்தத்தையடைகின்றது நுட்பமாகிய பாகமானது ப்ராணனாகின்றது. ஆதலால் ப்ராணன் ஜலமயம் என்பதாம்.

ஶ்லோகம்.

𑌤𑍇𑌜𑌸𑍋𑌽𑌸𑍍𑌥𑌿 𑌸𑍍𑌥𑌵𑌿𑌷𑍍𑌠𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌮𑌜𑍍𑌜𑌾 𑌮𑌧𑍍𑌯𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ।
𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌵𑌾𑌙𑍍𑌮𑌤𑌾 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍇𑌜𑍋𑌽𑌬𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌜𑌗𑌤𑍍 ॥ (௪௧)

தேஜஸோ அஸ்திஸ்தவிஷ்டஸ்யாத் மஜ்ஜாமத்யஸமுத்பவ:
கநிஷ்டா வாக்மதா தஸ்மாத்தேஜோபந்நாத்மகம் ஜகத்

வியாக்யானம்:—தேஜஸ: - தேஜஸி (அக்கினியி)னுடைய ஸ்தவிஷ்ட: - ஸ்தூலமாகிய பாகமானது அஸ்தி - எலும்பு ஸ்யாத் - ஆகும் மஜ்ஜா - மஜ்ஜையெனும் தாதுவானது மத்யஸமுத்பவ: - மத்திமபாகமாம் கநிஷ்டா - ஸூக்ஷ்மபாகமானது வாக்மதா - வாக் என்றுசொல்லப்படுவதாம் தஸ்மாத் - ஆதலால் ஜகத் - ஜகமானது தேஜோபந்நாத்மகம் - அக்கினி ஜலமந்நரூபமாக உள்ளது.

பொழிப்புரை.—அக்கினியினுடைய ஸ்தூலமாகிய பாகமானது எலும்பாகும். மஜ்ஜை எனும் தாது மத்திமபாகமாகின்றது ஸூக்ஷ்மபாகமானது வாக் என்னப்படுகின்றது. ஆதலின் ஜகமானது தேயுஜலாந்நரூபமாயுள்ளது.

ஸ்லோகம்.

லோஹிதாஜ்ஜாயதே மாம்ஸம் மேதோமாம்ஸஸமுத்பவம் ।
மேதஸோஸ்தீநி ஜாயந்தே மஜ்ஜாவாஸ்திஸமுத்பவா ॥ (சஉ)

லோஹிதாஜ்ஜாயதேமாம் ஸம்மேதோமாம்ஸஸமுத்வம்
மேதஸோஅஸ்தீநி ஜாயந்தேமஜ்ஜாவாஸ்திஸமுத்பவா

வியாக்யானம்—லோஹிதாத் - ரத்தத்தினின்றும் மாம்ஸம் - மாம்ஸமானது ஜாயதே - உண்டாகின்றது மேத: - மேதஸ்ஸானது, மாம்ஸஸமுத்பவம் - மாம்ஸத்திலிருந்துண்டாவதாம் மேதஸ: - மேதஸ்ஸிலிருந்து, அஸ்தீநி - எலும்புகள் ஜாயந்தே - உண்டாகின்றன மஜ்ஜா - மஜ்ஜை என்பது அஸ்திஸமுத்பவா:- எலும்பிலிருந்துண்டாவதாம்.

பொழிப்புரை—ரத்தத்தினின்றும் மாம்ஸமும் மாம்ஸத்திலிருந்து மேதஸ்ஸும் மேதஸ்ஸிலிருந்து எலும்புகளும் எலும்புகளிலிருந்து மஜ்ஜையும் உண்டாகின்றது.

ஸ்லோகம்

நாட்யோபி மாம்ஸஸங்காதாச்சுக்ரம் மஜ்ஜாஸமுத்பவம் ।
வாதபித்தகபாஸ்சாத்ர தாதவ: பரிகீர்த்திதா: ॥ (சங)

நாட்யோபிமாம்ஸங்காதாத்சுக்ரம்மஜ்ஜாஸமுத்பவம்
வாதபித்தகபாஸ்சாத்ரதாதவ: பரிகீர்த்திதா:

வியாக்யானம்.—மாம்ஸஸங்காதாத் - மாம்ஸச்சேர்க்கையில் நின்றும் நாட்ய: அபி - நாடிகளும் உண்டாகின்றன. சுக்ரம் - ரேதஸானது மஜ்ஜாஸமுத்பவம் - மஜ்ஜையிலிருந்துண்டாகின்றது வாதபித்தகபா: ச - வாயு பித்தம் சிலேஷ்மம் ஆகிய இவைகள் அத்ர - இத்தேஹத்தினில் தாதவ: - தாதுக்கள் என்று பரிகீர்த்திதா: - சொல்லப்பட்டுள்ளன

பொழிப்புரை.—மாம்ஸங்களிலிருந்து நாடிகள் உண்டாகின்றன. ரேதஸானது மஜ்ஜையிலிருந்துண்டாகின்றது. வாதபித்த கபங்கள் இத்தேகத்திலுள்ள தாதுக்கள் என்று சொல்லப்பட்டுள்ளன.

ஸ்லோகம்

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] (சகூ)
[illegible]

தசாஞ்ஜலிஜலம்ஞேயம் ரஸஸ்யாஞ்ஜலயோநவ
ரக்தஸ்யாஷ்டௌ புரீஷஸ்யஸப்தஹிச்லேஷ்மணஸ்சஷட்
பித்தஸ்யபஞ்ச சத்வாரோ மூத்ரஸ்யாஞ்ஜலயஸ்த்ரயஃ
வஸாயாமேதஸொத்வௌது மஜ்ஜாத்வஞ்ஜலிஸம்மிதஃ
அர்த்தாஞ்சலிததாசுக்ரம் ததேவப்லமுச்யதே
அஸ்த்நாம்சரீரே ஸங்க்யாஸ்யாத்ஷட்டியுக்தம் சதத்ரயம்

வியாக்யானம்—ஜலம் - ஜலமானது தசாஞ்ஜலி - பத்துஅஞ்ஜலி பரிமாணமுடையதென்று ஞேய: - அறியத்தக்கது (அஞ்ஜலியெனின் இருசிரங்கைகள் என்பதுபொருள்) ரஸஸ்ய - ரஸத்திற்கு (அன்னஸாரத்திற்கு) நவ - ஒன்பது அஞ்ஜலய: - அஞ்ஜலிபரிமாணங்களாம். ரக்தஸ்ய - ரத்தத்திற்கு அஷ்டௌ - எட்டு (அஞ்ஜலிகளாம்) புரீஷஸ்ய -மலத்திற்கு ஸப்த - ஏழு அஞ்ஜலி பரிமாணமாம் ச்லேஷ்மண: - கபத்திற்கு ஷட் - ஆறு (அஞ்ஜலிகளாம்) பித்தஸ்ய - பித்தத்திற்கு, பஞ்ச - ஐந்து (அஞ்ஜலிகளாம்) வஸாயா: - மாம்ஸத்ரவத்திற்கு, த்ரய:- மூன்று (அஞ்ஜலிகளாம்) மேதஸ: - ஹ்ருதயமாம்ஸத்திற்கு த்வௌ - இரண்டாம் மஜ்ஜா - மஜ்ஜையானது அஞ்ஜலி ஸமமித: - ஓரஞ்ஜலி (யாம்) சுக்ரம - ரேதஸானது அர்த்தாஞ்ஜலி - அரை அஞ்ஜலியாம் தத் ஏவ - அதுவே பலம - பலம் என்று உச்யதே - சொல்லப்படுகின்

றது சரீரே - சரீரத்திலுள்ள அஸ்த்நாம் - எலும்புகளின் ஸங்க்ய - அளவை ஷஷ்டியுக்தம் - அறுபதோடு கூடிய சதத்ரயம் - மூன்று நூறுகளாம்.

பொழிப்புரை.—ஜலம்பத்தஞ்ஜலியும் ரஸம் ஒன்பதஞ்ஜலியும் ரக்தம் எட்டு அஞ்ஜலியும மலம் ஏழஞ்ஜலியும் கபம் ஆறஞ்ஜலியும் பித்தம் ஐந்தஞ்ஜலியும் மூத்திரம் நான்கஞ்ஜலியும் வஸை மூன்றஞ்ஜலியும் மேதஸ் இரண்டஞ்ஜலியும் மஜ்ஜை ஓரஞ்ஜலியும் சுக்கிலம் அரையஞ்ஜலி பரிமாணம் சுக்கிலமே பலம் என்பதாம் சரீரத்திலுள்ள எலும்புகளின் ஸங்கியை முன்னூற்றறுபதாம.

ஸ்லோகம்.

ஜலஜாநிகபாலாநி ருசகாஸ்தரணாநிச ।
நளகாநீதிதாந்யாஹுः பஞ்சதாஸ்தீநி ஸூரயः ॥ (சஎ)

ஜலஜாநிகபாலாநி ருசகாஸ்தரணாநிச
நளகாநீதிதாந்யாஹு: பஞ்சதாஸ்தீநி ஸூரய:

வியாக்யானம்:—அஸ்தீநி - எலும்புகள், ஜலஜாநி - ஜலஜங்களென்றும், (தாமரைபோன்றனவும்) கபாலாநி - கபாலங்களென்றும் (சிரஸிலுள்ளனவும்) ருசகாஸ்தரணாநிச - ருசகங்களென்றும், ஆஸ்தரணங்களென்றும் (மாதளைபோன்றவும் ஆஸனம்போன்றனவும்) நளகாநீதி-நளகம்(கணுக்கால் எலும்புமுதலியன)என்றும் பஞ்சதா - ஐந்துவகைப்பட்டனவென்று, ஸூரயம் - வித்வான்கள் ஆஹு: -சொல்லுகின்றனர்.

பொழிப்புரை:—எலும்புகள் ஜலஜங்கள் பாலங்கள் ருசகங்கள் ஆஸ்தரணங்கள் நளகம் முதலியன என்று ஐந்துவிதங்களாய் வித்வான்களால் சொல்லப்படுகின்றன.

ஸ்லோகம்.

த்வேசதே த்வஸ்திஸந்தீநாம்ஸ்யாதாம்தத்ரதஸோத்தரே ।
த்வேசதே த்வஸ்திஸந்தீநாம்ஸ்யாதாம்தத்ரதஸோத்தரே

வியாக்யானம்:—தத்ர - ஆண்டு, அஸ்திஸந்தீநாம் – எலும்புஸந்திகளின் (எண்ணிக்கை) தசோத்தரே - பத்து அதிகமாகிய த்வேசதே - இரண்டு நூறுகளாம்.

பொழிப்புரை:—ஆண்டு ஸந்திகளிலுள்ள எலும்புகளின் எண்ணிக்கை இருநூற்றுப்பத்து.

ஶ்லோகம்.

𑌰𑍌𑌰𑌵𑌾𑌃 𑌪𑍍𑌰𑌸𑌰𑌾𑌃 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌸𑍇𑌚𑌨𑌾𑌃 𑌸𑍍𑌯𑌰𑍁𑌲𑍂𑌖𑌲𑌾𑌃।
𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌾 𑌮𑌣𑍍𑌡𑌲𑌾𑌶𑍍𑌶𑌙𑍍𑌖𑌾𑌵𑌰𑍍𑌤𑌾 𑌵𑌾𑌮𑌨𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌾𑌃॥
𑌇𑌤𑍍𑌯𑌷𑍍𑌟𑌧𑌾 𑌸𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌶𑌰𑍀𑌰𑍇𑌷𑍍𑌵𑌸𑍍𑌥𑌿𑌸𑌨𑍍𑌧𑌯𑌃। (௪௮)

ரௌரவா: ப்ரஸரா: ஸ்கந்தஸேசநா: ஸ்யுருலூகலா:
ஸமுத்ராமண்டலாஶ் ஶங்காவர்தாவாமந குண்டலா:
இத்யஷ்டதாஸமுத்திஷ்டாஶ்ஶரீரேஷ்வஸ்தி ஸந்தய:

வியாக்யானம்—ரௌரவா: - ரௌரவங்கள், ப்ரஸரா: - ப்ரஸரங்கள், ஸ்கந்தஸேசநா: - ஸ்கந்தஸேசனங்கள், உலூகலா: - உலூகலங்கள் ஸமுத்ரா: - ஸமுத்திரங்கள், மண்டலா:- மண்டலங்கள், ஶங்காவர்த்தா: - சங்காவர்த்தங்கள், வாமநகுண்டலா: - வாமனகுண்டலங்கள், இதி - என்று, அஷ்டதா - எண்வகையாய் சரீரேஷு - சரீரங்களில், அஸ்திஸந்தய: - அஸ்திஸந்திகள், ஸமுத்திஷ்டா: - சொல்லப்பட்டுள்ளன.

பொழிப்புரை.—ரௌரவங்கள் ப்ரஸரங்கள் ஸ்கந்தஸேசனங்கள் உலூகலங்கள் ஸமுத்ரங்கள் மண்டலங்கள் சங்காவர்த்தங்கள் வாமனகுண்டலங்கள் என்று எண்வகையாய் சரீரத்திலுள்ள எலும்புகள் சொல்லப்பட்டுள்ளன.

ஶ்லோகம்.

𑌸𑌾𑌰𑍍𑌧𑌕𑍋𑌟𑌿𑌤𑍍𑌰𑌯𑌂 𑌰𑍋𑌮𑍍𑌣𑌾𑌂 𑌶𑍍𑌮𑌶𑍍𑌰𑍁𑌕𑍇𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍍॥
𑌦𑍇𑌹𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍇𑌵𑌨𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜।
𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑌸𑌾𑌰𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑍇𑌵 𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑍋 𑌭𑍁𑌵𑌨𑌤𑍍𑌰𑌯𑍇॥

ஸார்த்தகோடித்ரயம்ரோம்ணாம்ஶ் மஶ்ருகேசாஸ்திலக்ஷணம்
தேஹஸ்வரூபமேவந்தே ப்ரோக்த தசரதாத்மஜ
யஸ்மாதஸாரோநாஸ்த்யேவபதார்த்தோபுவநத்ரயே

வியாக்யானம்:—ரோம்ணாம் - உரோமங்களுக்கு ஸார்த்தகோடித்ரயம் - மூன்றரைக்கோடிக் (கணக்குள்ளது) ஶ்மச்ருகேசா: -

மீசை கேசம் இவைகள், த்ரிலக்ஷகா: - மூன்றுலக்ஷங்களாம், தசரதாத்மஜ - ஓ தசரதன்புதல்வனே, தேஹஸ்வரூபம் - தேஹஸ்வரூபம், ஏவம் - இவ்வாறு, தே உனக்கு, ப்ரோக்தம் - சொல்லப்பட்டது. புவநத்ரயே - மூவுலகிலும், யஸ்மாத் - யாதொருதேஹத்தைக்காட்டிலும், அஸார: - ஸாரமற்றது, நாஸ்தி ஏவ - இல்லவே இல்லையோ அப்படிப்பட்டதன்றோ இத்தேஹமானது.

பொழிப்புரை—உரோமங்கள் மூன்றரைக்கோடிக்கணக்குள்ளன. மீசைகேசம் இவைகள் மூன்றுலக்ஷங்களாம் ஓ தசரதன்தநயனே இவ்வாறு உனக்கு தேஹஸ்வரூபம் சொல்லப்பட்டதன்றோ. யாதொன்றைக்காட்டிலும் இழிவாகியது மூன்றுலகத்திலும் இல்லையோ அப்படிப்பட்டதன்றோ இத்தேஹம்.

ஶ்லோகம்.

𑌦𑍇𑌹𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌭𑌿𑌮𑌾𑌨𑍇𑌨 𑌨 𑌮𑌹𑍋𑌪𑌾𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 ।
𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑍇𑌣𑌪𑌾𑌪𑍇𑌨 𑌕𑍍𑌰𑌿𑌯𑌨𑍍𑌤𑍇 𑌹𑌨𑍍𑌤 𑌸𑌾𑌮𑍍𑌪𑍍𑌰𑌤𑌮𑍍 ॥ ௫௰

தேஹேஸ்மிந்நபிமாநேந நமஹோபாயபுத்தய:
அஹங்காரேணபாபேந க்ரியந்தே ஹந்தஸாம்ப்ருதம் .

வியாக்யானம்—அஸ்மிந் - இந்த, தேஹே - தேஹத்தினிடத்தில், அபிமாநேந - அபிமானமாகிய, பாபேந - மிக்கக்கெட்டதாகிய, அஹங்காரேண - அஹங்காரத்தால், ஸாம்ப்ரதம் - இப்போது, மஹோபாயபுத்தய: - பரசிவவிசாரரூபங்களாகிய புத்திவிருத்திகள், நக்ரியந்தே - செய்யப்படுவதில்லை, ஹந்த - அந்தோ.

பொழிப்புரை—இந்ததேஹத்தினில் அபிமானமாகிய கொடியதாகிய அகங்காரத்தினால் இம்மனிதப்பிறவியில் பிறவிப்பிணி நீங்கி ஸுகம் பெறும் உபாயமாகிய பரசிவவிசாரம் எனும் சித்தவிருத்திகள் செய்யப்படுகின்றதில்லை.

ஶ்லோகம்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌤𑍁 𑌵𑌿𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌾 ॥ ௫௧

தஸ்மாதேதத்ஸ்வரூபந்து விபோத்தவ்யம் மநீஷிணா

வியாக்யானம்:—தஸ்மாத் - ஆதலால், ஏதத்ஸ்வரூபம் - (அகங்காரத்திற்கிடமாகிய) தேஹஸ்வரூபமானது, மநீஷிணு - புத்திமானால், விபோத்தவ்யம் - நன்கறிந்துகொள்ளவேண்டியது.

பொழிப்புரை—ஆதலால் அஹங்காரத்திற்கிடமாகிய தேஹத்தின் ஸ்வரூபம் புத்திமான்களால் நன்கறிந்து கொள்ளவேண்டியது.

## ஒன்பதாவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## ஜீவஸ்வரூப கதனமென்னும்

### பத்தாவது அத்தியாயம்.

ஸ்ரீராமன் கூறலானூர்.

ஸ்லோகம்.

ஹமவ நூத்ர ஜீவொஹஸள ஜநெ்தாதெ-ஹெஹவதிஷ்டெத ।
ஜாயதெவாகுதொ ஜீவஃஸ்வரூபம் வாஸ்யகிம்வத ॥ (க)

பகவந்நத்ரஜீவோஸௌ ஜந்தோர்தேஹேஹவதிஷ்டதே
ஜாயதே வாகுதோ ஜீவஸ்வரூபம்வாஸ்யகிம்வத

வியாக்யானம்:—பகவந் - ஓ பகவனே, அத்ர - இந்த, ஜந்தோ: - பிராணிகளது, தேஹே-தேஹத்திலுள்ளவனுய், அஸௌ - இதுகாறும்சொல்லப்பட்ட,ஜீவ: - ஜீவனானவன், அவதிஷ்டதே - தனித்துள்ளவனு அல்லது ஜாயதேவா - உண்டாகின்றனு குத: - எக்காரணத்தால், ஜீவ: - ஜீவன் என்னப்படுகின்றன் அஸ்ய - இந்த ஜீவனது ஸ்வரூபம் வா - ஸ்வரூபம்தான் கிம் - யாது வத - சொல்லும்.

பொழிப்புரை—ஓ பகவனே இந்தப்பிராணியின் தேஹத்திலுள்ளவனுய் இது காறும் சொல்லப்பட்ட ஜீவன் தேகத்திலும் தனித்துள்ளவனு அல்லது உண்டாகின்றவனு எக்காரணத்தால் ஜீவன் என்று சொல்லப்படுகின்றன் இவனது ஸ்வரூபம்தான் யாது சொல்லும்.

ஶ்லோகம்.

தேஹாந்தேவாகுத்ரயாதி கத்வாவாகுத்ரதிஷ்டதி ।
கதமாயாதிவாதேஹம் புநர்நாயாதிவாவத ॥ (உ)

தேஹாந்தேவாகுத்ரயாதி கத்வாவாகுத்ரதிஷ்டதி
கதமாயாதி வாதேஹம் புநர்நாயாதிவாவத

வியாக்யானம்— தேஹாந்தே - தேஹமுடிவில் (மரணத்தினில் குத்ர - எங்கு யாதி - செல்லுகின்றான் கத்வாவா - சென்று குத்ர - எங்கு திஷ்டதி - இருக்கின்றான் கதம் - எப்படி ஆயாதி வா - வருகின்றான். தேஹம் - தேஹத்தை புநः - மறுபடியும் ந ஆயாதிவா - வந்து அடைகின்றதில்லையா வத - சொல்லும்.

பொழிப்புரை—தேஹம் நசித்தபின் ஜீவன் எங்கு செல்லுகின்றான்? சென்று எங்கிருக்கின்றான்? எப்படி வருகின்றான்? அல்லது மறுபடியும் வந்துதேஹத்தையடைகின்றதில்லையா? என்ன சொல்லும்?

"ஸ்ரீ பகவாந் கூறலானார்"

ஶ்லோகம்.

ஸாது ப்ருஷ்டம் மஹாபாக குஹ்யாத்குஹ்யதமம் ஹியத் । (௩)
தேவைரபி ஸுதுர்ஜ்ஞேய மிந்த்ராத்யைர்வா மஹர்ஷிபி: ॥
அந்யஸ்மை நைவ வக்தவ்யம் மயாபிரகுநந்தந ।
த்வத்பக்த்யாஹம் பரம் ப்ரீதோ வக்ஷ்யாம்யவஹித: ஶ்ருணு ॥ (௪)

ஸாதுப்ருஷ்டம்மஹாபாக குஹ்யாத்குஹ்யதமம்ஹியத்
தேவைரபி ஸுதுர்ஜ்ஞேய மிந்த்ராத்யைர்வாமஹர்ஷிபி:
அந்யஸ்மைநைசவக்தவ்யம் மயாபிரகுநந்தன
த்வத்பக்த்யாஹம்பரம்ப்ரீதோ:வக்ஷ்யாம்யவஹித ஶ்ஶ்ருணு

வியாக்யானம்:—மஹாபாக- ஓ மஹாபாக்கியவானே ஸாது- நன்கு ப்ருஷ்டம்- வினவப்பட்டது யத்ஹி - யாதொன்றே குஹ்யாத், குஹ்யதமம் - ரஹஸ்யங்களிலும் அறிய ரஹஸ்யமாயுள்ளதோ. இந்த்ராத்யை: - இந்திரன் முதலியவர்களாகிய தேவை: அபி - தேவர்களாலும் மஹர்ஷிபி: - மஹாருஷிகளாலும் ஸுது

ர்ஜ்ஞேயம் - எளிதில் அறியமாட்டாததோ-ரகுநந்தன - ஓ ரகு குலத்தில் தோன்றியவனே மயாபி - என்னாலும் அந்யஸ்மை - மற்றவனுக்கு ந, ஏவ, வக்தவ்யம் - சொல்லக்கூடியதேயல்ல. அஹம் - யான் த்வத்பக்த்யா - உனது பக்தியால், பரம் - மிகவும் ப்ரீதஃ - பிரீதி யடைந்தவனாய்க்கொண்டு வக்ஷ்யாமி - சொல்லுகின்றேன் அவஹிதஃ - ஏகாக்ரசித்தமுடையவனாய் ச்ருணு - கேட்பாயாக.

பொழிப்புரை:—ஓ மஹாபாக்கியவானே உன்னால் நன்குவினவப்பட்டது யாதொரு இவ்வினா ரஹஸ்யத்திலும் ரஹஸ்யமாய் உள்ளதோ இந்திராதிதேவர்களாலும் மஹருஷிகளாலும் யாதொன்று எளிதில் அறியமுடியாததோ ஓ ரகுகுலத்தில் தோன்றியவனே என்னாலும் ஏனையோர்களுக்குச்சொல்லக்கூடாதது ஆயினும் யான் உனது பக்தியால் மிகவும் பிரீதியடைந்தவனாய்க்கொண்டு சொல்லுகின்றேன் ஸாவதானனாய்ச் ரவணஞ் செய்வாயாக.

ஸ்லோகம்.

𑌸𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌕𑍋𑌨𑌨𑍍𑌤𑌸𑍍𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ।
𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑌰𑌂𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 ॥ (௫)
𑌨𑌿𑌤𑍍𑌯𑍋𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨𑌿𑌰𑍍𑌲𑍇𑌪𑍋𑌹𑌂 𑌨𑌿𑌰𑌞𑍍𑌜𑌨𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌹𑍀𑌨𑌶𑍍𑌚 𑌨𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑍋 𑌮𑌨𑌸𑌾𑌪𑌿𑌚 ॥ (௬)

ஸத்யஜ்ஞானாத்மகோநந்தஸ்ஸச்சிதாநந்தவிக்ரஹ:
பரமாத்மா பரஞ்ஜ்யோதி வ்யக்தோவ்யக்தகாரணம்
நித்யோவிசுத்தஸ்ஸர்வாத்மா நிர்லோபோஹந்நிரஞ்ஜந:
ஸர்வதர்மவிஹீநஸ்ச நக்ராஹ்யோமநஸாபிச

வியாக்யானம்—அஹம் - யான் ஸத்யஞானாத்மக: - ஸத்யபோதவடிவனும் அநந்த: - அந்தமில்லாதவனும் பரமானந்தவிக்ரஹ: - பேரானந்த உருவனும் பரமாத்மா - பரமாத்மாவும் பரம்ஜ்யோதி: - பரம்சோதியாயுள்ளவனும் அவ்யக்த:-வ்யக்தம் (இந்திரியங்களுக்கு விஷயம்) அல்லாதவனும் அவ்யக்தகாரணம் - அவ்யக்தத்திற்கும் அதிஷ்டானமாயுள்ளவனும், நித்ய: - நித்தியனும் விசுத்த: - நிர்மலனும் ஸர்வாத்மா - ஸகல (பொருள்களி

ன்வடிவங்களுக்கும் ஆத்மாவாயுள்ளவனும் நிர்லேப: - அஸங்கனும் (ஸம்பந்தமற்றவனும்) நிரஞ்ஜந: - நிஷ்கிரியனும் ஸர்வதர்ம விஹீந: ச - ஸகலதர்மங்களுமில்லாதவனும் மநஸாபி — மனதினுலும் நக்ராஹ்ய: - கிரஹிக்கக்கூடாதவனுமாயுள்ளவன்.

பொழிப்புரை—நான் ஸத்தியபோதவடிவனும் அநந்தனும் பேரானந்தவடிவனும் பரமாத்மாவும் பரஞ்ஜோதியும் அவ்யக்தனும் அவ்யக்தத்திற்கும் ஆதாரமாயுள்ளவனும் நித்தியனும் நிர்மலனும் ஸர்வாத்மாவாயுள்ளவனும் அஸங்கனும் நிஷ்கிரியனும் ஸகலதர்மங்களுமில்லாதவனும் மனதிற்கும் எட்டாதவனுமாயுள்ளவன்

ஸ்லோகம்.

நாஹம்ஸர்வேந்த்ரியக்ராஹ்ய ஸ்ஸர்வேஷாம் க்ராஹகோஹ்யஹம்
ஜ்ஞாதாஹம்ஸர்வலோகஸ்ய மம ஜ்ஞாதா நவித்யதே ॥ (எ)

நாஹம்ஸர்வேந்த்ரியக்ராஹ்ய ஸர்வேஷாம்க்ராஹகோஹ்யஹம்
ஜ்ஞாதாஹம் ஸர்வலோகஸ்ய மமஜ்ஞாதாநவித்யதே

வியாக்யானம்:—அஹம் - நான் ஸர்வேந்த்ரியக்ராஹ்ய - ஸகலேந்திரியங்களாலும் அறியக்கூடியவனல்ல ஸர்வேஷாம் - எல்லாவற்றையும் க்ராஹக: - அறியச் செய்வோன் அஹம்ஹி - யானேயன்றோ அஹம் - நான் ஸர்வலோகஸ்ய - ஸகல உலகத்தையும் ஜ்ஞாதா - அறிவோன் மம - என்னை ஞாதா - அறிவோன் நவித்யதே - இல்லை.

பொழிப்புரை:—நான் எவ்விந்திரியத்தாலும் அறியக்கூடாதவனும் எல்லாவற்றையும் அறியச்செய்வோனுமாயுள்ளவன். நான் ஸகல உலகங்களையும் அறிகின்றவன். என்னை யறிகின்றவன் இல்லை.

ஸ்லோகம்.

தூரஸ்ஸர்வவிகாராணாம் பரமாண்வாதிகஸ்ய ச ।
யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ ॥ (அ)

தூரஸ்ஸர்வவிகாராணும் பரமாண்வாதிகஸ்யச
யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ

வியாக்யானம்:—ஸர்வவிகாராணும் - ஸகலவிகாரங்களுக்கும் பரமாண்வாதிகஸ்ய ச - பரமாணுமுதலியவைகளுக்கும், தூர - தூரத்திலுள்ளவன். வாச - வாக்குகள் மநஸா, ஸஹ - மனதோடுகூட அப்ராப்ய - அடையாமல் யதः - எவனிடமிருந்து நிவர்த்தந்தே திரும்புகின்றனவோ.

பொழிப்புரை:— ஸகலவிகாரங்களுக்கும் பரமாணுமுதலியவைகளுக்கும் தூரத்திலுள்ளவன். வாக்குகள்மனதோடுகூட எவனிடம் அடையாமல் திரும்புகின்றனவோ.

ஶ்லோகம்.

ஆநந்தம் ப்ரஹ்மமாம்ஜ்ஞாத்வா நபிபேதிகுதஶ்சந
யஸ்து ஸர்வாணி பூதாநி மய்யேவேதிப்ரபஶ்யதி ॥
மாம்சஸர்வேஷுபூதேஷு ததோநவிஜுகுப்ஸதே

ஆநந்தம் ப்ரஹ்மமாம்ஜ்ஞாத்வாநபிபேதிகுதஸ்சந
யஸ்து ஸர்வாணி பூதாநி மய்யேவேதிப்ரபச்யதி
மாம்சஸர்வேஷுபூதேஷுததோநவிஜுகுப்ஸதே

வியாக்யானம்—ஆநந்தம் - ஆனந்தவடிவமாகிய ப்ரும்ம — ப்ரும்மமான மாம் - என்னை த்யாத்வா - த்யானம் செய்யின் குதः, ச, ந - எதனுலும் நபிபேதி - பயமடையான் யः, து - யாதொருவன் ஸர்வாணி பூதாநி - ஸகலபூதங்களையும் மயி, ஏவ, - என்னிடமே இதி - என்று பச்யதி - பார்க்கின்றானே ஸர்வேஷு பூதேஷு ச - ஸகல பூதங்களிலும் மாம் - என்னை (பார்க்கின்றானே) அவன் ததः - அதன்பிறகு நவிஜுகுப்ஸதே - (எதனையும்) வெறுக்கவிரும்பான்,

பொழிப்புரை.—ஆனந்தவடிவமாகிய ப்ரும்மமான என்னைத்யானம்செய்யின் எதனுலும் பயமடையான் யாதொருவன். ஸகலபூதங்களிலும் யானே என்றும் காண்கின்றானே. அவன் அதன் பின்னர் எதனையும் வெறுக்கமாட்டான்.

ஶ்லோகம்.

யஸ்யஸர்வாணி பூதாநி ஹ்யாத்மைவாபூத்விஜாநதः ॥
கோமோஹஸ்தத்ரகஶ்ஶோக ஏகத்வமநுபஶ்யதः । (௧௦)

𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌗𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍇।
𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌤𑍍𑌵𑌗𑍍𑌰𑍍𑌯𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌯𑌾 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌭𑌿𑌃॥

யஸ்யஸர்வாணிபூதாநி ஹ்யாத்மைவாபூத்விஜாநதஃ
கோமோஹஸ்தத்ரகஶ்ஶோகஃ ஏகத்வமநுபச்யதஃ
ஏஷஸ்ஸர்வேஷு பூதேஷு கூடாத்மாநப்ரகாசதே
த்ருஶ்யதேத்வக்ர்யயாபுத்த்யாஸூக்ஷ்மயாஸூக்ஷ்மதர்சிபிஃ

வியாக்யானம்—விஜாநதஃ - நன்கறிவோனுகிய யஸ்ய - எவனுக்கு ஸர்வாணி - பூதாநி ஸகல - பூதங்களும் ஆத்மா ஏவ - ஆன்மாவாகவே அபூத் - ஆச்சுதோ ஏகத்வம் - ஏகத்துவத்தை அநுபச்யதஃ - காண்கின்றவனுகிய தத்ர - அவனிடம், மோஹஃ - மோஹமானது கஃ - ஏது சோக: - சோகம் கஃ - ஏது ஏஷஃ-இந்த ஆத்மா - ஆத்மாவானது ஸர்வேஷு பூதேஷு - ஸகலபூதங்களிலும் கூட - மறைபட்டவனுய்க்கொண்டு நப்ரகாசதே — காணப்படுகின்றதில்லை ஸூக்ஷ்மதர்சிபிஃ - மிக்கவிவேகிகளால் ஸூக்ஷ்மயா - கூர்மையாயுள்ளதும் அக்ர்யயா - ஏகாக்கிரமாயுள்ளதுமாகிய புத்யா - புத்தியினுல் த்ருஶ்யதே - காணப்படுகின்றுன்.

பொழிப்புரை.—நன்கறிவோனுகிய எவனுக்கு ஸகலபூதங்களும் ஆத்மாவாகவே ஆச்சுதோ. ஏகத்தன்மையைக்காண்போனுகிய அவனுக்கு மோஹமேது சோகமேது? இவ்வாத்மா ஸகலபூதங்களிலும் கூடியவனுயிருந்துகொண்டு நன்கு காணப்படுகின்றதில்லை ஸூக்ஷ்மதிருஷ்டியுடையவர்களால் கூர்மையாயும் ஏகாக்ரமாயும் உள்ளபுத்தியால் காணப்படுகின்றுன்.

ஶ்லோகம்.

𑌅𑌨𑌾𑌦𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌤𑌥𑌾𑌪𑍍𑌯𑍇𑌕𑍋𑌹𑌮𑌵𑍍𑌯𑌯𑌃॥
𑌅𑌵𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑍂𑌪𑍋 𑌜𑌗𑌤𑍍𑌕𑌰𑍍𑌤𑌾𑌹𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌃।

அனுத்யவித்யயாயுக்தஸ்ததாப்யே கோஹமவ்யயஃ
அவ்யாக்ருதப்ரஹ்ம ரூபோ ஜகத்கர்த்தாமஹேச்வர.

வியாக்யானம்.—அஹம் - நான் ஏகஃ - ஏகனும் அவ்யய- அபி, - வ்யயம் (நாசம்) இல்லாதவனுமாயுள்ளவன் ததா அபி : அப்படியிருக்கினும் அனுத்யவித்யயா - அனுதியாகிய அவித்தை

யோடு கூடியவனைக்கொண்டு, அவ்யாக்ருத ப்ரும்ஹரூப: - அவ்யாக்ருதப்ரும்ஹவடிவனாய், ஜகத்கர்த்தா-ஜகங்களை ஸ்ருஷ்டிக்கின்றவனாகிய, மஹேஸ்வர: - மஹேஸ்வரனாகின்றேன்.

பொழிப்புரை:—நான் ஏகனும் வ்யயமில்லாதவன் அங்ஙனமாயினும் அநாதியாகிய அவித்யையோடு கூடியவனைக்கொண்டு அவ்யாக்ருதப்ரும்ஹவடிவமாயிருந்து ஜகத்கர்த்தாவாகிய மஹேஸ்வரனாகின்றேன்.

ஸ்லோகம்.

𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑍇 𑌯𑌥𑌾𑌦𑍃𑌶𑍍𑌯 𑌮𑌿𑌦𑌂𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇𑌜𑌗𑌤𑍍𑌤𑍍𑌰𑌯𑌮𑍍 ॥ கங.
𑌤𑌦𑍍𑌵𑌨𑍍𑌮𑌯𑌿𑌜𑌗𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇𑌸𑍍𑌤𑌿𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇 ।

ஞானமாத்ரேயதாத்ருச்யமிதம்ஸ்வப்நேஜகத்ரயம
தத்வந்மயிஜகத்ஸர்வம்த்ருச்யதே ஸ்திவிலீயதே

வியாக்யானம்:—ஸ்வப்நே - கனவினில் உள்ளதாகிய, ஜகத்ரயம் - மூவுலகும், ஞானமாத்ரே - ஞானமாத்திரத்தில், யதா - எப்படி, த்ருச்யம்-காணப்படுகின்றதோ, தத்வத்-அதுபோலவே, ஜகத்ஸர்வம்-ஜகமெல்லாம், மயி - என்னிடம், த்ருச்யதே -தோன்றுகின்றது, அஸ்தி - இருக்கின்றது, விலீயதே - ஒடுங்குகின்றது.

பொழிப்புரை:—கனவினில் உள்ளதாகிய மூவுலகும் ஞானமாத்திரத்தில் எப்படிக்காணப்படுகின்றதோ அதுபோலவே ஸகலஜகமும் என்னிடம் தோன்றுகின்றது நிற்கின்றது ஒடுங்குகின்றது.

ஸ்லோகம்.

𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌜𑍀𑌵𑌤𑍍𑌵𑍇𑌨𑌵𑌸𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥ கச.
𑌪𑌞𑍍𑌚𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑍇𑌵 𑌪𑌞𑍍𑌚𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿𑌚 ।
𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌚𑍇𑌤𑌿𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍 ॥ கரு.
𑌵𑌾𑌯𑌵𑌃𑌪𑌞𑍍𑌚𑌮𑌿𑌲𑌿𑌤𑌾 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿𑌲𑌿𑌙𑍍𑌗𑌶𑌰𑍀𑌰𑌤𑌾𑌮𑍍 ।

நாநாவித்யாஸமாயுக்தோ ஜீவ்த்வேந வஸாம்யஹம்
பஞ்சகர்மேந்த்ரியாண்யேவபஞ்சஞாநேந்த்ரியாணிச
மநோபுத்திரஹங்காரஸ்சித்தம் சேதிசதுஷ்டயம்
வாயவஃபஞ்சமிளிதாயாந்திலிங்கசரீரதாம்

வியாக்யானம்:—அஹம் - நான், நாநாவித்யாஸமாயுக்தஃ- எண்ணிறந்த அவித்தைகளோடு கூடியவனாய், ஜீவத்வேந - ஜீவத் தன்மைபெற்று, வஸாமி-வஸிக்கின்றேன். கர்மேந்திரியாணி-கர் மேந்திரியங்கள், பஞ்ச-ஐந்தும், ஞாநேந்த்ரியாணி - ஞானேந்திரி யங்கள், பஞ்ச-ஐந்தும், மநஃ - மநம், புத்திஃ-புத்தி, அஹங்காரஃ- அஹங்காரம், சித்தம் - சித்தம், இதி-என்று, சதுஷ்டயம் - நான் கும், வாயவஃ - வாயுக்கள், பஞ்ச-ஐந்து, மிளிதாஃ - இவைகள் கூடியவைகளாய்க்கொண்டு, லிங்கசரீரதாம் - லிங்கசரீரத்தன் மையை, யாந்தி-அடைகின்றன.

பொழிப்புரை:—நான் எண்ணிறந்த அவித்தைகளோடு கூடி யவனாய் ஜீவத்தன்மை பெற்றுவஸிக்கின்றேன். கர்மேந்திரியங் கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து மனோபுத்திசித்தாஹங்கா ரங்களாகிய நான்கு, வாயுக்கள் ஐந்துஆகிய இவைகள்கூடி லிங்க சரீரத்தன்மையைப் பெறுகின்றன.

ஶ்லோகம்.

𑌤𑌤𑍍𑌰𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌂𑌬𑌿𑌤𑌂 ॥ கரு.
𑌵𑍍𑌯𑌾𑌵𑌹𑌾𑌰𑌿𑌕𑌜𑍀𑌵𑌸𑍍𑌤𑍁 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌽𑌪𑌿 𑌵𑌾 ।
𑌸 𑌏𑌵 𑌜𑌗𑌤𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑌯𑍋𑌃 ॥

தத்ராவித்யாஸமாயுக்தம் சைதன்யம் ப்ரதிபிம்பிதம்
வ்யாவஹாரிகஜீவஸ்து க்ஷேத்ரஜ்ஞ புருஷோபிவா
ஸ ஏவ ஜகதாம்போக்தா நாந்யோய புண்யபாபயோஃ

வியாக்யானம்:—தத்ர - லிங்கமெனப்படும் அந்த ஸூக்ஷ்ம சரீரத்தில், ப்ரதிபிம்பிதம் - பிரதிபிம்பிக்கப்பட்ட, அவித்யாஸமா யுக்தம் - அவித்தையோடு கூடிய, சைதந்யம் - சைதன்யமானது, வ்யாவஹாரிகஜீவஃ-வியாவஹார ஸம்பந்தமதாகிய ஜீவனென்றும், க்ஷேத்ரக்ஞஃ - க்ஷேத்திரக்ஞனென்றும், புருஷஃ-அபி வா - புரு ஷனென்றும் சொல்லப்படுகின்றது, ஸ ஏவ - அவனே, புண்ய பாபயோஃ - புண்யபாவங்களின் பயனாகிய, ஜகதாம்- ஜகங்களை போக்தா - புசிப்பவன், ந அந்யஃ - மற்றவனல்ல.

பொழிப்புரை:—லிங்கதேஹமென்னப்படும் ஸூக்ஷ்மசரீரத் தில் பிரதிபிம்பிக்கப்பட்ட அவித்தையோடு கூடிய சைதன்யமா

னது வ்யாவஹாரிகஜீவனென்றும் க்ஷேத்ரக்ஞனென்றும் புருஷ னென்றும் சொல்லப்படுகின்றது. அவனே அநாதிகளாகிய புண் ணிய பாபபயன்களைப் புசிப்பவன்.

ஸ்லோகம்.

இஹாமுத்ரகதிஸ் தஸ்யஜாக்ரத் ஸ்வப்நாதிபோக்த்ருதா ।
யதாதர்ப்பணகாளிம்நா மலிநத்ருச்யதேமுகம் । ௧௭
தத்வதந்தஃகரணஜைர் தோஷைராத்மாபித்ருச்யதே ।

இஹாமுத்ரகதிஸ் தஸ்யஜாக்ரத் ஸ்வப்நாதிபோக்த்ருதா
யதாதர்ப்பண காளிம்நாமலிந்த்ருச்ய தேமுகம்
தத்வதந்தஃ கரணைகர் தோஷைராத்மாபித்ருச்யதே

வியாக்யானம்:—தத்ர-அவ்விதமான லிங்கசரீரத்தில் இருக் கும், தஸ்ய-அவனுக்கு, இஹாமுத்ர-இங்கிருந்து அங்கும் அங்கி ருந்திங்கும், கதி-செல்லுதலும், ஜாக்ரத்ஸ்வப்நாதிபோக்த்ருதா- ஜாக்ரத்ஸ்வப்நம் முதலியவைகளில் ஸுகதுக்கங்களைப் புசித்தலு மாம்; முகம் - முகமானது, தர்ப்பண காளிம்நா - கண்ணாடியின் அழுக்கினால், யதா - எப்படி, மலிநம் - அழுக்குற்றதாய், த்ருச்ய தே-காணப்படுகின்றதோ, தத்வத் - அதுபோலவே, அந்தகரண கைஃ - அந்தக்கரணத்திலுள்ள, தோஷைஃ - குற்றங்களால், ஆத் மாபி - ஆன்மாவும் த்ருச்யதே - காணப்படுகின்றான்.

பொழிப்புரை:—அவ்விதமான லிங்கசரீரத்திலிருந்து கொ ண்டே இவ்வுலகிலிருந்து ஸ்வர்க்கநரகங்களுக்கும் ஸ்வர்க்கநரக ங்களிலிருந்து இவ்வுலகத்திற்கும் போக்குவருத்து செய்தலும் ஜாக்கிரஸ்வப்பனம் முதலியவைகளிலுள்ள ஸுகதுக்கத்தைப் புசித்தலுமாம். முகமானது கண்ணாடியின்மலத்தினால் அழுக்குற் றதாய்க்காணப்படுகின்றது; அதுபோலவே அந்தக்கரணதோஷங் களால் ஆன்மாவும் தோஷமுள்ளதுபோலக் காணப்படுகின்றது.

ஸ்லோகம்.

பரஸ்பராத்யாஸவசாதந்தகரணாத்மநோஃ ॥
ஏகீபாவாபிமாநேந பராத்மா துஃகபாகிவ । ௧௮

பரஸ்ப்ராத்யாஸ்வசாதந்தகரணாத்மநோஃ
ஏகீபாவாபிமாநேநபராத்மா துக்கபாகிவ

வியாக்யானம்:—அந்த꞉ கரணாத்மனோ꞉ - அந்தக்கரணான்மாக்களுக்கு, பரஸ்பராத்யாஸவசாத் - ஒன்றிலொன்றின் ஆரோபத்தால், ஏகீபாவாபிமாநேந - ஒன்றென்றதன்மையாலாகிய அபிமானத்தால், பராத்மா - பரன், துக்கபாகிவ - துக்கமுற்றவன்போல, ஸ்யாத் - ஆவான்.

பொழிப்புரை:— அந்தக்கரணாத்மாக்களுக்கு ஒன்றிலொன்றின் ஆரோபத்தால் ஒன்றென்பதாகிய பாவனையால் வந்த அபிமானத்தால் பரமன் துக்கிபோலாகின்றான்.

ஸ்லோகம்.

𑌮𑌰𑍁𑌭𑍂𑌮𑍌 𑌜𑌲𑌤𑍍𑌵𑍇𑌨 𑌮𑌧𑍍𑌯𑌾𑌹𑍍𑌨𑌾𑌰𑍍𑌕𑌮𑌰𑍀𑌚𑌿𑌕𑌾𑌃 ॥ ௨௦
𑌦𑍃𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑍂𑌢𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌨𑌹𑍍𑌯𑌾𑌰𑍍𑌦𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑌾𑌪𑌕𑌾𑌰𑌕𑌾𑌃 ।
𑌤𑌦𑍍𑌵𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌪𑌿 𑌨𑌿𑌰𑍍𑌲𑍇𑌪𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌮𑍂𑌢𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 ॥ ௨௧
𑌸𑍍𑌵𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌦𑍋𑌷𑍇𑌣 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌕𑌧𑌰𑍍𑌮𑌵𑌾𑌨𑍍 ।
𑌤𑌤𑍍𑌰 𑌚𑌾𑌨𑍍𑌨𑌮𑌯𑍇 𑌪𑌿𑌣𑍍𑌡𑍇 𑌹𑍃𑌦𑌿 𑌜𑍀𑌵𑍋𑌽𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍇 ॥ ௨௨
𑌆𑌨𑌖𑌾𑌗𑍍𑌰𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌦𑍇𑌹𑌂 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑍁𑌵𑍇𑌽𑌵𑌹𑌿𑌤𑌶𑍍𑌶𑍃𑌣𑍁 ।

மருபூமௌஜலத்வேந மத்யாஹ்நார்கமரீசிகா꞉
த்ருச்யந்தே மூடசித்தஸ்யநஹ்யார்த்ராஸ்தாபகாரகா:
தத்வதாத் மாபிநிர்லேபோத்ருச்யதே மூடசேதஸாம்
ஸ்வாவித்யாமாத்ரதோஷேணகர்த்ருத்வாதிகதர்மவாந்
தத்ரசாந்நமயேபிண்டே ஹ்ருதிஜீவோ அவதிஷ்டதே
ஆநகாக்ரம்வ்யாப்யதேஹம்தத்ப்ருவே அவஹிதஶ்ஶ்ருணு.

வியாக்யானம்:—மருபூமௌ-பாலைவனத்தில்,மத்யாஹ்நார்கமரீசிகா꞉ - நடுப்பகல் ஸூரியனுடைய கிரணங்கள், மூடசித்தஸ்ய- மூடபுத்தியுடையோனுக்கு, ஜலத்வேந - ஜலமாக, த்ருச்யந்தே - காணப்படுகின்றன, ஆர்த்ரா꞉ - ஈரமுடையன, நஹி - அல்ல, தாபகாரகா: - தாபத்தையே செய்வனவாம், தத்வத் - அதுபோலவே, நிர்லேப: - அஸங்கனாகிய ஆத்மா, அபி - ஆன்மாவும், மூடசேதஸாம் - மூடபுத்தியுடையோர்களுக்கு, ஸ்வாவித்யாத்மதோஷேண - தனது அவித்யைவடிவமாகிய தன்னுடைய தோஷத்தினால், கர்த்ருத்வாதிகதர்மவாந் - கர்த்திருத்வம் முதலிய தர்மமுடையவனாய், த்ருச்யதே - காணப்படுகின்றான், தத்ர-ஆண்டு, அந்

நமயே - அன்னவிகாரமாகிய, பிண்டே - பிண்டமான தேஹத்தில், ஹ்ருதி - ஹ்ருதயத்தில், ஜீவः - ஜீவன், ஆநகாக்ரம்-நகமுனைவரை யிலுமுள்ள, தேஹம் - தேஹத்தை, வ்யாப்ய - வ்யாபித்து, அவதிஷ்டதே, - இருக்கின்ருன், தத்-அதை, ப்ருவே - சொல்லு கிறேன்.

பொழிப்புரை:—பாலைவனத்தில் நடுப்பகலிலுள்ள ஸூரிய கிரணங்கள் மூடனுக்கு ஜலமாகத்தோன்றுகின்றன; ஆனுல் சிறிதுமீரமுடையனவன்று. கேவலம்தாபத்தையே செய்வனவாம். அது போலவே அஸங்கனுகிய ஆன்மாமூடபுத்தியுடையோர்களுக்குத் தமது அவித்யாதோஷத்தினுல் கர்த்திருத்துவம்முதலியனவுடை யனுகக்காணப்படுகின்ருன். ஆண்டு அந்நவிகாரமாகிய இத்தேகத்தி னில் ஹிருதயத்தில் ஜீவன் நகமுனைவரையிலும் தேஹத்தைவியாபி த்துக்கொண்டிருக்கின்ருன். அதனைச் சொல்லுகின்றேன் சாவ தானமாய்க்கேட்பாயாக.

ஶ்லோகம்.

സോഽയം തദഭിമാനേന മാംസപിണ്ഡോ വിരാജതേ ॥ உங.
നാഭേരൂർദ്ധ്വമധഃ കണ്ഠാദ്വ്യാപ്യ തിഷ്ഠതി യത്സദാ ।
തസ്യ മദ്ധ്യേഽസ്തി ഹൃദയം സനാളം പദ്മകോശവത് । உச.
അധോമുഖഞ്ച തത്രാസ്തി സൂക്ഷ്മം സുഷിരമുത്തമം ।

ஸோயம் ததபிமாநேநமாம்ஸபிண்டோவிராஜதே
நாபேரூர்த்வமதः கண்டாத்வ்யாப்யதிஷ்டதியத்ஸதா
தஸ்யமத்யேஸ்திஹ்ருதயம் ஸநாளம்பத்மகோசவத்
அதோமுகஞ்சதத் ராஸ்திஸூக்ஷ்மம் ஸுஷிரமுத்தமம்.

வியாக்யாணம்:—ஸः அயம் - அந்த இந்த, மாம்ஸபிண்டः- மாம்ஸபிண்டமான தேஹமானது, ததபிமாநேந - அந்த ஜீவாத் மாவின் அபிமானத்தினுல், விராஜதே - விளங்குகின்றது. நாபேः- நாபிக்கு, ஊர்த்வம்-மேல்கண்டாத், அதः - கண்டத்திற்குக் கீழ், ஸதா - எப்போதும், வ்யாப்ய - வியாபித்து, யத் - யாதொன்று, திஷ்டதி - இருக்கின்றதோ, தஸ்ய - அதன், மத்யே - நடுவில், பத்மகோசவத் - தாமரைமொக்குபோல, ஸநாளம் - காம்போடு கூடியதாய், அதோமுகம் - கீழ்முகமாய், ஹ்ருதயம் - ஹ்ருதய

மானது, அஸ்தி - இருக்கின்றது. தத்ர - அதனில், ஸூக்ஷ்மம்- நுட்பமும், உத்தமம் - ஸர்வச்ரேஷ்டமும், தஹராகாசம் இதி உக்தம் - தஹராகாசம் என்று சொல்லப்பட்டதும் ஆகிய, ஸுஷிரம் - இடம் - (துவாரமானது) அஸ்தி - இருக்கின்றது.

பொழிப்புரை:—அந்த இம்மாம்ஸபிண்டமானதேஹமானது ஜீவனின் அபிமானத்தினல் விளங்குகின்றது. நாபிக்கு மேல்கண்டத்திற்குக் கீழ் எப்போதும் விஸ்தாரமாயுள்ளது யாதொன்று (மார்புளதோ) அதன் காம்போடுகூடியதும் தாமரைமொக்குப் போன்றதும்கீழ்முகமும் ஆகிய இருதயம் இருக்கின்றது. அதில் நுட்பமாயும் ஸர்வசிரேஷ்டமாயுமுள்ள தஹராகாசமென்ற அவகாசமொன்றிருக்கின்றது.

ஸ்லோகம்.

தஹராகாஶமித்யுக்தம் தத்ரஜீவோவதிஷ்டதே ॥ உரு.
வாலாக்ரஶதபாகஸ்ய ஶததாகல்பிதஸ்ய ச ।
பாகோஜீவஸ்ஸவிஜ்ஞேய ஸசாநந்த்யாயகல்பதே ॥

தஹராகாஸமித்யுக்தம் தத்ரஜீவோவதிஷ்டதே
வாலாக்ரசதபாகஸ்யசததாகல்பிதஸ்யச
பாகோஜீவஸ்ஸவிஜ்ஞேயஸ்ஸசாநந்த்யாயகல்பதே.

வியாக்யானம்:—தத்ர-அங்கு, ஜீவ: - ஜீவன் அவதிஷ்டதே- இருக்கின்றான், வாலாக்ரசதபாகஸ்ய-கேசமுனையின் நூறிலோர் பங்கின், சததா கல்பிதஸ்ய ச- நூறாகச்செய்யப்பட்ட, பாக: - பாகமானது, ஸ: - முற்கூறிய, ஜீவ: - ஜீவனென்று, விக்ஞேய: - அறியத்தக்கது, ஸ ச - அச்சீவனும், ஆநந்த்யாய - (அபரிச்சின்னத்தன்மைக்கு,) அந்தமின்மைக்கு, கல்பதே- தக்கவனாகின்றான்.

பொழிப்புரை:—அங்கு ஜீவன் இருக்கின்றான். கேசமுனையினை நூறாக்கிய அந்த பாகத்தையும் நூறாக்கினால் நிகழும்பாகமானது ஜீவனாம். அந்த ஜீவன் அந்தமுறாத்தன்மையயுடையோன் என்பதாம்.

ஸ்லோகம்.

கதம்பகுஸுமோத்பூத கேஸரா இவ ஸர்வத: । உசு.
ப்ரஸ்ருதா ஹ்ருதயாந்நாட்யோ யாபிர்வ்யாப்தம் ஶரீரகம் ॥

*கதம்பகுஸுமோத்பத்தகேஸரா இவஸர்வத:*
*ப்ரஸ்ருதாஹ்ருதயாந் நாட்யோ யாபிர்வ்யாப்தம் சரீரகம்*

வியாக்யானம்:—*கதம்பகுஸுமோத்பத்த கேஸரா: இவ* - கடப்பம் பூவினிலுள்ள கேஸரங்கள் போல, *ஹ்ருதயாத்*-ஹ்ருதயத்தினின்று, *நாட்ய:*-நாடிகள், *ஸர்வத:* - எங்கும், *ப்ரஸ்ருதா*-பரவியிருக்கின்றன. *யாபி:* - எந்தநாடிகளால், *சரீரகம்* -சரீரமானது, *வ்யாப்தம்* - வியாபிக்கப்பட்டுள்ளதோ.

பொழிப்புரை:—கடப்பம் பூவினிலுள்ள கேஸரங்கள் போல ஹ்ருதயத்தினின்று நாடிகள் எங்கும் பரவியிருக்கின்றன. எவைகளால் சரீரம் வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ.

ஸ்லோகம்.

𑌹𑌿𑌤𑌂 𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍇𑌨 𑌹𑌿𑌤𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃 । ௨௭
𑌦𑍍𑌵𑌾𑌸𑌪𑍍𑌤𑌤𑌿𑌸𑌹𑌸𑍍𑌰𑍈𑌸𑍍𑌤𑌾𑌃 𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌤𑌾 𑌯𑍋𑌗𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑍈𑌃 ॥

*ஹிதம்பலம்ப்ரயச்சந்திதஸ்மாத்தேநஹிதாஸ்ம்ருதா:*
*த்வாஸப்ததிஸஹஸ்ரைஸ்தாஸ்ஸங்க்யாதாயோகவித்தமை:*

வியாக்யானம்:—*யஸ்மாத்*-யாதொரு காரணத்தால், *ஹிதம்*-ஹிதமென்னப்படும். *பலம்* - பலத்தை, *ப்ரயச்சந்தி* - தருகின்றனவோ, *தேந* - ஆதலால், *ஹிதா:* - ஹிதங்கள், (என்று) *ஸம்ருதா:* - சொல்லப்பட்டன. *தா:*- அந்நாடிகள், *யோகவித்தமை:*-யோகமுணர்ந்த பெரியோர்களால், *த்வாஸப்ததி ஸஹஸ்ரை:* - எழுபத்திராயிரம் என்பதாக, *ஸங்க்யாதா:* - கணக்கிடப்பட்டுள்ளன.

பொழிப்புரை:—யாதொருகாரணத்தால், அந்நாடிகள், ஹிதமென்னப்படும் பலத்தைத்தருகின்றனவோ, அக்காரணத்தால், ஹிதா என்னப்பட்டுள்ளன. அந்நாடிகள், யோகமுணர்ந்தபெரியோர்களால், எழுபத்திராயிரமென்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளன.

ஸ்லோகம்.

𑌹𑍃𑌦𑌯𑌾𑌤𑍍𑌤𑌾𑌸𑍁 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾 𑌯𑌥𑌾𑌰𑍍𑌕𑌾𑌦𑍍𑌰𑌶𑍍𑌮𑌯𑌸𑍍𑌤𑌥𑌾 । ௨௮
𑌶𑍈𑌕𑍋𑌤𑍍𑌤𑌰𑌶𑌤𑌜𑍍𑌞𑌾𑌸𑍁 𑌸𑍁𑌵𑍍𑌯𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌿𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃 ॥

ஹ்ருதயாத்தாஸ்து நிஷ்க்ராந்தா யதார்க்காத்ரச்மயஸ்ததா
ஏகோத்தரசதம் தாஸ்துமுக்யாவிஷ்வக்விநிர்க்கதா:

வியாக்யானம்:—அர்க்காத்- சூரியனிடமிருந்து, ரச்மய-கிரணங்கள், யதா - எவ்வாறோ, ததா - அவ்வாறே, தா: - அந்த நாடிகள், ஹ்ருதயாத் - ஹ்ருதயத்தினின்றும், நிஷ்க்ராந்தா: - வெளிப்பட்டிருக்கின்றன, தாஸு - அந்நாடிகளுள், ஏகோத்தரசதம் - நூற்றொருநாடிகள், முக்யா: - முக்யங்களாய், விஷ்வக் - எங்கும், விநிர்க்கதா: - பரவியிருக்கின்றன.

பொழிப்புரை: — ஸூர்யனிடமிருந்து கிரணங்கள் எப்படியோ அப்படிஅந்த நாடிகள் ஹ்ருதயத்தினின்றும் வெளிப்பட்டிருக்கின்றன. அந்நாடிகளுள் நூற்றொரு நாடிகளே முக்கியங்களாய் எங்கும் பரவியிருக்கின்றன.

ஶ்லோகம்.

வஹந்த்யம்போயதாநத்யோ நாட்ய: கர்மபலம்ததா । உகூ.
அநந்தைகோர்த்வகா நாடீ மூர்த்தபர்யந்தமஞ்ஜஸா ॥

வஹந்த்யம்போயதாநத்யோ நாட்ய: கர்மபலம்ததா
அநந்தைகோர்த்வகாநாடீ மூர்த்தபர்யந்தமஞ்ஜஸா

வியாக்யானம்:—நத்ய: - நதிகள், யதா - எப்படி, அம்ப: - ஜலத்தை, வஹந்தி - வஹிக்கின்றனவோ, ததா-அப்படி, நாட்ய- நாடிகள், கர்மபலம் - கர்மபலத்தை வஹிக்கின்றது; அவைகளுள், அஞ்ஜஸா - நேராக, மூர்த்தபர்யந்தம் - சிரஸ்வரையில், ஊர்த்வகா - மேனோக்கிச் செல்லுகின்றதாயும், அநந்தா - அழிவற்ற பதத்தைத்தருவதாயும், ஏகா - ஓர் நாடியுள்ளது.

பொழிப்புரை—நதிகள்ஜலத்தை வஹிக்கின்றனபோல, நாடிகள், கர்மபலமாகிய ஸுகதுக்கங்களை வஹிக்கின்றன. அவைகளுள், கபாலம்வரையில் நேராகச்செல்லுகின்றதும், அனந்தமாகிய பதத்தை யடைவதற்குத் துவாரமாயுமுள்ள ஓர் நாடியுள்ளது.

ஶ்லோகம்.

த்வாஸப்ததிஸஹஸ்ராணி ப்ரதிநாடீஷு தைதிலா: । ௩௦.
நாட்ய: ஸம்ஸ்ருதிஹேதவ: ஸ்யுர்ஹ்ருதயே ஸம்யகாஸ்ரிதா: ॥

ப்ரதீந்த்ரியம்தசதசநிர்க்கதாவிஷயோந்முகா:
நாட்ய: ஸர்மாதிஹேதுத்வாத்ஸ்வப்நாதிபலபுக்தயே

வியாக்யானம்:—விஷயோந்முகா: - விஷயங்களை நோக்குகின்றனவாய், ப்ரதீந்த்ரியம்-ஒவ்வோரிந்திரியத்திலும், தசதச-பத்துப்பத்து, நாட்ய: - நாடிகள், நிர்க்கதா: - வெளிப்பட்டுச் செல்லுகின்றனவும், ஸுகதிஹேதுத்வாத் - ஸுகாதி ஹேதுவாய், ஸ்வப்நாதி பலபுக்தயே - ஸ்வப்னம்முதலிய பலத்தைப் புசிப்பதன்பொருட்டு உபயோகப்படுகின்றனவுமாயுள்ளன.

பொழிப்புரை—விஷயங்களை நோக்குகின்றனவாய் ஒவ்வோரிடத்திலும் பத்துப் பத்து நாடிகள் ஸம்பந்தம் பெற்றுள்ளனவும் ஸுகதுக்க ஹேதுவாய் ஸ்வப்பனம்முதலிய பயன்களைப் புசிப்பதற் குபயோகப்படுகின்றனவுமாயுள்ளன.

ஶ்லோகம்.

𑌸𑍁𑌷𑍁𑌮𑍍𑌨𑍇𑌤𑌿 𑌸𑌮𑌾𑌦𑌿𑌷𑍍𑌟𑌾 𑌤𑌯𑌾 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । ௩௧.
𑌤𑌯𑍋𑌪𑌚𑌿𑌤𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌂 𑌜𑍀𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌧𑌾𑌃 ॥

ஸுஷும்நேதிஸமாதிஷ்டாதயாகச்சந்விமுச்யதே
தயோபசிதசைதன்யம் ஜீவாத்மாநம்விதுர்புதா:

வியாக்யானம்:—யாதொன்று ஸுஷும்நா இதி -ஸுஷும்னை என்று, ஸமாதிஷ்டா - சொல்லப்பட்டதோ, தயா - அதன் வழியாய், கச்சந்-செல்லுகின்றவன்,விமுச்யதே-விமுக்தியடைகின்ருன். தயா - அந்த ஸுஷும்னையால் நிகழ்ந்த அப்பியாசத்தால், உபசிதசைதன்யம் - மேன்மைபெற்றுள்ளசைதன்யத்தையும்,ஜீவாத்மானம் - ஜீவான்மா என்றே, புதா:-வித்வான்கள், விதுঃ - அறிகின்றனர்.

பொழிப்புரை.—யாதொன்று ஸுஷும்னையென்று சொல்லப்பட்டதோ அதன்வழி வெளிப்படுவோன் கிரமமாய் முக்தியடைகின்ருன். அந்த ஸுஷும்னையில் செய்த ஸகுணோபாஸ்தியப்பியாஸத்தால் மேன்மைபெற்ற சைதன்யமும் ஜீவான்மா என்றே பெரியோர் அறிகின்றனர்.

ஶ்லோகம்.

𑌯𑌥𑌾 𑌰𑌾𑌹𑍁𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍋𑌽𑌪𑌿 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌣𑍍𑌡𑌲𑍇 । ௩௨.
𑌤𑌦𑍍𑌵𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑍋 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌲𑌿𑌙𑍍𑌗𑌦𑍇𑌹𑍇 𑌹𑌿 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 ॥

